# டால்டா வனஸ்பதி நீங்கள் செலவு செய்யும் பணத்திற்கு முழுப் பிரயோஜனத்தைத் தருகிறது



**ஆட்டத்தில் வெற்றிபெற எனக்குத் தேவையான சக்தியை டால்டா அளிக்கிறது...**

ஆட்டங்களில் வெற்றிபெறவேண்டியவர்கள் மட்டுந்தான் உடல் நலத்துடன் இருக்கவேண்டுமென்பதில்லை—நாம் எல்லோரும் ஆரோக்கியத்தையும், சக்தியையும் பெறவேண்டியது முக்கியம். டாக்டர்கள் அவர்களுக்கு தேவையென்று கூறும் சக்தியளிக்கும் கொழுப்பு உங்கள் குடும்பத்தினருக்குக் கிடைக்கின்றதா என்பதை நிச்சயப்படுத்திக்கொள்ளுங்கள். டால்டாவினால் சமையல் செய்யத்தவறாதீர்கள்.

**மாமிசம் சாப்பிடவேண்டியது அவசியமா?**
இலவச ஆலோசனைகளுக்கு இன்றே—அல்லது என்று வேண்டுமானாலும்—எழுதுங்கள்:
**தி டால்டா அட்வைஸரி ஸர்வீஸ்**
தபால் பெட்டி நெ. 353, பம்பாய் 1




# டால்டா

**உங்களை ஆரோக்கியமாக வைத்திருக்கும் சமையல்-கொழுப்பு**

HVM. 186-50 TM

# கல்கி
# பொருளடக்கம்

மலர் 12 | இதழ் 20 — 1952 டிசம்பர் 14 — நந்தன ஞு கார்த்திகை 29




மலர் 12 | இதழ் 20

தமிழ்த் திருநாடு தன்னைப் — பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா.
—பாரதியார்.

# சோழ நாட்டுக்கு நேர்ந்த சோதனை

இன்பமும் துன்பமும் 'சகடக்கால் போல வரும்' என்பது பெரியோர் வாக்கு. 'இன்ப மயமாகி நிற்பான்—துன்பமும் அவன் இழைப்பான்' என்று மகா சக்தியின் லீலைகளைக் குறித்துப் பாரதியார் பாடியிருக்கிறார்.

சென்ற வாரத்தில் தமிழ் நாட்டில் பல ஜில்லாக்களில் அமுதம் போன்ற அருள் மழை பெய்தது. கொடும் பஞ்சத்தால் கஷ்டப்பட்டுக் கொண்டிருந்த பல லட்சம் மக்கள் மனங் களித்தார்கள். வாடியிருந்த பயிர் பச்சைகளும் காய்ந்துபோன புல் பூண்டுகளும் தளிர்த்தன. வடாற்காடு, செங்கற்பட்டு, தென்னாற்காடு ஜில்லாக்களில் வருஷக்கணக்காக வறண்டு கிடந்த ஏரிகளில் தண்ணீர் ததும்பிக் கொண்டிருக்கிறது.

அத்தகைய வான மழையைத் தமிழ் நாட்டின் ஒரு பகுதிக்குக் கொண்டு வந்த புயல் காற்றானது சோழவள நாட்டைப் பெருஞ் சோதனைக்கு உள்ளாக்கி விட்டது.

"காவேரிப் பட்டினத்தைக் கடல் கொண்டு போயிற்று" என்ற கதையை நம்பாதவர்கள் எல்லாம் நம்பும்படி செய்யுமாறு, வங்கக் கடல் கொந்தளித்து எழுந்து சோழ மண்டலக் கடற்கரையோரமாக உள்ள கிராமங்களிலும் பட்டினங்களிலும் விநாசத்தை உண்டாக்கிற்று.

சோழ நாட்டில் பிரயாணம் செய்யும்போது கண்ணுக்குக் குளிர்ச்சியாகக் காட்சியளிக்கும் பசுமையான வாழைத் தோட்டங்களையும் தென்னந் தோப்புகளையும் கண்டு மனங் களியாதவர் யார்? சோழ நாட்டின் அந்தத் தனிச் சிறப்பை அழித்து விடக் கங்கணங் கட்டிக்கொண்டு சூறாவளிக் காற்று சூறையாடியது. லட்சக்கணக்கான வாழை மரங்களும் தென்னை மரங்களும் சாய்ந்து அழிந்தன.

ஆயிரக்கணக்கான வேறு மரங்களும் வேரோடு பெயர்ந்து விழுந்தன.

கரும்புத் தோட்டங்களும் வெற்றிலைக் கொடிக்கால்களும் நாசமாயின.

ஆயிரமாயிரம் வீடுகளும் குடிசைகளும் சேதமாயின.

இப்படியெல்லாம் நாசம் விளைத்த கொடும் புயற் காற்று சுமார் முந்நூறுக்கு மேற்பட்ட மனித உயிர்களையும் கொள்ளை கொண்டு சென்றது.

சொத்து நஷ்டமோ கோடிக் கணக்கில் வரும் என்று தெரிய வருகிறது.

சோழ நாட்டுக்கு நேர்ந்துள்ள இந்தப் பயங்கர சோதனையைக் குறித்துத் தமிழ் மக்கள் அனைவரும் அநுதாபப் படுவார்கள்.

புயலினால் கஷ்ட நஷ்டங்களை அடைந்தவர்களுக்கு விரைந்து உதவி செய்யப் பலரும் முன் வருவார்கள்.

சென்னை சர்க்காரும் இந்திய சர்க்காரும் தங்களுடைய கடமையைச் செய்வார்கள் என்று நிச்சயமாக எதிர்பார்க்கலாம்.

தஞ்சை - திருச்சி ஜில்லா அதிகாரிகள் பணச் செலவைப் பற்றிக் கவலைப் படாமல் கஷ்ட நிவாரண வேலையில் கவனம் செலுத்த வேண்டும் என்று சென்னை சர்க்கார் கட்டளை பிறப்பித்திருக்கிறார்கள்.

ராஜாஜி நேரில் தஞ்சை ஜில்லாவுக்குச் சென்று சுற்றுப் பிரயாணம் செய்து புயலினால் நேர்ந்த கஷ்ட நஷ்டங்களை அறிந்து பரிகாரம் செய்யத் திட்டமிட்டிருக்கிறார். இதன் பொருட்டு மலையாள ஜில்லாச் சுற்றுப் பிரயாணத்தையும் ரத்து செய்திருக்கிறார்.

எனினும், சோழ நாட்டு மக்கள் இக்கடுஞ் சோதனையில் தேறி வெளிவருவது பெரும்பாலும் அவர்களுடைய சொந்த மனோ தைரியத்தையும் பரஸ்பர உதவியையுமே பொறுத்திருக்கிறது.

இயற்கையின் விபரீதங்களுக்கு உள்ளாகிற மக்கள் மனோதிடத்தை இழக்காமல் வாழ்க்கையின் புனர் நிர்மாணத்துக்கு ஊக்கத்துடன் பாடுபட்டால், அதிசீக்கிரத்தில் முன்னைவிட நல்ல நிலைமைக்கு வருவதை உலகமெங்கும் கண்கூடாகப் பார்க்கிறோம்.

ஜப்பானில் அடிக்கடி நேரும் பூகம்பத்தினால் ஏற்படும் சேதங்கள் சொல்லத் தரமல்ல. ஆயினும் ஜப்பானிய மக்கள் மனோதிடத்தை இழப்பதில்லை. இயற்கை விபத்துக்களுடன் போராடி அதிவிரைவில் முன்னைக் காட்டிலும் செழிப்பை அடைகிறார்கள்.

அமெரிக்காவில் மிஸிஸிபி - மிஸ்ஸோரி நதிகளில் அடிக்கடி பெரு வெள்ளம் வந்து பெரிய நகரங்களையே அழித்து விடுகின்றது. ஆயினும் அழிந்த நகரங்களுக்கு அருகாமையில் முன்னைக் காட்டிலும் சிறந்த நகரங்கள் எழுந்து விடுகின்றன.

கடுமையான சோதனைகளுக்கு உள்ளாகிறவர்கள் அச்சோதனைகளைச் சமாளிக்கும் போதே புதிய பலம் பெறுகிறார்கள். அந்தப் புதிய பலத்தைக் கொண்டு முன்னைக் காட்டிலும் சிறந்த வளமான வாழ்க்கையைப் பெறுகிறார்கள்.

சோழ நாட்டு மக்களும் இந்த இயற்கை விபத்தினால் ஏற்பட்ட கஷ்ட நஷ்டங்களுடன் திடங்கொண்டு போராடி முன்னைக் காட்டிலும் நல் வாழ்வும் பல்வளமும் பெறுவார்கள்.

அழிந்து போன வாழைத் தோட்டங்களின் அடிக் கன்றுகள் தழைத்து ஓங்கிச் சில மாத காலத்தில் பழையபடியே பசுமையான காட்சி அளிக்கப் போகின்றன.

விழுந்துபோன பழைய தென்னை மரங்களுக்குப் பதிலாக, மூன்று நான்கு ஆண்டுகளில் வளர்ந்து பலன் தரக்கூடிய புதிய தென்னை மரங்கள் பச்சென்று தழைத்து வளர்வதைக் காண்போம்.

பாழடைந்த வெற்றிலைக் கொடிக்கால்களிலும் கரும்புத் தோட்டங்களிலும் மூன்று போகம் நெற்பயிர் விளைந்து, நல்ல விலைக்கு விற்று, பழைய நஷ்டத்துக்கெல்லாம் ஈடு செய்வதையும் பார்க்கப் போகிறோம்.

இந்த நல் விளைவுகள் எல்லாம் ஏற்படுவதற்கு அடிப்படையாக அமைய வேண்டியவை, மக்களின் மனோதிடமும் ஊக்கமும் உள்வலியும் சலிப்பில்லாத உழைப்புமே யாகும்.

"மதியுண்டு செல்வங்கள் சேர்க்கும் - தெய்வ
வலியுண்டு தீமையைப் போக்கும்
விதியுண்டு: தொழிலுக்கு விளைவுண்டு: -
குறைவில்லை
விசனப் பொய்க்கடலுக்குக் குமரன் கைக்கணை
உண்டு
ஜயமுண்டு பயமில்லை மனமே!"

என்ற மகாகவியின் மந்திர மொழிகளைச் சோழ நாட்டு மக்களுக்கு நினைவூட்டுகிறோம்.

## "கரகோஷத்துடன் நிறைவேறியது"

காங்கிரஸ் எம். எல். ஏக்கள் ஆதரித்தார்கள். பிரஜா கட்சியார் ஆசி கூறினார்கள். கம்யூனிஸ்டுகள் 'சரி சரி' என்றார்கள். கே. எல். பி. 'ஆமாம்' என்றார்கள். உழைப்பாளிக் கட்சியினர் 'சம்மதம்' என்றார்கள். சுயேச்சை வாதிகள் 'கேட்பானேன்!' என்றார்கள். காமன்வீல் கட்சியார் 'ரொம்ப சம்மதம்' என்றார்கள். சோஷலிஸ்டுகள் 'மேற்படி மேற்படி' என்றார்கள்.

இவ்வாறாக, சென்னைச் சட்டசபையில் உள்ள பலதரப்பட்ட கட்சியினர், கட்சியே யில்லாதவர்கள், ஒருவரை யொருவர் 'விழுங்கி விடலாமா!' என்று துவேஷம் கொண்டிருப்பவர்கள், பரஸ்பரத் தாக்குதலுக்குச் சமயம் பார்த்துக் கொண்டிருப்பவர்கள், மந்திரிகளாயுள்ளவர்கள், மந்திரி சபையை ஆதரிப்பவர்கள், மந்திரி பதவிக்கு ஏங்கிக் கொண்டிருப்பவர்கள்,—இவ்வளவு பேரும் ஏகமனதாக ஒரு மசோதாவை ஆதரித்தார்கள்.

சபாநாயகர் ஸ்ரீ சிவசண்முகம் பிள்ளை ஒரு தடவைக்கு மூன்று தடவையாக "எதிர்ப்பு உண்டா!" என்று கேட்டார். "இல்லை இல்லை" என்று பதில் வந்தது.

பின்னர், அந்த அதிசயமான மசோதா சட்டசபையில் நிறைவேறியது. இவ்வளவு பலபட்டரைக் கோஷ்டிகளும் எதிர்ப்புக் கட்சிகளும் நிறைந்த சென்னைச் சட்டசபையில் ஏகமனதாக நிறைவேறியது அது 'மட்டு மல்ல; 'கர கோஷ ஆரவாரத்துடன்' நிறைவேறியது !!!

அதிசயம்! அதிசயம்!!

1952-ம் வருஷத்து அதிசயங்களிலெல்லாம் மாபெரும் அதிசயம் என்று இதை யல்லவா சொல்ல வேண்டும்!!!

* * *

இவ்விதம் ஏகமனதாக நிறைவேறிச் சட்டமும் ஆகிவிட்ட தஞ்சை விவசாயிகள் - பண்ணையாட்கள் பாதுகாப்பு மசோதாவைச் சென்னைச் சட்டசபையில் பிரேரேபணை செய்த பெருமையும் பாக்கியமும் நம் ஸிவில்ஸப்ளை மந்திரி ஸ்ரீ மாணிக்கவேலு நாயக்கர் அவர்களுக்குக் கிடைத்தது.

டாக்டர் யு. கிருஷ்ணராவைக் காட்டிலும்கூட ஸ்ரீ மாணிக்கவேலு நாயக்கர் அதிக அதிர்ஷ்டக்காரர் என்று சொல்ல வேண்டும். இந்தச் சட்டசபைக் கூட்டத்தின் தொடக்கத்தில் டாக்டர் கிருஷ்ணராவ் கைத்தறியாளருக்கு உதவி செய்வது சம்பந்தமான ஒரு தீர்மானத்தைக் கொண்டு வந்தார்; அது ஏகமனதாக நிறைவேறியது. ஆகையால் அவரை 'அதிர்ஷ்டக்காரர்' என்றோம்.

பிறகு, ஸ்ரீ மாணிக்கவேலு நாயக்கர் பெரும் விவாதத்துக்கிடமான, நிலப் பிரச்னை சம்பந்தமான, ஒரு மிக முக்கியமான மசோதாவைக் கொண்டுவந்து, அதை இந்தப் பல கட்சிகளடங்கிய சட்டசபையில் ஏகமனதாக நிறைவேறும்படி செய்து சட்டம் ஆக்கியிருக்கிறார். ஆகையால் அவரை இரட்டிப்பு அதிர்ஷ்டக்காரர் என்றே சொல்ல வேண்டும் அல்லவா!

ஸ்ரீ மாணிக்கவேலு நாயக்கர் வன்னிய குல க்ஷத்திரிய சமூகத்தைச் சேர்ந்தவர். இச்சமூகத்தைச் சேர்ந்த யாரும் இதுவரை சென்னை மாகாணத்தில் மந்திரி பதவி வகித்ததில்லை. வன்னியகுல க்ஷத்திரிய சமூகத்திற்கு அது ஒரு பெரும் குறையாக இருந்து வந்தது. அச்சமூகத்தில் அரசியல் விழிப்பு அடைந்தவர்களின் மனத்தில் உறுத்திக் கொண்டிருந்த விஷயமாகவும் இருந்து வந்தது

கடைசியில், இந்த ராஜாஜி மந்திரி சபையில் அச்சமூகத்தில் ஒருவருக்கு முதன் முதலாக மந்திரி யாகும் பேறு கிடைத்தது. அப்படி முதன் முதல் மந்திரி பதவிக்கு வந்த ஒரு பெரும் சமூகத்தைச் சேர்ந்த ஸ்ரீ மாணிக்கவேலு நாயக்கர் அவர்கள், இவ்வளவு முக்கியமான, தேச நலனுக்கு உகந்த, விவசாயப் பாதுகாப்பு மசோதாவைக் கொண்டு வந்து நிறைவேற்றிச் சட்டமாக்கி யிருக்கிறார். அத்தகைய அதிர்ஷ்டக்காரரின் படத்தை இந்த இதழ் அட்டையில் வெளியிட்டிருக்கிறோம்.

* * *

காமன்வீல் கட்சியின் சார்பாக நின்று சட்டசபைக்கு வந்த ஸ்ரீ மாணிக்கவேலு நாயக்கர் ராஜாஜி மந்திரி சபையில் சேரத் தீர்மானித்த

போது, காங்கிரஸுக்கு விரோதமான மற்றக் கட்சியார் அவரை மூர்க்கமாகத் தாக்கினார்கள்; வசைமாரி பொழிந்தார்கள்; 'துரோகி' என்று கூட அர்த்தமில்லாமல் அலறினார்கள்.

அதற்கெல்லாம் ஸ்ரீ மாணிக்கவேலு நாயக்கர் சிறிதும் அசைந்து கொடுக்கவில்லை.

"பொது நலத் தொண்டு செய்வதற்காக நான் சட்டசபைக்கு வந்தேன். பொதுநலத் தொண்டு செய்வதற்கு இதைக் காட்டிலும் நல்ல சந்தர்ப்பம் எனக்குக் கிடைக்கப் போவதில்லை" என்று எதிர்ப்பாளருக்குப் பதில் கூறினார்.

அது எவ்வளவு உண்மை என்பது இப்போது நிதரிசனமாகி விட்டது.

தஞ்சை விவசாயச் சட்டத்தை இச்சென்னை மாகாணம் முழுவதற்கும் விஸ்தரிக்க வேண்டும் என்று சட்டசபையில் பலரும் கோரினார்கள். அது எவ்வளவு முக்கியமான சட்டம், எவ்வளவு பொது நன்மைக்குகந்த சட்டம் என்பதற்கு வேறு அத்தாட்சியே வேண்டியதில்லை.

தஞ்சை ஜில்லாவில் இச்சட்டம் அமுல் நடக்கும் விதத்தைப் பார்த்துக் கொண்டு, அந்த அநுபவத்தின்பேரில், குற்றம் குறைகள் சற்றுமில்லாத விவசாயச் சீரமைப்பு மசோதா ஒன்றை இச்சென்னை மாகாணம் முழுவதற்கும் பொருத்தமாகும் முறையில் தயாரிக்க வேண்டியது அவசியமே யாகும். ஸ்ரீ மாணிக்கவேலு நாயக்கர் சென்னை அரசாங்க ரிவின்யு மந்திரியா யிருக்கும் காலத்திலேயே அத்தகைய மாகாணப் பொதுவான ஒரு மசோதாவைக் கொண்டுவந்து சட்டமாக்கி வைப்பார் என்று எதிர்பார்க்கிறோம்.

## பிள்ளைகளைத் தூண்டிவிடும் பேதைமை

நாளது மாதம் 5௳ யன்று சின்னஞ் சிறு பிள்ளைகள் சிலர் சேர்ந்து கொண்டு வீதி வீதியாகக் கூச்சல் போட்டுக் கொண்டு போனார்கள். "ஸெலக்ஷன் பரீட்சை ஒழிக" என்று கூச்சலிட்டார்கள். பள்ளிக்கூடங்களுக்கு முன்னால் நின்று கத்தினார்கள். கூச்சல் போட்டவர்களில் முக்கியமானவர்கள் ஹைஸ்கூலில் படிக்கும் பதினைந்து, பதினாறு வயதுக் குட்பட்ட பிள்ளைகள். கலகமும் குழப்பமும் எங்கே என்று காத்துக் கொண்டிருக்கும் மீசை முளைத்த ஆண்பிள்ளைகள் சிலரும் கூட்டத்தில் கலந்திருந்தார்கள்.

இவர்களைத் தூண்டிவிட்ட தலைவர் சிகாமணிகள் பின்னால் மறைந்து நின்று "என்ன நடக்கப் போகிறதோ!" என்று ஆவலோடு பார்த்துக் கொண்டிருந்தார்கள்.

என்ன நடந்தது! என்ன நடக்கக் கூடும்! ஒன்றுமே இல்லை.

பூகம்பம் ஏற்பட்டு விடவில்லை. பூமி தலை கீழாகி விடவில்லை. ஸெலக்ஷன் பரீட்சையும் ஒழிந்து போய் விடவில்லை.

பள்ளிக்கூடங்கள் எல்லாம் பெரும்பாலும் ஒழுங்காக நடந்தன. நூற்றுக்கு 90 பிள்ளைகள் வகுப்புகளுக்குச் சென்று படித்தார்கள்.

கூச்சல் ஊர்வலத்தில் சேர்ந்த பிள்ளைகள் மிகச் சிலரேயாவர். அவர்களும் நேரமாக ஆக அலுப்படைந்து, தாங்கள் தலையிட்ட காரியத்திற்காக வெட்கப்பட்டு, சீக்கிரமாகத் திரும்பி வீடு போய்ச் சேர்ந்தார்கள்.

விவரமறியாத சின்னஞ் சிறு பிள்ளைகளைத் தூண்டிவிட்டு, அப் பிள்ளைகளுக்குத் தீங்கு விளைக்கக் கூடிய இத்தகைய கிளர்ச்சிகளை நடத்துவோரின் பேதைமை இரங்கத் தக்கதாகும்.

* * *

தற்சமயம் நம் நாட்டுக் கல்வி ஸ்தாபனங்களில் வழங்கி வரும் பரீட்சை முறையை நாம் சிறிதும் விரும்பவில்லை.

பெரிய பெரிய மேதாவிகளும் அறிவாளிகளும் நம் பரீட்சை முறையினால் உள்ள கேடுகளை எடுத்துக் காட்டிக் கண்டித்திருக்கிறார்கள்.

பரீட்சை முறை ஒழிய வேண்டுமானால் அதற்கு நம் கல்வி முறையையே மாற்றி அமைத்தாக வேண்டும். கல்வி முறையை அப்படியே வைத்துக் கொண்டு பரீட்சையை மட்டும் ஒழிக்க முடியாது.

கல்விச் சீர்திருத்தம் பற்றிச் சென்ற மூப்பது ஆண்டுகளாகப் பேச்சு நடந்து வருகிறது. ஆனால் காரியத்தில் உருப்படியாக ஒன்றும் நடக்கவில்லை. பாரத நாட்டில் சுதந்திர அரசாங்கம் ஏற்பட்ட பிறகு மற்றும் பல துறைகளில் சீர்திருத்தமும் அபிவிருத்தியும் ஏற்பட்டிருக்கின்றன. ஆனால் கல்வி முறை மட்டும் அப்படியே அசைந்து கொடுக்காமல் இருந்து வருகிறது. அதைச் சீர்திருத்தி அமைப்பதற்குச் செய்த சிற்சில முயற்சிகளும் தோல்வியே அடைந்திருக்கின்றன.

பிரிட்டிஷார் இந்திய சாம்ராஜ்யத்தை விட்டு விட்டுப் போய் விட்டார்கள். ஆனால் அவர்கள் அமைத்த கல்வி முறை மட்டும் நன்றாக வேரூன்றி நிலைத்து நின்று வருகிறது.

இதற்குக் காரணம் என்னவென்பதை நாம் சுலபமாக ஊகிக்கலாம். தற்போது நம் கல்வி ஸ்தாபனங்களை நடத்தும் ஆசிரியர்களும் பேராசிரியர்களும், பிரின்ஸ்பால்களும், ஹெட்மாஸ்டர்களும், கல்வி இலாகா அதிகாரிகளும், யுனிவர்ஸிட்டி நிர்வாகிகளும், வைஸ் சான்ஸலர்களும், ஸிண்டிகேட் ஸெனட் அங்கத்தினர்களும்,—மற்றும் கல்வித் துறையில் சம்பந்தமுள்ள அத்தனை பேரும், பழைய கல்வி முறையின் மூலம் பயிற்சி பெற்று வந்தவர்கள்.

"இந்தக் கல்வி முறையின் மூலமாகத்தானே நாம் இவ்வளவு மேதாவிகள் ஆகித் திகழ்ந்துவருகிறோம்! எதற்காக இதை மாற்ற வேண்டும்!" என்று அவர்கள் கருதுகிறார்கள்.

அவ்வப்போது அவர்களில் சிலர் முன் வந்து "கல்வி முறையில் சீர் திருத்தம் செய்கிறோம்" என்கிறார்கள். அந்தச் சீர் திருத்தம், பழைய கல்வி முறையை இன்னும் சிறிது கேடாகச் செய்வதாகவே முடிகிறது.

பழைய கல்வி முறையில் மிக முக்கியமான அம்சம் பரீட்சை. பழைய கல்வி முறையில் உள்ள கேடுகளுக் கெல்லாம் பரீட்சை என்பது ஒரு சின்னம். ஆகையால் பரீட்சை முறை மாறவேண்டும் என்றால் கல்வி முறையே அடியோடு மாறியாக வேண்டும்.

அத்தகைய மாறுதல் எப்போது நடக்கப் போகிறதோ, எந்தப் புண்ணிய புருஷரால் நடக்கப் போகிறதோ, நமக்குத் தெரியாது.

* * *

பொதுவாகப் பரீட்சை முறையை நாம் ஆட்சேபிக்கிறோம் என்றால், எஸ். எஸ். எல். ஸி. பரீட்சைக்கு முன்னால் 'ஸெலக்ஷன் பரீட்சை' என்று ஒரு குட்டிப் பரீட்சை நடத்துகிறார்களே, அதை

அடியோடு ஆட்சேபிக்கிறோம். அத்தகைய வடி கட்டும் பரீட்சை ஒன்று முற்றும் அநாவசியம் என்பதில் நமக்குச் சிறிதும் சந்தேகமில்லை.

தகுதி யில்லாத சில மாணவர்களையும் வருஷ பரீட்சைக்கு அனுப்பி விடுவதினால் மோசம் ஒன் றும் நேர்ந்துவிடாது என்று கருதுகிறோம். பரீட் சையில் அவர்கள் தேறவிட்டால், அது அவர்க ளுடைய பாடு. அவர்களைப் பரீட்சைக்கே அனுப் பாமல் நிறுத்திவிட்ட பழியை ஆசிரியர்கள் எதற் காகச் சுமக்க வேண்டும்!—என்பது நம் கருத்து.

ஆனால் "அந்தப் பழியைச் சுமக்கத்தான் சுமப் போம்" என்று இம் மாகாணத்திலுள்ள ஆசிரி யர்கள், தலைமை ஆசிரியர்கள், அனைவரும் ஒரு முகமாகச் சொல்கிறார்கள். கல்வி இலாகாவில் உள்ளவர்கள் அனைவரும் சேர்ந்து அதே பல்லவி யைப் பாடுகிறார்கள்.

"ஸெலக்ஷன் பரீட்சை இல்லாவிட்டால் பிள்ளைகள் சரியாகப் படிக்கவே மாட்டார்கள். குட்டிச்சுவராய்ப் போய் விடுவார்கள். வகுப்பு களில் கட்டுப்பாடு (டிஸிப்ளின்) தொலைந்து போய்விடும். அதன் விளைவுகளுக்கு நாங்கள் பொறுப்பாளிகள் அல்ல" என்று ஆசிரியர் கூட் டம் ஏகமனதாக வற்புறுத்துகிறது.

கல்வித் துறையில் எந்தச் சீர்திருத்தம் செய்வதா யிருந்தாலும், ஆசிரியர்களுடைய ஒத்துழைப்பு இல்லாமல் செய்ய முடியாது.

ஆசிரியர் சமூகம் ஒரு முகமாகச் சொல்லும் அபிப்பிராயத்தைப் புறக்கணித்து விட்டுக் கல்வி ஸ்தாபனங்களை நடத்த முடியாது.

அரசியல் வாதிகளும் அரசாங்கத்தை நடத்து வோரும் கல்வித் துறையில் சீர்திருத்தம் செய்ய வேண்டுமென்று விரும்பினால், முதலில் ஆசிரியர் கூட்டத்தின் முக்கால் வாசி சம்மதத்தையாவது பெற வேண்டும். உடனே பெற முடியாவிட்டால், அதற்காகப் பொறுமையுடன் வேலை செய்ய வேண்டும். ஆசிரியர் கூட்டம் பிடிவாதமாக எதிர்க்கும் எந்தச் சீர்திருத்தத்தையாவது நிர்ப் பந்தமாகத் திணித்தால், பலன் நாம் எதிர்பார்ப்ப தற்கு நேர் விரோதமாகப் போய்விடும்.

* * *

இரண்டு வருஷங்களுக்கு முன்பு சென்னை அரசாங்கத்தார் எஸ். எஸ். எல். ஸி. பரீட்சைக்கு முன்னால் 'ஸெலக்ஷன் பரீட்சை' என்று சொல்லப்படும் வடி கட்டும் பரீட்சை ஒன்று அவசியமில்லை என்று உத்தரவு போட்டார்கள். ஆறாவது பாரத்தில் படிக்கும் எல்லாப் பிள்ளை களையும் பொதுப் பரீட்சைக்கு அனுப்பி விடும் படி சொன்னார்கள்.

அந்த உத்தரவு போட்டது முதல் பள்ளிக் கூடங்கள் எல்லாம் சீர்குலைந்து வருகின்றன என்று ஆசிரியர் சமூகம் சொல்லுகிறது.

அரசியல் வாதிகளும், அரசாங்க நிர்வாகிகளும், பத்திரிகைக்காரர்களும், பொது மக்களில் பெரும் பாலோரும் கூட ஒரு விஷயத்தில் திடமான அபிப் பிராயம் உடையவர்களாயிருக்கலாம். அந்தஅபிப் பிராயத்தை வற்புறுத்திப் பிரசாரமும் கிளர்ச் சியும் செய்யலாம். ஆனால் பள்ளிக் கூடங்களை நடத்தும் பொறுப்பு வாய்ந்த ஆசிரியர்கள் ஒப்புக் கொண்டாலொழிய அந்த அபிப்பிராயத்தைக் கட்டாயப்படுத்தி அமுலுக்குக் கொண்டு வர முடியாது.

ஆசிரியர்களின் ஒரு முகமான கோரிக்கை 'ஸெலக்ஷன் பரீட்சை வேண்டும்' என்பதாக

## அபயமளியுங்கள்!




சோழநாட்டில் அடித்த கொடிய புயற் காற்றினால் வீடு வாசல்களை இழந்து தவிக்கும் மக்களுக்குத் தாராளமாக உதவி புரியுமாறு ராஜாஜி வேண்டுகோள் விடுத்திருக்கிறார்.

# உண்மை வெளியாகிறது!




ஆந்திர கேசரி ஸ்ரீ பிரகாசமும், ஐக்கிய ஜனநாயக முன்னணிக் கட்சியைச் சேர்ந்தவர்களும் பிரிந்த பிறகு, ஒருவரை யொருவர் தாக்கிக் கொண்டிருக்கிறார்கள்.

---

இருப்பதை முன்னிட்டுப் புதிய கல்வி மந்திரி டாக்டர் எம் வி. கிருஷ்ண ராவ் போன சனியனுகிய ஸெலக்ஷன் பரீட்சையை மறுபடியும் கொண்டுவரச் சம்மதித்தார். சனியனுடைய சக்தியைக் கட்டுக்குள் வைத்து, ஸெலக்ஷன் பரீட்சையை அவ்வளவு கண்டிப்பாகச் செய்யாமல் நடத்தும்படி சொல்லி யிருக்கிறார்.

டாக்டர் எம். வி. கிருஷ்ணராவ் அடிக்கடி கொடுக்கும் விளக்கங்களிலிருந்தே அவருடைய மனதில் இது விஷயமாக அவ்வளவு தெளிவு ஏற்பட வில்லை என்று தெரிய வருகிறது. ஆசிரியர்களுடைய ஒரு முகமான கோரிக்கையை முன்னிட்டே ஸெலக்ஷன் பரீட்சையைத் திரும்பக் கொண்டு வந்திருக்கிறார் என்று ஸ்பஷ்டமாகத் தெரிய வருகிறது.

வடி. கட்டும் பரீட்சை முன்னைப்போல் அவ்வளவு கண்டிப்பாக இராதென்றும், எழுத்துப் பரீட்சைதான் வேண்டு மென்று வைத்துக் கொள்ளாமல் வாய் மொழியாகவும் பரீட்சை நடத்தலாம் என்றும், மிகக் குறைந்த மார்க்கு வாங்குகிற பிள்ளைகள்தான் நிறுத்தப்படுவார்கள் என்றும் கல்வி மந்திரி விளக்கம் கூறி யிருக்கிறார்.

மொத்தத்தில், மிகப் பெரும்பாலான ஆசிரியர் கூட்டத்தின் அபிப்பிராயத்தைப் புறக்கணிக்கக் கூடாது என்று கருதியே சமரச ஏற்பாடாக ஸெலக்ஷன் பரீக்ஷை அவ்வளவு கண்டிப்பில்லாத முறையில் நடத்த அனுமதிக்கப்பட்டிருக்கிறது.

* * *

கல்விச் சீர்திருத்தம் என்பது மிகச் சிக்கலான விஷயம்; மிக முக்கியமான விஷயம்; சிறந்த அறிவாளிகளுக்குள்ளேயே நிரம்ப அபிப்பிராய பேதம் ஏற்படக் கூடிய காரியம்.

கல்வி முறையில் எந்தச் சீர்திருத்தம் சொன்னலும் அதை அநேகமாக வைஸ்சான்ஸலர் டாக்டர் லக்ஷ்மணசாமி முதலியார் மூர்த்தண்யமாக எதிர்ப்பது வழக்கமாயிருந்து வருகிறது.

உதாரணமாக, தேசத்தில் வைத்திய வசதி மிகக் குறைவாயிருப்பதை முன்னிட்டு, மூன்று வருஷ வைத்தியப் படிப்பு முறை ஒன்றை ஏற்படுத்தலா மென்று முதன் மந்திரி ராஜாஜி கூறினர். அதைப் பலரும் ஆமோதித்தார்கள். ஆனால் டாக்டர் லக்ஷ்மணசாமி முதலியார், "கூடவே கூடாது; குடி முழுகிப் போய்விடும்" என்றார்.

"கலாசாலைகளில் இடமில்லாததை முன்னிட்டு இரண்டு 'ஷிப்ட்' வகுப்புகள் நடத்தலாம்" என்றால், அதையும் வைஸ் சான்ஸலர் லட்சுமணசாமி முதலியார் தீவிரமாக எதிர்க்கிறார்.

"வீட்டிலே படித்துக் கொண்டு வந்து பரீட்சை எழுதுவதற்கு அனுமதியுங்கள்" என்றால், அதுவும் கூடவே கூடாது என்கிறார்.

டாக்டர் லக்ஷ்மணசாமி முதலியார் நமது நாட்டின் சிறந்த அறிவாளிகளில் ஒருவர். அவருடைய அபிப்பிராயத்தை அடியோடு புறக்கணித்து விட்டுக் காரியம் நடத்த முடியுமா! வாதப் பிரதிவாதங்களின் மூலம் நிலைமை நன்கு தெளிவடைவதற்கு அவகாசம் அளிக்கத்தான் வேண்டும்.

* * *

மொத்தத்தில் கல்வி முறையில் சீர்திருத்தம் மிகவும் சிக்கலான விஷயம். வயது முதிர்ந்த பெரியவர்களும் அறிவாளிகளும் கல்விமான்களும் ஆராய்ந்து முடிவு செய்ய வேண்டிய காரியம். அத்தகைய காரியத்துக்கு, சின்னஞ் சிறு பிள்ளைகளை ஏவிவிட்டுக் கிளர்ச்சி செய்யப் பண்ணுவதும் கூச்சல் போடச் சொல்வதும் மிகக் கேடானவை. நாட்டுக்கும் அதில் நன்மை இல்லை; கல்வி முறைக்கும் நன்மை இல்லை. சின்னஞ் சிறு பிள்ளைகளைக் கெடுத்துக் குட்டிச்சுவராக்குவதற்கு மட்டுமே இத்தகைய கிளர்ச்சிகள் சாதனமாகும்.

# ஸ்ரீ ராஜாஜியின் பிறந்த நாள்

டிசம்பர் மாதம் 8-ந் தேதி ராஜாஜியின் ஜன்ம தினத்தைச் சிறப்பாகக் கொண்டாட வேண்டுமென்று சென்னையில் ராஜாஜி பக்தர்கள் சிலர் ஏற்பாடு செய்யத் தொடங்கினார்கள். இச்செய்தியை அறிந்த ராஜாஜி அப்படி எதுவும் செய்ய வேண்டாம் என்று கண்டிப்பாகத் தடை உத்தரவு போட்டு விட்டார். "என்னுடைய பிறந்த நாளைப்பற்றி எந்தவிதமான விளம்பரமும் செய்யாமலிருந்தால், அதுவே எனக்குப் பெரும் உதவி செய்தபடியாயிருக்கும்" என்று எழுதியும் அனுப்பினார். அதன்பேரில் மேற்படி யோசனை கைவிடப்பட்டது.

ஆனாலும் ஆங்காங்கு சிலர் விளம்பரப் படுத்தாமல் அடக்கமான முறையில் ராஜாஜி ஜயந்தியைக் கொண்டாடத்தான் செய்தார்கள். சென்னை, முத்தியாலுப் பேட்டை, யுவர் காங்கிரஸ் (Youth Congress) அங்கத்தினர் ஒரு தனிப்பட்ட விசேஷ முறையில் ராஜாஜி ஜயந்தியைக் கொண்டாடினார்கள். பஞ்சப் பிரதேசத்தில் ஏழை மக்கள் தினம் வந்து கஞ்சி வாங்கிச் சாப்பிடும் கிராமம் ஒன்றில், அன்று எல்லாருக்கும் அரிசிச் சாப்பாடு போடுவதென்று திட்டம் வகுத்தார்கள். இதற்காக, நூற்றுப் பத்து படி அரிசியும் அதற்கு வேண்டிய பருப்பு, உப்பு, புளி, மிளகாய், கறிகாய் சாமான்களும் சேகரித்துக் கொண்டு, வாலாஜாவுக்கு அருகில், அன்னதான சிவன் சங்கத்தார் பஞ்ச நிவாரணத் தொண்டு செய்யும் செங்காடு கிராமத்துக்குப் போனார்கள். ஆண்கள், பெண்கள், குழந்தைகள் உள்ளிட்ட சுமார் ஆயிரம் பேருக்கு வயிறாரச் சாப்பாடு போட்டார்கள்.

இத்தொண்டர்கள் செங்காடு போகும்போது வழியெங்கும் தூற்றல் போட்டுக் கொண்டிருந்தது. டிசம்பர் 7-ந் தேதி சாப்பாடு நடந்த அன்று மழை கொட்டு கொட்டு என்று கொட்டியது. இதனால் செங்காடு கிராமம் ஒரே வெள்ளக்காடு ஆகியது. திரும்பி வரும்போது (சுமார் எழுபது மைல் தூரம்) சாலைகளின் இருபக்கமும் பெரு மழைபெய்து தண்ணீர் மயமாகி இருப்பதையும், ஐந்து வருஷங்களாக வறண்டு கிடந்த ஏரிகளில் தண்ணீர் ததும்பி வழிவதையும் பார்த்துக் கொண்டு வந்தார்கள்.

முத்தியாலுப்பேட்டை யுவர் காங்கிரஸ் அங்கத்தினர் ராஜாஜி பிறந்த நாள் கொண்டாடிய முறையைப் பெரிதும் பாராட்டுகிறோம். இந்த முறையில் நம் நாட்டு அரும்பெரும் தலைவர்களின் பிறந்த நாள் கொண்டாடுவதை ராஜாஜிகூட ஆட்சேபிக்க மாட்டார் என்று நம்புகிறோம்.

# இலங்கை மந்திரியின் விந்தைப் பேச்சு

எங்கள் ஊருக்கு விஜயம் செய்த முனிவரைச் சிலர் தரிசனம் செய்து, அவரிடம் தங்களுடைய கஷ்டங்களை முறையிட்டுக் கொண்டார்கள்.

"இந்த ஊரில் வாழும் மக்களில் பெரும்பாலோர் கொடிய பிணிகளினால் துன்பப்பட்டு வருகிறார்கள். அவர்களுடைய துன்பம் தீருவதற்கு ஏதாவது வழி கூறி அருள வேண்டும்" என்று அவர்கள் முனிவரை வேண்டிக் கொண்டார்கள்.

அதைக் கேட்டதும் முனிவர் சிரித்தார். உடனே அங்கு வந்திருந்தவர்களின் முகங்கள் மலர்ந்தன. தங்களுடைய கஷ்டம் தீருவதற்கு முனிவர் ஏதோ வழி சொல்லப் போகிறார் என்ற நம்பிக்கை அவர்களுக்கு உண்டாயிற்று.

ஆனால் முனிவர் கூறிய பதில் அவர்களைத் தூக்கி வாரிப் போட்டு விட்டது.

"இந்த உலகமே வெறும் மாயைதான். மாயா உலகத்தில் உடம்பும் பிணியும் எவ்விதம் உண்மையாக இருக்க முடியும்? எனவே, இங்கு ஜனங்கள் துன்பப் படுகிறார்கள் என்பது பொய்; நீங்களும் பொய்; நானும் பொய்; எல்லாம் பொய்" என்று ஒரேயடியாக அடித்து விட்டார் முனிவர்!

இலங்கை உள்நாட்டு மந்திரி ஸ்ரீ ரத்னயகா சில தினங்களுக்கு முன் புது டில்லியில் செய்த பிரசங்கம் மேற்படி கதையையே ஞாபக மூட்டுகிறது.

சாஞ்சி க்ஷேத்திரத்தில் புத்த பிரானின் பிரதான சீடர்களுடைய சின்னங்கள் பிரதிஷ்டை செய்யப் பட்டபோது, ஸ்ரீ ரத்னயகா சிறந்த அறிவுரை ஒன்றை நிகழ்த்தினார்.

உலகத்தில் உள்ள பல நாடுகளுக்கும் ஜீவ காருண்யத்தையும் நாகரிகத்தையும் போதித்த நாடு பாரத நாடுதான் என்று கூறினார். இலங்கை மக்களுக்குப் புத்த பகவானையும் தர்ம ஜோதியையும் அளித்த பாரத தேசத்துக்கு இலங்கை நன்றிக் கடன் பட்டிருக்கிறது என்று குறிப்பிட்டார்.

"இலங்கை மக்களின் இலக்கியங்கள், கலைகள், குணங்கள், பழக்க வழக்கங்கள் யாவும் புத்த பகவானுடைய உபதேசங்களின் மூலமே எங்களுக்குக் கிடைத்தன" என்றும் ஸ்ரீ ரத்னயகா பரவசம் அடைந்தார்.

ஆனால் புத்த பகவானுடைய அந்த உபதேசங்கள் அவருடைய உள்ளத்தில் உண்மையாகப் பதிந்திருக்கின்றனவா?—இந்தக் கேள்வியை எழுப்பக் கூடிய விதத்தில் ஸ்ரீ ரத்னயகா புது டில்லியில் நடந்த உலக அரசியல் கழகக் கூட்டத்தில் பேசியிருக்கிறார்.

"இலங்கையில் வாழும் இந்தியர்கள் துன்புறுத்தப் படுவதாக நம்புவது சரியல்ல. உண்மையில் சிங்களவர்களைக் காட்டிலும் இலங்கை இந்தியர்கள் சௌக்கியமாகவும் சந்தோஷமாகவும் வாழ்கிறார்கள்" என்று அவர் குறிப்பிட்டார்.

இலங்கை இந்தியர்களுக்குப் பிரஜா உரிமை மறுக்கப்படுவது உலகறிந்த உண்மை. இலங்கையில் தலைமுறை தலைமுறையாக வாழ்ந்தும் பிரஜா உரிமை பெற முடியாத இந்தியர்கள் அந்தமானுக்குச் செல்லுவதா? அல்லது வேறு எந்தத் தீவாந்திரத்துக்குச் செல்லுவது?—இவை போன்ற கேள்விகள் எழுந்திருக்கின்றன.

ஆனால் ஸ்ரீ ரத்னயகாவோ அதெல்லாம் வெறும் பொய் என்று சாதிப்பது போலப் பேசுகிறார்.

* * *

"ஒரு மனிதர் ஒரு தேசத்தைத் தாயகமாகக் கொண்டார் என்பதை எந்தப் பரிசோதனையைக் கொண்டு நிரூபிப்பது? அவரது மனைவியும் குழந்தைகளும் அவருடன் வசித்து வந்திருக்கிறார்களா

என்பதைக் கொண்டுதானே நிரூபிக்க வேண்டும்!" என்று ஸ்ரீ ரத்னயகா கேட்கிறார்.

பிரஜா உரிமை வழங்குவதற்கு இந்த நிபந்தனை ஒருநாளும் நியாயமாகாது. இலங்கையில் தோட்டக் காடுகளில் வேலை செய்யும் இந்தியர்களுக்குத் தமிழ்நாட்டில் உற்றார் உறவினர் பலர் இருக்கிறார்கள். ஒரு குடும்பத்தில் ஒரு குழந்தை தன் அத்தையையோ, பாட்டியையோ பார்ப்பதற்கு ஒரு வார காலம் போய்விட்டுத் திரும்பினால், அந்தக் குழந்தைக்கு மட்டுமல்ல;—அந்தக் குடும்பத்தில் அத்தனை பேருக்கும் இலங்கைப் பிரஜா உரிமை கிடையாது.

இது நீதியா! நேர்மையா! புத்த பகவானின் தர்மத்துக்கு உகந்ததுதானா!

மேற்படி நிபந்தனை நியாயமானது என்றே வைத்துக் கொள்ளலாம். மனைவியும் குழந்தைகளும் தம்முடன் குறிப்பிட்ட ஏழு வருஷ காலம் இடைவிடாமல் வசித்தார்கள் என்பதை நிரூபிக்க வேண்டுமென்றும், அப்படி நிரூபித்தால் தான் பிரஜா உரிமை கிடைக்கும் என்றும் இலங்கை சர்க்காரால் விதிக்கப்பட்டிருக்கிறது.

சென்னை போன்ற நகரங்களில் வாழும் கல்வியறிவு படைத்த மனிதர்களே இவ்விதம் நிரூபிப்பது எளிதான காரியம் இல்லை. அப்படியிருக்க கல்வியறிவு இல்லாத லட்சக் கணக்கான தோட்டத் தொழிலாளர்கள் தங்களுடைய மனைவிமாரும் குழந்தைகளும் குறிப்பிட்ட வருஷங்கள் தங்களுடன் வசித்தார்கள் என்பதை எவ்வாறு ருஜுப்பிக்க முடியும்! என்ன தஸ்தாவேஜுகள் காட்டி நிரூபிக்க முடியும்!

தோட்டத் தொழிலாளர்கள் குடும்பத்துடன் அவ்வாறு தொடர்ந்து வசிக்கவில்லை என்று ருஜுப்பிக்கும் பொறுப்பைச் சர்க்கார் ஏற்றுக் கொள்ளட்டுமே! அவ்விதம் சர்க்காரால் நிரூபிக்கக் கூடியவர்களுக்கு மட்டும் பிரஜா உரிமையை மறுத்துவிட்டு, மற்றவர்களுக்கெல்லாம் பிரஜா உரிமை வழங்கட்டுமே!

இலங்கையை வளப்படுத்திய லட்சக்கணக்கான இந்தியத் தொழிலாளர் குடும்பத்தினருக்குப் பிரஜா உரிமை இல்லாமல் செய்யும் நோக்கத்துடனேயே இத்தகைய நிபந்தனைகள் விதிக்கப்படுகின்றன என்பது வெளிப்படை.

இதை மூடி மறைப்பதற்குச் செய்யும் முயற்சி எதுவும் பயன் படாது.

எனினும், ஸ்ரீ ரத்னயகா ஒரே ஒரு நல்ல செய்தியும் கூறியிருக்கிறார். இலங்கைப் பிரதமர் ஸ்ரீ டட்லி சேனநாயகா இந்தியப் பிரதமர் ஸ்ரீ ஜவாஹர்லால் நேருவைச் சந்தித்துப் பேசக்கூடும் என்று தெரிவித்திருக்கிறார்.

இது உண்மையாகி, இரு பிரதமர்களின் சந்திப்பின் மூலம் இலங்கை வாழ் இந்தியர்களுக்கு விமோசனம் பிறக்கும் என்று எதிர்பார்ப்போமாக.

## உருப்படாத கட்சி உடைந்தது!

கொள்கைக்காக உயிரைக் கொடுக்கத் துணிந்த கம்யூனிஸ்டுகள் முதல், பட்டம் பதவி மோகமும் அதிகார வெறியும் கொண்ட பிற்போக்குப் பணக்காரர்கள் வரையில் கதம்பமாகச் சேர்ந்து "ஐக்கிய ஜனநாயக முன்னணி" என்னும் அதிசய ஸ்தாபனம் இம்மாகாணத்தில் உருவாயிற்று. அந்த 'முன்னணி'யில் எல்லாருக்கும் பொதுவாயிருந்த முன்னணி நோக்கம், மந்திரி சபையைக் கைப்பற்ற வேண்டும் என்பது. அந்தப் பொது நோக்கம் நிறைவேறி விட்டால், பிறகு ஒவ்வொருவரும் தமது சொந்த நோக்கத்தைச் சாதித்துக் கொள்ளலாம் என்று எண்ணி மனப்பால் குடித்தார்கள்.

மேற்படி கட்சி உருவான புதிதில் நிதி மந்திரி ஸ்ரீ சி. சுப்பிரமணியம் அவர்கள், அழுத்தம் திருத்தமாக, "அதில் ஐக்கியமும் இல்லை; ஜனநாயகமும் இல்லை; அது முன்னணியும் அல்ல" என்று கூறினார்.

அது எவ்வளவு உண்மையான பேச்சு என்பது நாளடைவில் தெரிந்து வந்ததென்றாலும், சென்ற வாரத்தில் நன்றாக உறுதிப்பட்டது. கட்சியின் தலைவராயிருந்த ஸ்ரீ டி. பிரகாசம் காருவும் ஆந்திர – மலையாள பிரஜா கட்சி அங்கத்தினரும் ஐ. ஜ. மு-விலிருந்து பிரிந்து வந்தார்கள். பிரிந்து வந்தவுடனே ஸ்ரீ டி. பிரகாசம் வெளியிட்ட அறிக்கை சோகம் ததும்புவதாயிருந்தது. "தலைவன் என்று நான் பெயருக்கு இருந்தேனே தவிர, காரியங்கள் எல்லாம் எனக்குத் தெரியாமல் எப்படி எப்படியோ நடந்து வந்தன" என்று முறையிட்டார். ஐ. ஜ. முன்னணி அமைக்கப்படும் போதே இப்படித்தான் நடக்கும் என்று பலரும் எச்சரிக்கை செய்தார்கள். ஸ்ரீ டி. பிரகாசம் அதை அச்சமயம் பொருட்படுத்தவில்லை. இப்போது அதே பாடத்தை அவர் திருப்பி ஒப்புவிக்கிறார். பாவம்! பல காரணங்களினாலும் மனங் கசந்துபோன அந்த முதுபெருங் கிழவரை நினைத்தால் பரிதாபமாகத்தானிருக்கிறது.

இவ்வாறு உருப்படாத ஐ. ஜ. மு. கட்சி சென்ற வாரத்தில் முடிவாக உடைந்து போன போதிலும், இதனால் சென்னைச் சட்டசபையில் காங்கிரஸ் மந்திரி சபைக்கு எதிர்ப்புக் குறைந்து விடும் என்று எதிர்பார்ப்பதற்கில்லை.

சென்னையில் பிரஜா கட்சியார் கம்யூனிஸ்டுகளுடன் ஒத்துழைக்கிறார்கள் என்பது அகில இந்தியாவிலும் பிரஜா கட்சியின் செல்வாக்கைப் பாதித்து வந்தது. இதை முன்னிட்டே பிரஜா கட்சி ஐ. ஜ. மு. விலிருந்து பிரியத் தீர்மானித்தது என்று சொல்வதும் மிகையாகாது.

ஆனால் காங்கிரஸ் மந்திரி சபையை எதிர்க்கும் விஷயத்தில் எல்லாரும் முன்போலவே உத்வேகமாக இருப்பார்கள். ஏன்! பிரிந்து போன காரணத்தினாலேயே மந்திரி சபையை எதிர்ப்பதில் அவர்களுடைய உத்வேகம் அதிகமாகக் கூடும்.

காங்கிரஸ் மந்திரி சபையைக் கவிழ்ப்பதற்கு எது சமயம் என்று காத்துக் கொண்டிருப்பார்கள்.

அவர்களுடைய மனோரதம் கைகூடினால் ஒரு விதத்தில் நல்லது என்றே சொல்ல வேண்டும்.

இப்படிப் பல பட்டறைக் கட்சிகள் கொண்ட சட்டசபையில் தினந்தோறும் வோட்டு எடுத்துப் பல பரீட்சை செய்து கொண்டிருப்பதைக் காட்டிலும், மறுபடியும் பொதுத் தேர்தல் நடத்தி, "இந்த மாகாண மக்களுக்கு ஸ்திரமான காங்கிரஸ் ஆட்சி வேண்டுமா! அல்லது குழப்பக்காரர்களின் கண்மூடி ஆட்சிதான் வேண்டுமா!" என்பதை நிச்சயமாய்த் தெரிந்து கொண்டு விடுவது நலம் அல்லவா!

# பொன்னியின் செல்வன்

கல்கி

## அத்தியாயம் 23

## ஊமையும் பேசுமோ?

அநிருத்தர் சற்று நேரம் பூங்குழலியை உற்றுப் பார்த்துக் கொண்டிருந்து விட்டு, அவளைக் கொண்டு வந்த தாதிமார்களை அருகில் அழைத்தார்.

அவர்களிடம் மெல்லிய குரலில் ஏதோ கேட்டார். அவர்கள் மறுமொழி சொன்ன பிறகு அந்த அறையைவிட்டு அப்பால் போகச் செய்தார்.

ஆழ்வார்க்கடியானைப் பார்த்து, "திருமலை! ஏதோ தவறு நேர்ந்திருப்பதாகத் தோன்றுகிறது!" என்றார்.

"ஆம், ஐயா! அப்படித்தான் எனக்கும் தோன்றுகிறது!" என்றான் சீடன்.

"இவள் இளம் பெண்; சுமார் இருபது பிராயந்தான் இருக்கலாம்."

"அவ்வளவு கூட இராது."

"நான் எதிர்பார்த்துக் கொண்டிருந்த மாதரசிக்குப் பிராயம் நாற்பது இருக்க வேண்டும்."

"அதற்கு மேலேயும் இருக்கும்."

"ஆம், ஆம்; நீ இலங்கைத் தீவில் மந்தாகினி தேவியைப் பார்த்திருக்கிறாய் அல்லவா?"

"ஆம்; ஐயா! பார்த்து, தங்கள் கட்டளைப்படி இங்கு அழைத்து வரவும் முயன்றேன். முடியவில்லை."

"இந்தப் பெண் மந்தாகினி தேவி அல்லவே?"

"இல்லை, குருதேவரே! நிச்சயமாக அந்த அம்மையார் இல்லை!"

"அப்படியானால் இவள் யாராயிருக்கும்? எப்படி இங்கு வந்து சேர்ந்தாள்?"

"இவளையே கேட்டுவிட்டால் போகிறது!" என்றான் ஆழ்வார்க்கடியான்.

"ஊமையிடம் கேட்டு என்ன பயன்?"

"குருதேவரே! இவள் ஊமைதான் என்பது......"

"அதைத்தான் தாதிமார்களிடம் கேட்டேன். இங்கு வந்ததிலிருந்து இவள் ஒன்றும் பேசவில்லை என்றார்கள்."

"குருதேவரே! இவளை அடையாளங் கண்டு அழைத்து வருவதற்கு யாரை அனுப்பி யிருந்தீர்கள்?"

"ஆகா! அந்த மூடன் ஏதாவது தவறு செய்து விட்டானா, என்ன?"

"எந்த மூடன், குருதேவரே! தாங்கள் இத்தகைய காரியங்களுக்கு மூடனை அனுப்பி வைத்திருப்பீர்களா?"

"புத்திசாலியாகக் காணப்பட்டான். பழையாறைக்கு நாம் சென்றிருந்த அன்று, வாணர் குலத்து வல்லவரையனுடன் ஒரு வாலிபன் சண்டையிட்டான் அல்லவா?"

"ஆம்; பழையாறை வைத்தியர் மகன் பினாகபாணி."

"அவனேதான்! உன்னையும் வல்லவரையனையும் கரிகாலரைச் சந்திக்க அனுப்பிய பிறகு, அந்த வைத்தியர் மகனைச் சிறையிலிருந்து விடுதலை செய்து அழைத்து வரப் பண்ணினேன். நம் ஒற்றர் படைக்குத் தகுந்தவன் என்று கண்டு, அவனைக் கோடிக் கரைக்கு அனுப்பினேன். முன்னம் அவன் கோடிக் கரைக்குப் போய்ப் பழக்கப் பட்டவனும்......"

"அவன்தான் இந்தப் பெண்ணை இங்கு அழைத்து வந்தானா?"

"அடையாளம் எல்லாம் சரியாகச் சொல்லி அனுப்பினேன். அவனும் திருவையாற்றில் கொண்டு வந்து சேர்த்துவிட்டுக் காரியம் வெற்றி என்று செய்தி அனுப்பியிருந்தான்..."

"ஐயா! நான் தோற்றுப் போன காரியத்தில் வெற்றி அடைந்த அந்தப் புத்திசாலி ஒற்றன் இப்போது எங்கே? இந்தப் பெண்ணைக் குறித்து அவனையே கேட்டு விடுவது நல்லதல்லவா?"

"நல்லதுதான்; ஆனால் நேற்றிரவு அவனுக்கு எதிர்பாராமல் ஒரு விபத்து நேர்ந்து விட்டது......"

"அடாடா! அவனுக்கு என்ன விபத்து, எப்படி நேர்ந்தது?"

"சிவிகையின் பின்னால் அவனும் வந்து கொண்டிருந்தான். இருட்டிய பிறகு கோட்டைக்குள் வரவேண்டும் என்று நான் கட்டளையிட்டிருந்தபடியால், அந்தப்படியே அந்தி மாலை நேரத்தில் திருவையாற்றிலிருந்து புறப்பட்டு, முன்னிரவு வேளையில் கோட்டையை நெருங்கிக் கொண்டிருந்தார்கள். திடீரென்று புயல் அடித்த செய்திதான் உனக்குத் தெரிந்திருக்குமே?..."

"ஆம், ஐயா! நான் கூடப் புயலுக்குப் பயந்து சாலை ஓரத்து யாத்திரை மண்டபம் ஒன்றில் சிறிது நேரம் தங்கியிருக்கும்படி நேர்ந்தது."

"கோட்டைக்குச் சற்றுத் தூரத்தில் சிவிகை வந்தபோது சாலையில் பெரிய மரம் ஒன்று வேரோடு பெயர்ந்து விழுந்து விட்டது. அதிர்ஷ்டவசமாகப் பல்லக்கின் மீது விழாமல் பின்னால் வந்தவர்கள் மீது விழுந்தது. வைத்தியர் மகன் பினாகபாணி விழுந்த மரத்தடியில் அகப்பட்டுக் கொண்டான்!..."

இவ்வாறு முதன் மந்திரி கூறிய போது, ஒரு பெண் குரல், "அந்தச் சண்டாளன் தலையில் மரம் மட்டுந்தானா விழுந்தது? இடி விழவில்லையா?" என்று ஆத்திரத்துடன் கூறியது கேட்டது.

முதன்மந்திரி அநிருத்தர் அளவிலாத வியப்புடன் பூங்குழலியை நோக்கினார். அவளை உற்றுப் பார்த்துக் கொண்டே, "திருமலை! இப்போது பேசியவள் இந்தப் பெண்தானா?" என்றார்.

"ஆம், ஐயா! அப்படித்தான் தோன்றியது."

"இது என்ன விந்தை? செவிடுக்குக் காது கேட்குமா? ஊமையும் பேசுமா?" என்றார் அநிருத்தர்.

"செவிட்டுக்குக் காது கேட்பதும், ஊமை பேசுவதும் மிகவும் விந்தையான காரியங்கள்தான். ஆனால் சர்வ சக்தி வாய்ந்த விஷ்ணுமூர்த்தியின் பக்தராகிய தாங்கள் மனது வைத்தால் எந்த அற்புதந்தான் நடவாது? ஆழ்வார் திருவாய் மலர்ந்தருளியிருப்பது என்னவென்றால்......"

"போதும்! ஆழ்வார்களை இப்போது இங்கே இழுத்துத் தொந்தரவு செய்யாதே! இது விஷ்ணு பகவானின் கருணையினால் நடந்தது அல்ல. ஏதோ தவறு நடந்திருக்கிறது. இந்தப் பெண் நம்மை ஏமாற்றியிருக்கிறாள். இவள் யார்? இவளுடைய நோக்கம் என்ன? எதற்காக இவள் இத்தனை நேரமும் செவிட்டு ஊமை போல நடித்தாள்?"

"குருதேவரே! இந்தப் பெண்ணையே கேட்டு விடலாமே?"

"அப்பனே! உன் முகத்தில் தவழும் புன்னகையைப் பார்த்தால், உனக்கு ஒரு வேளை தெரிந்திருக்கக் கூடுமோ என்று தோன்றுகிறது. சரி; இவளையே கேட்டு விடுகிறேன். பெண்ணே! நீ செவிடு இல்லையா? நான் பேசுவது உனக்குக் காது கேட்கிறதா?......"

"ஐயா! நான் செவிடாயிருக்கக் கூடாதா என்று சில சமயம் விரும்பியதுண்டு. ஆனால் எனக்குக் காது கேட்பது பற்றி இப்போது சந்தோஷப்படுகிறேன். அந்தச் சண்டாளன் வைத்தியர் மகன் தலையில் மரம் ஒடிந்து விழுந்த செய்தியைக் கேட்டேன் அல்லவா? சுவாமி! அவன் செத்து ஒழிந்தானா?" என்றாள் பூங்குழலி.

"ஆகா! உனக்குக் காது கேட்கிறது. பேசவும் பேசுகிறாய். நீ ஊமை அல்ல!" என்றார் அநிருத்தர்.

"நிச்சயமாய் இந்தப் பெண் ஊமை இல்லை!" என்றான் சீடன்.

"ஆகா! நான் ஊமையில்லை என்பதைக் கண்டு பிடித்து விட்டீர்களே! சோழ சாம்ராஜ்யத்திலேயே மிக்க அறிவாளி முதன் மந்திரி அநிருத்தப் பிரம்மராயர் என்று நான் கேள்விப்பட்டது சரிதான்!" என்றாள் பூங்குழலி.

"பெண்ணே! என்னைப் பரிகாசமா செய்கிறாய்? ஜாக்கிரதை! நீ ஊமையில்லாவிட்டால் நேற்று இரவு இங்கு வந்ததிலிருந்து பேசாமலிருந்தது ஏன்? ஊமைபோல் நடித்தது ஏன்? உண்மையைச் சொல்லு!" என்று கேட்டார் முதன் மந்திரி அநிருத்தப் பிரம்மாதிராயர்.

"ஐயா! நேற்றிரவு இங்கு நான் வந்து சேரும் வரையில் பேசத் தெரிந்தவளாகவே இருந்தேன். என்னை 'வாயாடி' என்று கூடச் சிலர் சொல்லுவதுண்டு.



மூதன் மந்திரியின் அரண்மனையைப் பார்த்து. இங்கு எனக்கு நடந்த இராஜோபசாரங்களைப் பார்த்ததும் பிரமித்து ஊமையாய்ப் போனேன். தங்கள் அரண்மனைப் பெண்மணிகள் என்னுடன் சமிக்ஞை மூலமாகப் பேசினார்கள். அவர்கள் எல்லாரும் ஊமை என்று எண்ணி நானும் சமிக்ஞையாக மறுமொழி சொன்னேன். தங்களுடைய பேச்சைக் கேட்ட பிறகு, எனக்கும் பேச்சு நினைவு வந்தது......"

"நீ பெரிய வாயாடி என்பதில் சந்தேகமில்லை. உன்னை எப்படித்தான் அந்த வைத்தியர் மகன் பிடித்துக் கொண்டு வந்தான் என்பதை நினைத்தால் ஆச்சரியமாயிருக்கிறது. அவன் மூட்டாளாயிருந்தாலும் சாமர்த்தியசாலிதான்."

"சுவாமி! அந்தப் பாவி மகன் என்னைப் பிடித்துக் கொண்டு வரவில்லை. அதற்குப் பிரயத்தனப் பட்டிருந்தால், இத்தனை நேரம் அவன் யமலோகத்துக்கு நிச்சயமாக யாத்திரை செய்து கொண்டிருப்பான்!" என்று கூறிப் பூங்குழலி தன் இடுப்பில் செருகி யிருந்த கத்தியை எடுத்துக் காட்டினாள்.

"பெண்ணே! உனக்குப் புண்ணியமாய்ப் போகட்டும். கத்தியை இடுப்பிலே செருகிக் கொள். அவன் பேரில் உனக்கு ஏன் இத்தனை கோபம்? அவன்தான் உன்னைப் பிடித்து வரவில்லை என்றாயே?"

"என்னை அவன் பிடித்துக் கொண்டு வரவில்லை. ஆனால் என்னை அவன் ஆட்கள் படகிலே சேர்த்துக் கட்டிப் போட்டுவிட்டு வந்தார்கள். என் அண்ணியை மரத்திலே சேர்த்துக் கட்டி விட்டார்கள். இத்தனைக்கும் அந்தச் சண்டாள வைத்தியர் மகன் தனக்கு இதில் ஒரு சம்பந்தமும் இல்லை யென்று என்னிடம் சொன்னான்......"

"அந்தவரையில் அவன் புத்திசாலிதான். நான் சொன்னபடியே அவன் நடந்து கொண்டிருக்கிறான்......"

"ஐயா, முதன் மந்திரியே! அந்த ஆர்த்தனை அனுப்பியது தாங்கள்தானா? வாயில்லாப் பேதையாகிய என் அத்தையைப் பிடித்துக் கொண்டு வரக் கட்டளையிட்டதும் தாங்கள்தானா?"

"உன் அத்தையா? கரையர் மகள் மந்தாகினி உன் அத்தையா? அப்படியானால், நீ?......கலங்கரை விளக்கத்துக் காவலர் தியாக விடங்கருக்கு நீ என்ன வேணும்?" என்று அநிருத்தர் கேட்டார்.

"ஐயா! அவருடைய அருமைப் புதல்விதான் நான்!"

"ஆகா! தியாக விடங்கருக்கு இவ்வளவு வாயாடியான ஒரு மகள் இருக்கிறாள் என்பது எனக்கு இதுவரை தெரியாமற் போயிற்று!"

"இதை வெளியில் சொல்ல வேண்டாம், ஐயா!"

"ஏன், பெண்ணே!"

"சோழ சாம்ராஜ்யத்தின் முதன் மந்திரி பிரம்மராயருக்குத் தெரியாத விஷயம் எதுவுமே இல்லை என்று நாடெல்லாம் பிரசித்தமாயிருக்கிறது. தங்களுக்கு ஒன்று தெரியாது என்று ஏற்பட்டால், தங்களிடம் மக்களுக்குள்ள மதிப்புக்குப் பங்கம் வந்து விடாதா?"

"பெண்ணே! என் மதிப்பைப் பற்றி எனக்குக் கவலை இல்லை. எனக்குத் தெரியாத இன்னொரு செய்தியை மட்டும் சொல்லிவிடு. உன் அத்தையைப் பிடித்துக்கொண்டு வந்தார்கள் என்றாயே? அவள் இப்போது எங்கே? நான் அனுப்பிய பல்லக்கில், நீ எப்படி ஏறிக் கொண்டாய்? எவ்விடத்தில் ஏறிக் கொண்டாய்?" என்று அநிருத்தர் கேட்டார்.

"ஐயா! வாயில்லா ஊமையாகிய என் அத்தையைத் தாங்கள் எதற்காகக் கைப்பற்றிக் கொண்டு வர ஆட்களை அனுப்பினீர்கள்?"

"மகளே! அதை உன்னிடம் சொல்லுவதற்கில்லை. அது பெரிய இராஜாங்க சம்பந்தமான விஷயம்."

"தந்தையே! அப்படியானால், தாங்கள் கேட்ட கேள்விகளுக்கு நானும் மறுமொழி சொல்ல இயலாது."

"சொல்லும்படி செய்வதற்கு வழிகள் இருக்கின்றன."

"என்னிடம் பலிக்காது!"

"பெண்ணே! உன்னைப் பாதாளச் சிறைக்கூடத்துக்கு அனுப்புவேன்......"

"எந்தப் பாதாளச்சிறையிலும் என்னை அடைத்து வைத்திருக்க முடியாது."

"பாதாளச் சிறைக்கு ஒரு தடவை போனவர்கள் திரும்பி வருவதில்லை......"

"திரும்பி வந்த ஒருவனை எனக்குத் தெரியும், ஐயா! நேற்றுக்கூடச் சேந்தன் அமுதனுடன் பேசிக் கொண்டுதான் பிரயாணம் செய்தேன்......"

"அவன் யார் சேந்தன் அமுதன்?..."

"அவன் என்னுடைய இன்னொரு அத்தையின் மகன். அவனும் நானுமாகத் தான் கோடிக் கரையிலிருந்து வந்து கொண்டிருந்தோம்."

"எதற்காக, மகளே?"

"இந்தத் தஞ்சாவூரிலுள்ள மாட மாளிகை கூட கோபுரங்களைப் பார்க்க வேண்டுமென்று வெகுகாலமாக ஆசை உண்டு. சக்கரவர்த்தி சுந்தர சோழரைத் தரிசிக்க வேண்டும் என்றும் ஆவல் கொண்டிருந்தேன். சக்கரவர்த்திக்கு உடல் நலமில்லையென்று சொன்னார்களே? இப்போது எப்படியிருக்கிறது, ஐயா? நான் பார்க்கலாமா?"

"அப்படியேதான் இருக்கிறது, மகளே! அபிவிருத்தி ஒன்றுமில்லை. ஆகையால் சக்கரவர்த்தியைத் தரிசிக்கும் எண்ணத்தை மறந்துவிடு!......"



"அது எப்படி மறக்க முடியும், ஐயா! சக்கரவர்த்தியை நான் பார்த்தேயாக வேண்டும். பார்த்து, அவருடைய தர்ம ராஜ்யத்தில், பெண்களைப் பலவந்தமாகப் பற்றிக் கொண்டுவரும் அக்கிரமம் நடக்கும் செய்தியைச் சொல்ல வேண்டும்......"

"பெண்ணே! உன்னோடு வெறும் விவாதம் செய்து கொண்டிருக்க எனக்கு நேரம் இல்லை. உன்னைப் பலவந்தமாகப் பற்றிக் கொண்டு வர நான் கட்டளையிடவும் இல்லை. நான் அனுப்பிய பல்லக்கில் நீ எப்படி ஏறிக் கொண்டாய், அதைச் சொல்! யாராவது உன்னைப் பலவந்தமாகப் பிடித்துப் பல்லக்கில் ஏற்றினார்களா?"

"இல்லை, சுவாமி! அது மட்டும் இல்லை. தஞ்சைக் கோட்டைக்கு அருகில் வரும் சமயத்தில் இந்தப் பல்லக்கு வெறுமையாக இருந்தது. மழையாயிருக்கிறதே என்று நானாகவே தான் பல்லக்கில் ஏறிக் கொண்டேன்......"

முதன்மந்திரி அநிருத்தப்பிரம்மராயர் தமது சீடனாகிய ஆழ்வார்க்கடியானைப் பார்த்து, "ஒருவாறு எனக்கு இப்போது விஷயம் விளங்குகிறது. வழியில் புயலும் மழையுமாயிருந்தபோது பல்லக்கை எங்கேயோ இறக்கி யிருக்கிறார்கள். அச் சமயம் இவள் அத்தையைப் பல்லக்கிலிருந்து இறக்கிவிட்டு இவள் ஏறிக் கொண்டிருக்கிறாள். வைத்தியர் மகன் பேரில் மரம் விழுந்து பிரக்ஞை இழந்து விட்டபடியால் அவனால் கவனிக்க முடியவில்லை. சிவிகை தூக்கிய மற்றவர்கள் கவனிக்கவில்லை. கோட்டை வாசலுக்குச் சமீபத்திலே தான் இது நடந்திருக்க வேண்டும். திருமலை! என்னுடைய ஊகம் சரியாயிருக்கும் என்று உனக்குத் தோன்றுகிறதா?" என்று கேட்டார்.

"சுவாமி! தாங்கள் இப்போது ஊகித்துச் சொன்னபடியேதான் நடந்தது. நானே கண்ணால் பார்த்தேன்."

"நீ பார்த்தாயா? அது என்ன? இத்தனை நேரம் ஏன் வாயை மூடிக் கொண்டிருந்தாய்? சீக்கிரம் சொல்லு!"

"நேற்று முன்னிரவில் மழைக்கால இருட்டில் கோட்டை வாசலை நெருங்கி வந்து கொண்டிருந்தேன். பெரும் புயலும் மழையும் அடித்தன. மரங்கள் முறிந்து விழுந்தன. சாலையோரத்து யாத்ரிகர் மண்டபம் ஒன்றில் சிறிது நேரம் தங்கியிருக்கலாம் என்று சென்றேன். அங்கே நான் ஒதுங்கிய சிறிது நேரத்துக்கெல்லாம் இந்தப் பெண்ணும் இன்னொரு வாலிபனும் வந்தார்கள். இவள் தன் அத்தைமகன் என்று சொன்னாளே, அவனாக இருக்கலாம். மின்னல் வெளிச்சத்தில் அவன் கழுத்தில் உருத்திராட்சம் கட்டி யிருப்பதைப் பார்த்தேன். பிஞ்சிலே பழுத்த சைவன் என்று தெரிந்து கொண்டு அவனிடம் 'வைஷ்ணவத்தின் பெருமையைச் சொல்லலாம்; சற்றுப் பொழுது போகும்' என்று எண்ணினேன். இதற்குள் அதே மண்டபத்தின் முகப்பில் ஒரு சிவிகையைக் கொண்டு வைத்தார்கள். சிவிகையின் திரையில் பழுவேட்டரையரின் பனைச் சின்னம் தெரிந்தது. சிவிகையிலிருந்து ஒரு பெண் இறங்கி இவர்கள் அருகில் வந்தாள். மண்டபத்தில் இருள் கவிந்த இடத்தில் மூன்று பேரும் ஏதோ ஜாடைமாடையாகப் பேசிக் கொண்டார்கள். பிறகு இவள் போய்ப் பல்லக்கில் ஏறுவதைப் பார்த்தேன். மின்னல் வெளிச்சத்தில் 'பல்லக்கிலிருந்து இறங்கியவள் வேறு; மறுபடி ஏறியவள் வேறு' என்று தெரிந்து கொண்டேன். பல்லக்குத் தூக்கிகள் இதை யொன்றும் கவனிக்கவில்லை. மழை சிறிது நின்றதும், பல்லக்கைத் தூக்கிக் கொண்டு புறப்பட்டுப் போய் விட்டார்கள்!......"

"ஆகா! அப்படியா என்னை ஏமாற்றி விட்டார்கள்? இத்தனை நேரம் சொல்லாமல் சும்மா இருந்தாயே? அந்த இரண்டு பேரும் பிறகு என்ன செய்தார்கள்?"

"பல்லக்குப் போன பிறகு அவர்களும் போய் விட்டார்கள். பின்னர் நானும் புறப்பட்டேன்......"

"திருமலை! நீ ஏன் இதை யெல்லாம் பார்த்துக் கொண்டு சும்மா யிருந்தாய்? இவள் அத்தையை நீ ஏன் தடுத்து நிறுத்தவில்லை? நீயும் இவர்களுடைய சூழ்ச்சியில் கலந்து விட்டாயா, என்ன?"

"அபசாரம், குருதேவரே! அபசாரம்! அத்தகைய துரோகத்தை நான் செய்யக் கூடியவனல்ல. முதலில், இதெல்லாம் தங்கள் ஏற்பாடு என்று எனக்குத் தெரியாது. பழுவூர் அரண்மனைப் பல்லக்கு ஆனபடியால், சின்னப் பழுவேட்டரையருடைய காரியமா யிருக்கலாம் என்று எண்ணினேன். ஆனாலும், மந்தாகினி தேவியை என்னால் தடுத்து நிறுத்த முடியுமா? புயற்காற்றை அணை போட்டு நிறுத்தினாலும் நிறுத்தலாம்; அந்த மாதரசியை நிறுத்த முடியுமா? இலங்கையிலேயே முயன்று பார்த்துத் தோல்வி அடைந்தவன் தானே? மேலும் அந்த

அம்மானுக்கு என்னை அடையாளம் தெரியும். பார்த்ததும் மிரண்டு ஓடிப் போவார்கள். பிறகு யாராலும் அவ ரைப் பிடிக்க முடியாது......"

"அதை நினைத்தால், வைத்தியர் மகன் கெட்டிக்காரன் என்றே தோன்றுகிறது. இத்தனை தூரம் அழைத்துக் கொண்டு வந்துவிட்டான் அல்லவா?"

"குருதேவரே! இந்த விஷயத்தில் தங்கள் ஊகம் சரியல்லவென்று தோன்றுகிறது. மந்தாகினி தேவி தாமே விரும்பித்தான் வந்திருக்க வேண்டும். தஞ்சையை நெருங்கியதும் அவருடைய மனம் மாறியிருக்க வேண்டும்..."

"இருக்கலாம்; இருக்கலாம். ஆனாலும் இதற்குள் அதிக தூரம் அந்தக் கரையர் மகள் போயிருக்க முடியாது. இரவெல்லாம் காற்றும் மழையுமாக இருந்ததல்லவா? சமீபத்திலேதான் எங்கேயாவது இருக்க வேண்டும். திருமலை! எப்படியாவது அவளைப் பிடித்தாக வேண்டும். ஒரு வேளை இந்தப் பெண்ணுக்கு அவள் தங்குமிடம் தெரிந்திருக்கலாம்...மகளே! உன் பெயர் என்ன?"

"பூங்குழலி, ஐயா!"

"ஆகா! அழகான பெயர்! பெயர் வைப்பதில் தியாக விடங்கரின் சாமர்த்தியத்துக்கு இணையே கிடையாது. பூங்குழலி! உன் அத்தை எங்கே தங்கியிருப்பாள் என்று உனக்குத் தெரிந்திருக்கும். தெரிந்தால், சொல்லு! அவளுக்கு ஒன்றும் கெடுதல் நேராது."

பூங்குழலி சிறிது யோசித்து விட்டு, "சுவாமி! என் அத்தை இப்போது இருக்கக்கூடிய இடம் எனக்குத் தெரியும். அவளை எதற்காகத் தாங்கள் பிடித்துக் கொண்டு வரச் செய்தீர்கள் என்று சொன்னால், நானும் அவள் இருக்குமிடத்தைச் சொல்லலாம்......"

"பூங்குழலி! அது பெரிய இராஜாங்க விஷயம். அரண்மனையைப் பற்றிய இரகசியம். உன்னிடம் சொல்ல முடியாது."

"நானும் சொல்ல முடியாது!"

"இந்தப் பெண்ணுடன் பேசிச் சாத்தியப்படாது......"

"ஐயா! ஒரு நிபந்தனையை நிறைவேற்றுவதாயிருந்தால்,......"

"ஆகா! எனக்கு இந்தப் பெண் நிபந்தனை போடுகிறாளாம்! அது என்ன?"

"என் அத்தையைத் தஞ்சாவூர்ச் சிம்மாதனத்தில் ஏற்றி வைத்து மணி மகுடம் சூட்டுவதாயிருந்தால், அவளை நானே அழைத்து வருகிறேன்."

"திருமலை! இந்தப் பெண்ணுக்குப் பைத்தியம் பிடித்திருக்கிறது......!"

"அதை இப்போதுதானா கண்டீர்கள், குருதேவரே! இவளை ஒன்றும் கேட்கவே வேண்டாம். இவள் அத்தை இருக்குமிடம் எனக்குத் தெரியும். இவள் அத்தை மகன் சேந்தன் அமுதன் கோட்டைக்குச் சற்றுத் தூரத்தில் பூந்தோட்டத்தில் இருக்கிறான். அவனும் அவனது அன்னையும் தளிக்குளத்தார் கோயிலுக்குப் புஷ்ப கைங்கரியம் செய்கிறவர்கள். அங்கேதான் தாங்கள் தேடும் பெண்மணி இருக்கிறாள். என்னுடன் சில ஆட்களை அனுப்பினால், அழைத்து வருகிறேன்!" என்றான் ஆழ்வார்க்கடியான்.

பூங்குழலி திருமலையை எரித்து விடுகிறவள் போலப் பார்த்து விட்டு, "அப்படி ஏதாவது செய்தால், நான் இப்போதே சக்கரவர்த்தியின் அரண்மனை முன்னால் சென்று முறையிடுவேன்! நீங்கள் செய்யும் அக்கிரமம் ஊரெல்லாம் அறியும்படி செய்வேன்!" என்றாள்.

"திருமலை! இவளைப் பாதாளச் சிறைக்கு அனுப்பி வைக்க வேண்டியதுதான்; வேறு வழி இல்லை!" என்றார் அநிருத்தப் பிரம்மராயர்.

"என் அருகில் யாராவது வந்தால் கொன்று விடுவேன்!" என்று பூங்குழலி மடியில் செருகி வைத்திருந்த கத்தியை எடுத்துக் காட்டினாள்.

"ஐயா! இந்தப் பெண்ணைப் பாதாளச் சிறைக்கு அனுப்ப வேண்டியதில்லை. அதற்குப் பதிலாக இளைய பிராட்டி குந்தவை தேவியின் மாளிகைக்கு அனுப்பி வைக்கலாம். இளைய பிராட்டி இப்போது இங்கேதானே இருக்கிறார்? அவர் இந்தப் பெண்ணின் பைத்தியத்தைத் தெளிய வைப்பார்! இளைய பிராட்டிக்கும் இந்தப் பெண்ணினால் ஆக வேண்டிய காரியம் ஏதேனும் இருக்கலாம்!" என்றான் ஆழ்வார்க்கடியான்.

"எதனால் சொல்லுகிறாய்? இளைய பிராட்டிக்கு இந்தப் பெண்ணின் மூலமாக என்ன காரியம் ஆகவேண்டியிருக்கப் போகிறது?......"

"குருதேவரே! தங்களுக்குத் தெரியாதா? நேற்று மாலை இங்கு அடித்த புயல் சோழ நாட்டுக் கடற்கரையோரமாக அதாஹதம் செய்து விட்டிருக்கிறதாம்! தங்கள் அரண்மனை வாசலில் நாலாபுறமிருந்தும் தூதர்கள் வந்து காத்திருக்கிறார்கள்......"

"ஆம், ஆம்; அவர்களையெல்லாம் நான் இப்போது பார்க்க வேண்டும்.

அதற்குள் இந்தப் பெண்ணிடம் பேச்சுக் கொடுத்ததில் வெகு நேரம் வீணாகி விட்டது. இவன் ஊமையாகவே பிறந்திருந்தால் எவ்வளவோ நன்றாயிருந்திருக்கும்......''

''கேள்வி முறையில்லாமல் கொடுமை செய்யலாம் அல்லவா?'' என்று முணுமுணுத்தாள் பூங்குழலி.

''நாகைப்பட்டினத்துக்குப் பெரிய ஆபத்து என்று கேள்விப்படுகிறேன். கடல் பொங்கி வந்து நகரையே மூழ்க அடித்து விட்டதாகச் சொல்கிறார்கள்...''

இந்த வார்த்தைகளைக் கேட்டு முதன் மந்திரி அநிருத்தர், பூங்குழலி இருவருமே திடுக்கிட்டார்கள்.

''......அதைப் பற்றித் தங்களிடம் விசாரிப்பதற்கு இளைய பிராட்டியே ஒரு வேளை இங்கே வந்தாலும் வரக் கூடும்!'' என்று முடித்தான் ஆழ்வார்க்கடியான்.

அவன் சொல்லி வாய் மூடுவதற்குள்ளே அரண்மனை வாசலில் ஜய கோஷத் தொனிகள் கேட்டன.

''திருமலை! நீ எப்போது ஞான திருஷ்டி பெற்றாய்? இளைய பிராட்டி தான் வருகிறார்போலிருக்கிறது!'' என்று சொல்லிக் கொண்டு அநிருத்தர் எழுந்து வாசலை நோக்கி நடந்தார்.

அதற்குள் அதே வாசல் வழியாகக் குந்தவை தேவியும் வானதியும் உள்ளே பிரவேசித்தார்கள்.

பூங்குழலி அங்கே நின்று கொண்டிருப்பதைப் பார்த்ததும் இளைய பிராட்டியின் திருமுகத்தில் குடிகொண்டிருந்த கவலைக் குறி மறைந்து, வியப்பும் உவகையும் ஒருங்கே பிரதிபலித்தன.

## 'பி. ஏ. பிள்ளை' அவர்களின் பிரிவு

சென்ற மாதக் கடைசியில் திருநெல்வேலியிலிருந்து ஒரு திடுக்கிடும் செய்தி வந்தது. திவான்பகதூர் பி. ஆவுடையப்பப் பிள்ளை அவர்கள் தமது அறுபத்து எட்டாவது வயதில் காலமானார் என்ற செய்திதான் அது.

அந்தச் செய்தியைப் படித்த போது, பிள்ளையவர்களை அறிந்தவர்கள் எல்லோரும் ''அன்பின் உருவம், ஊக்கத்தின் உறைவிடம், இனிய பண்பின் இருப்பிடம், சிநேக தர்மத்தின் சிறப்பிடம் மறைந்து விட்டதே'' என்று எண்ணிப் பெரிதும் வருந்தியிருப்பார்கள்.



திவான்பகதூர் பி. ஆவுடையப்பப் பிள்ளை

திருநெல்வேலியில் பிள்ளையவர்கள் பிரபல வக்கீல். நீண்ட காலம் பப்ளிக் பிராஸிகியூட்டராகவும் இருந்தார்கள். ரோட்டரி கிளப், வக்கீல்கள் சங்கம், மந்திரமூர்த்தி ஸ்கூல் கமிட்டி முதலிய பல பொது ஸ்தாபனங்களில் தலைவராகவும் இருந்து நல்ல பணி செய்திருக்கிறார்கள்.

பிள்ளையவர்கள் எப்பொழுதும் இன்முகம் கொண்டு விளங்குவார்கள். ஒருவரிடம் சிநேகம் செய்தார்கள் என்றால், அந்த நட்பு அச் சிநேகிதருடைய குடும்பத்தினர், வேலைக்காரர்கள், அவர்கள் வளர்க்கும் மாடுகள், நாய்கள் வரையில் பரவிப் படர்ந்திருக்கும். ஒரு நண்பரைச் சிலநாள் கழித்துச் சந்திக்க நேர்ந்தால், அவரிடம் க்ஷேமம் விசாரிக்கும்போது, குடும்பத்தைச் சேர்ந்த ஒவ்வொருவரையும் பெயர் சொல்லி, அடையாளம் சொல்லித் தனித்தனியாக விசாரிப்பார்கள்.

பிள்ளை அவர்களுடைய ஹாஸ்ய உணர்ச்சி அபாரமானது. நண்பர்கள் கூடிச் சேர்ந்துவிட்டால் போதும். பிள்ளையவர்கள் தம்முடைய கிறுக்கனை உற்சாகத்துடன் சொல்லி மகிழ்விப்பார்கள்.

''உடை கட்டி வாழ்வாரே
வாழ்வார் மற்றெல்லாம்.
கைகட்டிப் பின் செல்பவர்.''

''சிறப்போடு பூனை
இறப்பில் இருப்பின்
புறப்பட மாட்டா தெலி.''

''குல்லாக்குள் குல்லாக்குள்
குல்லாக்குள் குல்லாக்குள்
குல்லாக்குள் எல்லாம் நரி.''

இத்தகைய பல 'கிறுக்கனை'ப் பிள்ளை அவர்கள் கவனம் செய்து வைத்திருந்து, சமயம் வரும் போதெல்லாம் நண்பர்களிடையே அள்ளி வீசிக் களிப்பூட்டுவார்கள்.

வெகுகாலம் 'பி. ஏ. பிள்ளை' என்ற பெயரால் ஸ்ரீ ஆவுடையப்பப் பிள்ளை அவர்கள் பிரபலமடைந்து விளங்கினார்கள். 'திவான்பகதூர் பிள்ளை' 'பப்ளிக் பிராஸிக்யூடர் பிள்ளை'யாகவும் விளங்கினார்கள்.

ஆனால் ஸ்ரீ ஆவுடையப்பப் பிள்ளையை அறிந்தவர்களுக்கெல்லாம் அவருடைய வாழ்க்கையில் மிகச் சிறப்பான அம்சம் இன்னதென்பது தெரிந்திருக்கும். பிள்ளை அவர்கள் பிள்ளைப் பிராயத்திலிருந்து ரஸிகமணி டி. கே. சி. அவர்களிடம் கொண்டிருந்த நட்பு ஒப்புவமை அற்றது. இரட்டைப் பிள்ளைகளாகப் பிறந்திருக்க வேண்டியவர்கள் தவறி வெவ்வேறு குடும்பத்தில் பிறந்து விட்டார்கள் என்றே சொல்ல வேண்டும்.

ஸ்ரீ ஆவுடையப்பப் பிள்ளை அவர்களின் வாழ்க்கைத் துணைவியார் தமிழ்நாட்டுப் பெண் குலத்தின் பண்பாட்டை வடிவமாக விளங்கி வருகிறவர்கள். சொல்ல இயலாத பெருநஷ்டத்தை அடைந்த அப் பெண்மணிக்கும் புதல்வர் புதல்வியருக்கும் உறவினருக்கும் நண்பர்களுக்கும் ரஸிகமணி டி. கே. சி. அவர்களுக்கும் நமது மனமார்ந்த அனுதாபத்தைத் தெரிவித்துக் கொள்கிறோம்.

# எதிர்பாருங்கள்!




மற்றும் பல புதிய அம்சங்கள். முற்றிலும் நூதனமான அமைப்பு

வருஷ சந்தா ரூ. 6. - வெளிநாடு ரூ. 9

ஏஜண்டுகள் இல்லாத ஊர்களில் ஏஜண்டுகள் தேவை

○●○

"குண்டூசி", 26, கிடங்கு தெரு, சென்னை-1

# கள்ளிக்கோட்டை பண்ட்ஸ் லிமிடெட்

(இந்தியாவில் ஸ்தாபிக்கப்பட்டது)

கிளை ஆபீஸ்:

9, செம்புதாஸ் தெரு, மதராஸ்-1

## எங்கள் மாத சீட்டுகள்

நவம்பர் மாத சீட்டு வரிசையில் இடம்பெறாத பல நண்பர்களின் வேண்டுகோளுக்கிணங்கி துவக்கியிருக்கும்

### டிஸம்பர் மாத சீட்டு வரிசை

(4வது ஞாயிறு ஏல வரிசை)

சந்தா செலுத்த கடைசி தேதி : 20 - 12 - 52

முதல் ஏலத் தேதி : 28 - 12 - 52

| வகுப்பு | மாதச் சந்தா | சீட்டுத் தொகை |
|---|---|---|
| C | ரூ. 100/- | ரூ. 3000/- |
| D | ரூ. 50/- | ரூ. 1500/- |
| F | ரூ. 25/- | ரூ. 750/- |
| F | ரூ. 20/- | ரூ. 600/- |
| G | ரூ. 15/- | ரூ. 450/- |
| H | ரூ. 10/- | ரூ. 300/- |

30 சந்தாதாரர்கள் — 30 மாதங்கள்

புரியும் வண்ணம் விலாசத்தை எழுதி விண்ணப்பித்துக் கொள்பவர்களுக்கு, கம்பெனியின் நிபந்தனைகள் இலவசமாக அனுப்பப்படும். ரூ. 25/-க்கும் அதற்கு மேற்பட்ட தொகைக்கும் இந்தியாவிலுள்ள அங்கீகரிக்கப்பட்ட பாங்குகளின் பேரில் செக் பெற்றுக் கொள்ளப்படும். குறைந்த தொகைகளை மணியார்டர், போஸ்டல் ஆர்டர் மூலம் அனுப்பலாம். இந்த சந்தர்ப்பத்தை தவறாமல் உடனே விண்ணப்பிக்கவும்.

(போர்டார் உத்திரவுப்படி)

எம். வி. விஸ்வநாதன், மானேஜிங் டைரக்டர்

தந்தி: 'KALLIFUNDS'

# ஹைட்ரஜன் குண்டு

ஈ. ரியமணி

**இ**ந்தப் பூமியில் முதன் முதலாகச் சிருஷ்டிக்கப்பட்ட பெண்ணின் பெயர் பண்டோரா என்று கிரேக்க நாட்டுப் பழைய நூல்கள் கூறுகின்றன. அவளுக்கு ஸூஸ் என்ற தேவதை ஒரு பெட்டியைக் கொடுத்து, 'இந்தப் பெட்டியை நீ எக்காலத்திலும் திறக்கக் கூடாது' என்று கட்டளை யிட்டிருந்தது.

பண்டோராவுக்கு அந்த மர்மப் பெட்டியைத் திறந்து பார்க்க வேண்டும் என்ற ஆசை ஏற்பட்டுவிட்டது. அந்த ஆசையைக் கட்டுப்படுத்த அவள் எவ்வளவோ முயற்சி செய்தாள். ஆனால் அவளது முயற்சிக்கும் ஆசைக்கும் நடந்த போராட்டத்தில் ஆசையே மேலோங்கி வெற்றி பெற்றது.

இறுதியில் பண்டோரா மெதுவாகப் பெட்டியைத் திறந்தாள்.

அவ்வளவுதான்! அதிலிருந்து எண்ணிக்கையற்ற துன்மார்க்கங்களும் தொல்லைகளும், பாவங்களும் பிணிகளும், கஷ்டங்களும் கவலைகளும் சீறிக் கொண்டு கிளம்பி உலகம் எங்கும் பரவி விட்டன.

அப்போதுதான் பண்டோரா தான் செய்த கொடிய தவறை உணர்ந்தாள். உடனே அலறிக் கொண்டு மேற்படி பெட்டியை மூடி விட்டாள். பெட்டிக்குள் அடைக்கப்பட்டிருந்த பயங்கரமான பிசாசுகளும் பூதங்களும் எதேச்சையாக வெளியே ஓடியபின், பெட்டியை மூடி என்ன பலன்?

அன்று பண்டோரா செய்த பெரும் தவறின் விளைவாக இன்று மானிட வர்க்கமே அவற்றிலிருந்து உய்வதற்கு யாதொரு வழியுமின்றி அல்லல் பட்டு வருகிறது.

மேற்கூறிய விதம் கிரேக்கர்களின் புராணத்தில் பிரபலமான ஒரு கதை இருக்கிறது.

அவ்விதம் பண்டோரா தன்னிடமிருந்த மாயப் பெட்டியைத் திறந்து, உலகத்தைத் தவிக்க வைத்திருப்பது போல், இப்போது வல்லரசுகளின் விஞ்ஞானிகள் தங்களுடைய ஆராய்ச்சிப் பெட்டியைத் திறந்து, அகில உலகத்தையும் கிடுகிடுக்க வைக்கும் பூதங்களை வெளியே விட்டிருக்கிறார்கள்.

அவர்களுடைய பெட்டியிலிருந்து முதலில் ஏககாலத்தில் பெரிய பட்டணத்தையும் பதினாயிரக்கணக்கான ஜனங்களையும் அழிக்கவல்ல அணுகுண்டுகள் வெளி வந்தன. அணு குண்டுகளைக் காட்டிலும் பன்மடங்கு அதிகமான சக்தியுள்ள ஹைட்ரஜன் குண்டு (Hydrogen bomb) அதாவது ஜல வாயு குண்டு இப்போது வெளி வந்திருக்கிறது. இன்னும் சிறிது காலத்தில் ஹைட்ரஜன் குண்டுகளைக் காட்டிலும் அதிக சக்தி பொருந்திய மகா பயங்கர ஆயுதம் வரக்கூடும் என்று இப்போதே விஞ்ஞான நிபுணர்கள் எச்சரிக்கை செய்ய ஆரம்பித்து விட்டார்கள்!

## பசிபிக் தீவு மறைந்தது!

**கி**ரேக்கர்களின் புராணக் கதையைப் போல் இது வெறும் கதை இல்லை; மந்திரமும் இல்லை; மாயா ஜாலமும் இல்லை. கண்ணுக்கு எதிரே உண்மையில் நிகழ்ந்தது.

**அதாவது, சில தினங்களுக்கு முன் பசிபிக் மகா சமுத்திரத்தில் இருந்த தீவு ஒன்று திடீரென்று வெடித்துத் தூள் தூளாகி, சமுத்திர ஜலத்தில் கரைந்து மறைந்து விட்டது!**

அமெரிக்கா தயாரித்த முதலாவது ஹைட்ரஜன் குண்டைப் பரீட்சை செய்து பார்த்ததின் பலன்தான் அந்தத் தீவு மறைந்ததற்குக் காரணம். அந்தத் தீவில் ஏராளமான ஈச்ச மரங்களும் தென்னை மரங்களும் இருந்தன. அவைகளும் தீவும் எவ்வித அறிகுறியும் இல்லாமல் மறைந்து விட்டன.

ஏற்கெனவே, அமெரிக்கா, ருஷ்யா, பிரிட்டன் இந்த மூன்று வல்லரசுகளும் அணு குண்டுகளை உற்பத்தி செய்ய ஆரம்பித்து விட்டன. இப்போது அமெரிக்கா ஹைட்ரஜன் குண்டு உற்பத்திக்கும் அங்குரார்ப்பணம் செய்திருக்கிறது.

அணு குண்டு உற்பத்தி இரகசியத்தை அறிந்தவர்களுக்கு ஹைட்ரஜன் குண்டைத் தயாரிப்பது கஷ்டமில்லை. எனவே, ருஷ்யா ஹைட்ரஜன் குண்டைப் பரீட்சை செய்து பார்க்கும் காலம் அதிக தூரத்தில் இல்லை என்று பத்திரிகைச் செய்திகள் கூறுகின்றன.

பிரபல ருஷ்ய விஞ்ஞானிகளான டாக்டர் பீடர் காபிட்ஸா, டாக்டர் ஜாப்பே முதலியவர் ருஷ்யாவிலே ஹைட்ரஜன் குண்டு உற்பத்தியில் தீவிரமாக ஈடுபட்டுள்ளனர். இவர்களைத் தவிர, 1925-ம் வருஷம் பௌதிக சாஸ்திரத்தில் நோபல் பரிசு பெற்றவரும் ருஷ்யாவில் சிறைப்பட்டிருப்பவருமான டாக்டர் கஸ்டேவ் ஹர்ஷ் என்ற ஜெர்மன் விஞ்ஞான நிபுணரையும் ருஷ்யா உபயோகப் படுத்திக் கொண்டு வருகிறது.

ஹைட்ரஜன் குண்டு உற்பத்திக்கு முதல்படி அணுகுண்டு உற்பத்திதான். ஏற்கெனவே ருஷ்யா அணுகுண்டைக் கண்டு பிடித்திருப்பதால், ஹைட்ரஜன் குண்டு அமெரிக்காவின் ஏகபோக பாத்தியமாக இருக்



ஜூல்ஸ் வர்ன்



நியூ யார்க் நகரத்தில் உள்ள ஒரு வீதி

கப் போவதில்லை என்பது நிச்சயம். ஹைட்ரஜன் சக்தி ஆராய்ச்சி நிபுணரான டாக்டர் ஹான்ஸ் பெதி அமெரிக்காவுக்கு முன்பே ருஷ்யா ஹைட்ரஜன் குண்டைப் பரீட்சை செய்து பார்க்கும் என்றும் கூறியிருந்தார். ஆனால் அமெரிக்க ஒற்றர்கள் அடுத்த வருஷத்துக்குள், நிச்சயமாக 1954-ம் வருஷத்துக்குள் ருஷ்யா ஹைட்ரஜன் குண்டை உற்பத்தி செய்துவிடும் என்று கூறுகிறார்கள்.

1949-ம் வருஷம் செப்டம்பர் மாதம் ருஷ்யா அணுகுண்டைப் பரீட்சை செய்து பார்த்த விவரம் அமெரிக்க ஒற்றர்களுக்குத் தெரிந்தது. அணு குண்டு வெடிப்பதைக் கண்டு பிடிக்கும் கருவிகளைக் கொண்டு அவர்கள் மேற்படி ரகசியத்தைச் சந்தேகத்துக்கு இடமின்றிக் கண்டுபிடித்து விட்டனர்.

அதன் காரணமாக, அணுகுண்டு வேறு யாருக்கும் தெரியாத, தன்னுடைய ஏகபோக பாத்தியமான ஆயுதம் என்று அமெரிக்கா கொண்டிருந்த பெருமிதம் தகர்ந்தது. அதிலிருந்துதான் அமெரிக்கா ஹைட்ரஜன் குண்டு உற்பத்தியில் தீவிரமாக முனைந்துள்ளது.

ருஷ்யா அணுகுண்டை உற்பத்தி செய்ய ஆரம்பித்துவிட்டதால், அமெரிக்கா சிறிதும் தாமதமின்றி ஹைட்ரஜன் குண்டுகளை உற்பத்தி செய்ய ஆரம்பிக்க வேண்டும் என்று விஞ்ஞான மேதாவியான டாக்டர் எட்வர்ட் டெல்லர் வற்புறுத்தினார். நோபல் பாசு பெற்ற விஞ்ஞானி டாக்டர் ஹெரால்டு ஸி. உரேயும் அதை ஆமோதித்தார். எனவே, அமெரிக்கா ஹைட்ரஜன் குண்டை உற்பத்தி செய்தே தீர வேண்டும் என்று ஜனாதிபதி ட்ருமன் இறுதியாகக் கட்டளையிட்டார்.

## ஹைட்ரஜன் குண்டும் சூரியனும்

சூரியன் ஒரு பிரம்மாண்டமான ஹைட்ரஜன் குண்டுதான் என்று விஞ்ஞான மேதாவிகள் வர்ணிக்கின்றனர். ஹைட்ரஜன் அல்லது ஜல வாயுவிலிருந்துதான் சூரியன் தன் சக்தி முழுவதையும் பெற்றிருக்கிறதாம். எனவே ஹைட்ரஜன் குண்டை ஒரு சிறிய சூரியனுக்கு ஒப்பிடலாம். சூரிய மண்டலம் வெடித்தால் இந்த உலகத்தின் கதி என்ன ஆகும் என்பதைக் கற்பனை செய்து கொள்ள முடியுமா? அது போலவே சிறிய சூரியனான ஹைட்ரஜன் குண்டு வெடித்தால், நூறு சதுர மைல் தூரத்தில் உள்ள சகல ஜீவராசிகளும் வஸ்துக்களும் நாசமாகி, இருந்த இடம் தெரியாமல் மறைந்து விடும்.

**மிகவும் சிறியதோரு ஹைட்ரஜன் குண்டு மிக மிகப் பெரிய அணு குண்டுக்குச் சமமான அழிக்கும் சக்தி உடையது என்று கூறப்படுகிறது.**

முதன் முதலாக, சென்ற மகா யுத்தத்தின் போது ஹிரோஷிமா, நாகசாகி நகரங்களில் அமெரிக்கர்கள் வீசிய சிறிய அணு குண்டுகள் பத்து சதுர மைல் தூரத்துக்கு எல்லாவற்றையும் அழித்து விட்டன. இதிலிருந்து மிகப் பெரிய அணு குண்டின் சக்தி எவ்வளவு? அதைக் காட்டிலும் பன் மடங்கு அதிக பயங்கரமான ஹைட்ரஜன் குண்டின் சக்தி எவ்வளவு என்பதை ஓரளவு ஊகித்துக் கொள்ளலாம்.

அத்தகைய ஒரு பெரிய ஹைட்ரஜன் குண்டு எழுநூறு சதுர மைல் தூரத்தில் உள்ள சகல வற்றையும் தூள் தூளாகச் செய்து விடும். மேற்படி குண்டிலிருந்து தப்புவதற்கு வழியே இல்லை.

தொண்ணூறு லட்சம் ஜனத் தொகையுள்ள லண்டன் மாநகரத்தின் விஸ்தீரணம் 690 சதுர மைல்கள்தான்.

எழுபத்தைந்து லட்சம் ஜனங்கள் வசிக்கும் நியூயார்க் நகரம் 305 சதுர மைல்கள்தான்.

நாற்பத்திரண்டு லட்சம் ஜனங்கள் வாழும் மாஸ்கோ நகரின் பரப்பு நூறு சதுர மைல்கள்தான்.

எனவே பிரிட்டிஷ், அமெரிக்க, ருஷ்ய வல்லரசுகளின் மேற்படி தலைநகர் ஒன்றை அடியோடு அழிப்பதற்கு ஒரே ஒரு ஹைட்ரஜன் குண்டு போதுமானது!

நியூ மெக்ஸிகோவில் (அமெரிக்கா) உள்ள அணு குண்டு ஆராய்ச்சிசாலை டைரக்டரும், முதல் அணுகுண்டுப் பரீட்சையை நேரில் நடத்தியவருமான டாக்டர் ஆப்பென் ஹெய்மர் என்ற விஞ்ஞான மேதாவி, ஒரு

விநாடியில் லட்சக் கணக்கான மக்களைக் கொல்லக் கூடிய ஹைட்ரஜன் குண்டை அமெரிக்காவும் ருஷ்யாவும் உற்பத்தி செய்தே தீரும் என்று சில வருஷங்களுக்கு முன் கூறியது இப்போது உண்மையாகி வருகிறது.

## மக்களை மலடாக்கும் கிரணவாயு

சூரியன் இயற்கையின் சிருஷ்டி; ஹைட்ரஜன் குண்டு மனிதனின் சிருஷ்டி.

1. சூரிய மண்டலத்தில் உள்ள ஜலவாயு கற்பனைக்கு எட்ட முடியாத உஷ்ணத்தினால் ஹீலியம் (Helium) ஆக மாறுகிறது. பிறகு அது மகத்தான சக்தியை உண்டு பண்ணுகிறது. அந்த சக்திதான் அகில உலகத்தையும் தகிக்கும் வெப்பமாக மாறுகிறது. பூமியில் சூரிய வெப்பம் இவ்வளவு உஷ்ணமாக இருக்கும்போது, சூரிய மண்டலத்தில் அது எவ்வளவு உஷ்ணமாக இருக்கும்! அந்த உஷ்ணத்தை யாராலும் தாங்க முடியாது.

அணுகுண்டை மேல் உறையாகக் கொண்ட ஹைட்ரஜன் அண்டம்தான் ஹைட்ரஜன் குண்டு எனப் படுகிறது. அது வெடித்தால் ஒரு சிறிய சூரிய மண்டலத்தின் உஷ்ணம் பூமியிலேயே ஏற்பட்டு விடுகிறது. ஹைட்ரஜன் குண்டு வெடித்ததும் எல்லாம் நாசமாவதற்கு அதுதான் காரணம்.

ஹைட்ரஜன் குண்டுக்கு இன்றியமையாத டியூடெரியம் (Deuterium) என்ற கனமான ஜலவாயுவை டன் கணக்கில் உற்பத்தி செய்வதில் அதிகக் கஷ்டமில்லை. ஆனால் மேற்படி டியூடெரியம் சட்டென்று பற்றிக் கொள்ளும் தன்மை வாய்ந்ததல்ல. எனவே கண் மூடிக் கண் திறப்பதற்குள் அது பற்றிக் கொள்ள வேண்டுமாயின் அது நன்றாகக் காய வேண்டும். அதை அவ்வாறு காய வைப்பதற்கு ஏராளமான செலவில் ட்ரிடியம் (Tritium) என்ற விசேஷ கன ஜலவாயுவை உற்பத்தி செய்ய வேண்டியிருக்கிறது.

ட்ரிடியம் உற்பத்தி செய்வதற்கு ஆறு லட்சம் கோடி (600,000,00,00,000) ரூபாய் செலவில் பலவிதமான யந்திரங்கள் தேவையாக இருக்கின்றன.

ட்ரிடியமும் டியூடெரியமும் கலந்து தயாரிக்கப்படும் ஹைட்ரஜன் குண்டு, சாதாரண பஞ்சை விட 100,000,000,000,000,000 மடங்கு அதிக வேகமாக வெடிக்கக் கூடியது என்று கணக்கிட்டிருக்கிறார்கள். அவ்வாறு வெடிப்பதற்கு, அணு குண்டைப் போல் ஹைட்ரஜன் குண்டுக்கும் யுரேனியம் (Uranium) என்ற உலோகம் தேவையாக இருக்கிறது.

2. ஹைட்ரஜன் குண்டுகள் வெடித்தால், அந்தக் குண்டுகளின் அளவுக்குத் தகுந்தாற்போல் நூற்றுக்கணக்கான சதுர மைல்களுக்கு உட்பட்ட பிரதேசம் மாத்திரம்தான் அழியும்; மற்றப் பிரதேசங்களுக்கு யாதொரு விபத்தும் நேராது என்று நினைப்பதற்கில்லை.

ஹைட்ரஜன் குண்டுகள் வெடித்தால் அவற்றிலிருந்து கிளம்பும் கிரண வாயு (Carbon—14) வெகு தூரத்துக்குப் பரவுகிறது. அது நாம் மூச்சிழுக்கும் காற்றிலும், குடிக்கும் தண்ணீரிலும், சாப்பிடும் உணவிலும் பரவி விடுகிறது. அதன் பலனாக தேகத்தில் உள்ள ஜீவ தாதுக்கள் (Cells) வெடித்து, மானிட வர்க்கம் முழுவதும் மலடாகிவிடும். அல்லது விகார உருவம் கொண்ட ராட்சதப் பிறவிகளாகி விடக் கூடும்.

3. நடுத்தரமான ஒரு ஹைட்ரஜன் குண்டை உற்பத்தி செய்ய ஒன்பது கோடி ரூபாய் செலவாகிறது என்று கணக்கிட்டிருக்கிறார்கள். பெரிய குண்டுக்கு இன்னும்

லண்டன் மாநகரின் ஒரு தோற்றம்



அதிகத் தொகை செலவாகும் என்பதைச் சொல்ல வேண்டியதில்லை அல்லவா?

ஆயிரம் கிலோடன் (Kiloton) எடையுள்ள ஒரு ஹைட்ரஜன் குண்டு ஹிரோஷிமாவில் வெடித்த அணு குண்டைக் காட்டிலும் ஐம்பது மடங்கு அதிக சக்தியுள்ளதாக இருக்கும். ஒரு கிலோடன் ஆயிரம் டன் வெடி மருந்துக்குச் சமமான சக்தி யுடையது.

அமெரிக்க அணு குண்டு ஆராய்ச்சிக் கமிட்டியின் தலைவரான பிரியன் மெக்மோகன் என்பவர் சில மாதங்களுக்கு முன் காலமானார். அவர் இறப்பதற்கு முன் கூறிய ஒரு பயங்கரமான ஜோஸ்யம் உண்மையாகி விடக் கூடுமோ என்று பல அமெரிக்கர்கள் நடுங்கிக் கொண்டிருந்தனர். இப்போது அமெரிக்கா ஒத்திகை பார்த்த ஹைட்ரஜன் குண்டுப் பரீட்சை அவர்களுடைய பயத்தை அதிகமாக்கி யிருக்கிறது.



டாக்டர் ஆப்பென் ஹெய்மர்

"சில நிமிஷங்களில் ஐந்து கோடி அமெரிக்கர்களை எரித்துச் சாம்பலாக்கக் கூடிய யுத்தம் எதிர் காலத்தில் ஏற்படக் கூடும்." — காலஞ் சென்ற மெக்மோகன் கூறியது இதுதான்!

## பிரளயத்தைத் தவிர்க்க முடியுமா?

ஜூல்ஸ் வர்ன் என்ற உலகப் பிரசித்தி பெற்ற பிரஞ்சு நூலாசிரியர் காலமாகி ஐம்பது ஆண்டுகள் ஆகின்றன. உலகத்தில் வரப்போகும் விஞ்ஞான அதிசயங்களைப் பற்றி அவர் கூறியது உண்மையாகி யிருக்கின்றன.

ஆகாய விமானம் என்று ஒரு சாதனம் கண்டு பிடிக்கப் படலாம் என்று யாரும் கனவிலும் நினைக்காத காலத்தில், விமானத்தில் உலகத்தைச் சுற்றி வரலாம் என்று கூறியவர் ஜூல்ஸ் வர்ன்தான். நீர் மூழ்கிக் கப்பல்கள் கண்டு பிடிக்கப் படுவதற்கு முன், யந்திரக் கப்பல்களில் கடலில் மூழ்கிச் செல்லலாம் என்று கூறியவரும் ஜூல்ஸ் வர்ன் தான். அவரது கூற்றைக் கண்டு அக் காலத்தில் உலகம் அவரை ஏளனம் செய்தது. ஆனால் இன்று அவரது தீர்க்க தரிசனம் உண்மையாகி விட்டது.

"உலகத்தில் கோடி கொப்பரைகளை (Boiler) உற்பத்தி செய்வதில் அமெரிக்கர்களுக்கு ஈடு வேறு யாரும் இல்லை. எனவே, அவர்கள் தயாரிக்கும் பிரம்மாண்டமான ஒரு கோடி கொப்பரை வெடித்து உலகமே நாசமாகும் காலம் வரலாம்."

ஐம்பது ஆண்டுகளுக்கு முன் ஜூல்ஸ் வர்ன் கூறியுள்ள மேற்படி வார்த்தைகள் உலக விஞ்ஞான மேதாவிகளுக்கு நடுக்கத்தை உண்டாக்கி யிருக்கின்றன. ஜூல்ஸ் வர்ன் அன்று வர்ணித்த கோடி கொப்பரைதான் இன்று ஹைட்ரஜன் குண்டு உருவமாக வந்திருக்கிறதோ என்று அவர்கள் மிகவும் கலக்கம் அடைந்திருக்கிறார்கள்.

ஹிரோஷிமாவிலும் நாகசாகியிலும் அமெரிக்கர்கள் அணு குண்டுகளை வீசிய உடனே தீர்க்கதரிசியான நூலாசிரியர் எச்.ஜி. வெல்ஸ் கூறிய வார்த்தைகளும் இப்போது உலக நாடுகளில் மிகுந்த திகிலை உண்டு பண்ணி யிருக்கின்றன.

"உலகில் உள்ள உயிர்களுக் கெல்லாம் முடிவு காலம் நெருங்கிக் கொண்டிருக்கிறது என்பதையே அணு குண்டுகள் வலியுறுத்துகின்றன" என்று எச். ஜி. வெல்ஸ் கூறினார். அமெரிக்கா, பிரிட்டன், ருஷ்யா இந்த மூன்று வல்லரசுகளும் ஈடுபட்டுள்ள ஹைட்ரஜன் குண்டு உற்பத்திப் போட்டி, இறுதியில் உலகம் கண்டிராத மகா பயங்கரமான யுத்தத்தில் வந்து முடியலாம்.

எனவே, உலகத்தில் அணு குண்டு, ஹைட்ரஜன் குண்டு உற்பத்தியை அறவே தடுத்தாலன்றி, எதிர் காலத்தில் ஏற்படக் கூடிய அதி பயங்கரமான பிரளயத்தைத் தவிர்க்க முடியுமா என்றே திகைக்க வேண்டி யிருக்கிறது.

மாஸ்கோ நகரின் ஒரு பகுதி



# வளையல் உரிமைப் போர்!

ரஜனி

—கொழும்பு, டிஸ. 5

இலங்கையிலுள்ள சில தேயிலைத் தோட்டங்களில் ஒரு புதுமாதிரியான போராட்டம் ஆரம்பித்திருக்கிறது. இது ஆடவர்களின் போராட்டமில்லை. சம்பள உயர்வுக்காகவோ அல்லது பிரஜா வுரிமை, ஓட்டுரிமைக்காகவோ நடக்கும் போராட்டமுமில்லை. வேலை நீக்கம் செய்யப்பட்டவர்களைத் திரும்ப வேலைக்கு எடுக்க வேண்டுமென்று வற்புறுத்துவதற்காக ஆரம்பித்த போராட்டமும் இல்லை. கைகளில் விரும்பிய வளையல்களை அணிந்து கொள்ளும் உரிமைக்காகத் தோட்டக் காட்டுப் பெண்மணிகள் ஆரம்பித்திருக்கும் நூதனமான போராட்டம்தான் இது!

ஹொல்லுகல என்ற ஒரு தேயிலைத் தோட்ட சூப்பரின்டெண்ட் தேயிலைக் கொழுந்து பறிக்கும் இந்தியப் பெண் தொழிலாளர் கைகளில் கண்ணாடி வளையல்களை அணிந்து வேலைக்கு வரக் கூடாதென்றும் இந்த உத்தரவை மீறும் பெண்களுக்கு வேலை கொடுக்க முடியாதென்றும் ஒரு கோட்டீஸ் போட்டார். வளையல்கள் உடைந்து கண்ணாடித் தூள்கள் தேயிலையுடன் கலந்து விட்டால் பாரதூரமான அபாயத்தை விளைவிக்குமென்பது அவர் அபிப்பிராயம். அவருடைய உத்தரவை மீறிய ஒரு டஜன் இந்தியப் பெண் தொழிலாளருக்கு அவர் வேலை கொடுக்க மறுத்தார்.

தேயிலையைக் குவித்து வைத்திருக்கும் தொழிற் சாலையிலுள்ள கண்ணாடி ஜன்னல்களும் கண்ணாடி கோப்பைகளும் உடையா வரம்பெற்றவை யென்பது அவர் அபிப்பிராயம் போலும். பல தலைமுறைகளாகக் கண்ணாடி வளையல்கள் அணிந்து பெண் தொழிலாளர் வேலை செய்வதுதான் அபாயத்தை விளைவிக்கக் கூடியதாகத் தோன்றி விட்டது.

இதில் இன்னொரு விஷயமும் கவனிக்கத் தருக்தது. தேயிலையை வடிகட்டிப் பானம் செய்வார்களே தவிர கறி, கூட்டு, சாம்பார் செய்து சாப்பிடுவதில்லை! தப்பித் தவறிக் கண்ணாடித் துண்டுகள் கலந்து விட்டால் கூட அவை வடிகட்டும் பொழுது வெளியே தங்கிவிடும். தேயிலையில் புழுதியோ பானத்தோடு பானமாகக் கலந்து குடிப்பவர்களின் ஆரோக்யத்தையே குடித்து விடுகிறது! இந்த நிலைமையில் ஏழை எளிய பெண் தொழிலாளர் வறுமையின் காரணமாகக் கண்ணாடி வளையல்களையேனும் அணிந்து அழகு பார்க்கும் உரிமையைத் தடை செய்ய நியாயமே யில்லை,

பெண்கள் ஆனமட்டும் முறையிட்டுப் பார்த்தும் தோட்ட சூப்பரின்டெண்ட் கேட்காதபடியால் கண்ணாடி வளையல்கள் அணியும் உரிமைக்காக ஒரு போராட்டத்தையே நடத்துவதென்று தீர்மானித்தார்கள். கண்ணாடி வளையல் அணிந்து வேலைக்கு வரும் பெண்களின் எண்ணிக்கை அதிகரித்தது. அவர்கள் எல்லோருக்கும் தோட்ட சூப்பரின்டெண்ட் வேலையில்லை யென்று சொல்லி விட்டார். இந்தப் போராட்டம் அதே சூப்பரின்டெண்டின் நிர்வாகத்திலுள்ள வேறு சில தோட்டங்களுக்கும் பரவி இப்பொழுது மொத்தம் சுமார் 200 பெண் தொழிலாளருக்கு வேலை மறுக்கப்பட்டிருக்கிறது. தோட்ட சூப்பரின்டெண்ட் இன்னமும் விட்டுக் கொடுக்க மறுத்தால் இதர தோட்டங்களுக்கும் இந்த வளையல் போராட்டம் பரவிவிடும் போலத் தோன்றுகிறது.

இந்தியத் தொழிலாளர் குடியேற்றச் சட்டத்தின் 6 (2) வது ஷரத்தின்படி தோட்டத்தில் நிரந்தரமாக இருக்கும் ஒரு தொழிலாளி, வேலை செய்யத் தயாராயிருந்து வேலை கேட்டால் அவருக்கு முதலாளி வேலை கொடுத்தே தீரவேண்டும். வேலையில்லை யென்றால் சம்பளமாவது கொடுத்தே ஆகவேண்டும். லேபர் கமிஷனருக்கு இலங்கை தொழிலாளர் காங்கிரஸ் இந்தச் சட்டத்தைச் சுட்டிக் காட்டி வேலை கொடுக்க மறுக்கப்படும் பெண் தொழிலாளர் வேலை செய்யத் தயாராயிருப்பதனால் அவர்களுக்குச் சம்பளம் கொடுத்தாக வேண்டுமென்றும் கண்ணாடி வளையல்கள் அணிவதைத் தடை செய்யும் உத்தரவு வாபஸாக வேண்டுமென்றும் இதற்காக ஒரு சமரச மகாநாட்டை உடன் கூட்ட வேண்டுமென்றும் கேட்டுக் கொண்டிருக்கிறார்கள்.

தேயிலைத் தோட்டப் பெண் தொழிலாளர் பிரத்யேகமாக நடத்தும் இந்த வளையல் போராட்டம் பொது ஜனங்களின் கவனத்தை விசேஷமாகக் கவர்ந்திருக்கிறது. பெண்கள் மனம் வைத்துக் கிளர்ச்சி செய்யக் கிளம்பி விட்டால் அவர்கள் தங்கள் காரியத்தைச் சாதித்தே தீருவார்களென் பதில் யாருக்கும் சந்தேகமில்லை.

# மியூஸிக் அகாடமி, மதராஸ்

## வெள்ளி விழா சங்கீத மகாநாடும் சங்கீதக் கச்சேரிகளும்

(மியூஸிக் அகாடமியைச் சேர்ந்த ஸ்தாபனங்களின் ஒத்துழைப்புடன் நடைபெறுகிறது)

**19 - 12 - 1952 முதல் 1 - 1 - 1953 வரை**

மேன்மை தங்கிய சென்னை கவர்னர் அவர்கள் திறந்து வைப்பார்கள். வித்வான் காரைக்குடி சாம்பசிவய்யர் அவர்கள் மகாநாட்டுக்குத் தலைமை வகிப்பார்கள். ஸ்ரீ கே. சீனிவாசன் அவர்கள் 'சதஸி'ற்குத் தலைமை வகிப்பார்கள்.

**மயிலாப்பூர் சுந்தரேஸ்வரர் ஹாலில் :: ஆரம்ப தினக் கச்சேரி 19-12-1952 மாலை 6-15 மணிக்கு**

வீணை வித்வான் காரைக்குடி சாம்பசிவய்யர் } — வீணை
ஸ்ரீமதி ரங்கநாயகி அம்மாள் }
காரைக்குடி ஸ்ரீ முத்து அய்யர் —மிருதங்கம்

பி. எஸ். ஹைஸ்கூல் ஹாலில் காலை 8 முதல் 10 மணிவரை சங்கீத சர்ச்சைகளும் 12 முதல் மாலை 2 மணிவரை சங்கீதப் போட்டிகளும் நடைபெறும்

**தினசரி நிகழ்ச்சி விவரங்கள் (D. V.)**

| பி. எஸ். ஹைஸ்கூல் ஹாலில் | மயிலாப்பூர் சுந்தரேஸ்வரர் ஹாலில் | | |
|---|---|---|---|
| **20 - 12 - 52 சனிக்கிழமை** | | | |
| மாலை 2-45 முதல் 3-45 வரை | மாலை 4-15 முதல் 5-45 வரை | மாலை 5-15 முதல் 8-30 வரை | இரவு 9-30 முதல் 11-30 வரை |
| தேதியூர் நாராயணசாமி<br>திருக்கோடிகாவல் கிருஷ்ணமூர்த்தி<br>மதுரை ராமசாமி | டி. ஆர். பாலசுப்ரமணியம்<br>திருவானைப்புத்தூர் கிருஷ்ணமூர்த்தி<br>மைலட்டூர் ராமச்சந்திரன் | ஆலத்தூர் சகோதரர்கள்<br>மாயூரம் கோவிந்தராஜப் பிள்ளை<br>பழனி<br>வில்வாத்திரி அய்யர் | பூதலூர் கிருஷ்ணமூர்த்தி<br>சாஸ்திரி & கல்பகம்<br>—கோட்டுவாத்தியம், வீணை<br>திருச்சூர் அப்புவய்யர் |
| **21 - 12 - 52 ஞாயிற்றுக்கிழமை** | | | |
| என். சாந்திமதி<br>கோமளவல்லி சீனிவாஸன்<br>மோகினி | எஸ்.வி. பார்த்தசாரதி<br>வி. சேதுராமய்யா<br>வேலூர் ராமபத்ரன் | டி. கே. பட்டம்மாள்<br>திருவன்மூர் சுப்ரமண்யம்<br>குஞ்சுமணி, வைத்திய நாதன் | திருவிடைமருதூர்<br>பி. எஸ். வீருசாமிப் பிள்ளை<br>& பார்ட்டி—நாதஸ்வரம் |
| **22 - 12 - 52 திங்கட்கிழமை** | | | |
| மதுரை டி. வெங்கடேசன்<br>கோவை தக்ஷிணாமூர்த்தி<br>பி. சீனிவாசன் | ராமநாதபுரம் கிருஷ்ணன்<br>ஆர். கே. வெங்கட்ராமசாஸ்திரி<br>ராமநாதபுரம் ராகவன் | மகாராஜபுரம்<br>சௌடையா<br>பழனி, வில்வாத்திரி | பாபு அய்யங்கார்—ஜலதரங்கம்<br>வி. சேதுராமய்யா<br>மதுரை கிருஷ்ண அய்யங்கார் |
| **23 - 12 - 52 செவ்வாய்க்கிழமை** | | | |
| எண்ணப்பாடம் ராமச்சந்திரன்<br>டி. எஸ். மணி<br>குருவாயூர் துரை | கனக்காடு ராமநாராயணன்<br>ஆர். எஸ். கோபாலகிருஷ்ணன்<br>காசிகோவில் தானு | அரியக்குடி<br>பாப்பா<br>மணி | டி. வெங்கடசாமி நாயுடு<br>—வயலின்<br>மதராஸ் கண்ணன் |

| | | | |
|---|---|---|---|
| | **24 - 12 - 52 புதன்கிழமை** | | |
| ஸ்ரீவைகுண்டம் ராம அய்யங்கார்<br>ராமச்சந்திரய்யா<br>கும்பகோணம் என். கணேசன் | மதுரை சோமசுந்தரம்<br>சம்பந்தம் பிள்ளை<br>திருவாரூர் காசராஜன் | மதுரை மணி அய்யர்<br>ராஜமாணிக்கம் பிள்ளை<br>முருகபூபதி, ஆலங்குடி ராமசந்திரன் | டி. என். சுவாமிநாதப் பிள்ளை<br>—புல்லாங்குழல்<br>டி. என். கந்தசாமியர், பழனி |
| | **25 - 12 - 52 வியாழக்கிழமை** | | |
| மதுரை வைத்தியநாதன்<br>சாலக்குடி கிருஷ்ணன்<br>கோயம்புத்தூர் ஜீவானந்தன் | சாத்தூர் சுப்பிரமணியம்<br>கண்டதேவி அழகிரிசாமி<br>உமையாள்புரம் வெங்கடராமன் | குமாரி கமலா<br>—பரதநாட்டியம் | அண்ணாசாமி பாகவதர்<br>—ஹரி கதை |
| | **26 - 12 - 52 வெள்ளிக்கிழமை** | | |
| பழனி விஜயலக்ஷ்மி<br>பாபநாசம் பாலசரஸ்வதி<br>கனகாம்புஜம் | ராமச்சந்திர சாஸ்திரி<br>—புல்லாங்குழல்<br>கோவை தக்ஷிணாமூர்த்தி<br>பள்ளத்தூர் லக்ஷ்மணன் | செம்மங்குடி<br>பாப்பா<br>மணி<br>கோதண்டராமய்யர் | பிருந்தா, முக்தா, அபிராமி<br>தஞ்சாவூர் ராஜம் அய்யர் |
| | **27 - 12 - 52 சனிக்கிழமை** | | |
| விஸ்வநாதன் —புல்லாங்குழல்<br>கும்பகோணம் ஜீவானந்தன்<br>டி. ரங்கநாதன் | கே. வி. நாராயணசாமி<br>வால்குடி ஜெயராமன்<br>டி. கே. மூர்த்தி. | எம். எஸ். சுப்புலக்ஷ்மி<br>டி. என். கந்தசாமியர்<br>மாவேலிக்கரை கிருஷ்ணன்<br>கோதண்டராமய்யர் | மைசூர் துரைசாமி அய்யங்கார் —வீணை<br>கிருஷ்ணமணி |
| | **28 - 12 - 52 ஞாயிற்றுக்கிழமை** | | |
| பி. ராஜம் அய்யர்<br>திருப்பாம்புலியூர் ராஜம் அய்யர்<br>ராமநாதபுரம் ராகவன் | மணக்கால் ரங்கராஜன்<br>டி. பாலசுப்பராயலு<br>மதுரை கிருஷ்ண அய்யங்கார் | ஜி. என். பாலசுப்பிரமணியம்<br>கிருஷ்ணன்<br>மணி | ரவிசங்கர் & பார்ட்டி<br>—ஸிதார் |
| | **29 - 12 - 52 திங்கட்கிழமை** | | |
| விஞ்சமூரி வரதராஜன்<br>ராமநாதபுரம் வெங்கடாசலம்<br>சோமசுந்தர் | ஏ. கல்யாணகிருஷ்ணபாகவதர்<br>தியாகராஜன்<br>நாகராஜன் | பாலசரஸ்வதி<br>—பரதநாட்டியம் | கே. எஸ். நாராயணசாமி வீணை<br>மாவேலிக்கரை கிருஷ்ணன்<br>—மிருதங்கம் |
| | **30 - 12 - 52 செவ்வாய்க்கிழமை** | | |
| வைத்தியலிங்கம்<br>ஹரிஹரன்<br>வி. ரங்கநாதன் | மாயூரம் ராஜம்<br>ராமநாதபுரம் வேணுகோபால்<br>திருச்சி ராகவன் | சித்தூர் சுப்பிரமணியப் பிள்ளை<br>விஸ்வநாத சர்மா<br>முருகபூபதி | ரவிசங்கர் & பார்ட்டி<br>—ஸிதார் |
| | **31 - 12 - 52 புதன்கிழமை** | | |
| செம்பை நாராயணன்<br>டி. கே. ராமச்சந்திரன்<br>மகாதேவன் | கெ. எஸ். கிருஷ்ணன்<br>சாலக்குடி நாராயணசாமி<br>கல்பாத்தி ராமநாதன் | செம்பை<br>கிருஷ்ணன்<br>ரகு, ஆலங்குடி ராமச்சந்திரன் | எம்பார் விஜயராகவாச்சாரி<br>—ஹரிகதை |
| | **1 - 1 - 53 வியாழக்கிழமை** | | |
| குருவாயூர் பொன்னம்மாள்<br>தனலக்ஷ்மி, ஞானம் | 5-15 மணிக்கு<br>ரதன் | 6-30 மணிக்கு<br>ஹேமமாலினி-பரதநாட்டியம் | |

சீஸன் டிக்கெட்டுகள் : ஸ்பெஷல் ரிசர்வ்டு ரூ. 70/- (பிட்), ரூ. 60/- (மேடை), முதல் வகுப்பு ரூ. 25/-

சீஸன் டிக்கெட்டுகள் கிடைக்குமிடங்கள் : மியூஸிக் அகாடமி ஆபீஸ், 115-E, மௌபரீஸ் ரோடு, மதராஸ்-14
ஸவுத் இந்தியா மியூஸிக் எம்போரியம், 3, பிராட்வே, மதராஸ். ரஸிக ரஞ்ஜனி சபா, மயிலாப்பூர், மதராஸ்.



# சித்திரக் குள்ளன்

ராஜு

**கு**ள்ளனை நம்பினாலும் நம்பலாம், குள்ளனை நம்பக் கூடாது என்று சொல்லுவார்கள். அப்படியானால் சித்திரக் குள்ளனை நம்பலாமா? ஒரு ஊரில் ஒரு சித்திரக் குள்ளன் இருந்தான். பெயருக்கு ஏற்றாற் போல அவன் நாலு அல்லது ஐந்து அங்குலம் உயரம்தா னிருப்பான். அவனுக்கு எப்பொழுதும் ஏதாவது விஷமம் செய்து, வேடிக்கையாகச் சுற்றி வருவதுதான் வேலை. அவனைக் கண்டால் அந்த ஊரில் இருப்பவர்கள் யாவரும் பயப்படுவார்கள். எல்லோருக்கும் சித்திரக் குள்ளனை எப்படியாவது ஒழித்துக் கட்ட வேண்டும் என்று எண்ண மிருந்தபோதிலும் அவனிடம் நெருங்க ஒருவருக்கும் தைரியம் இல்லை.

சித்திரக் குள்ளன் உருவத்தில் சிறியவனாக இருந்தாலும் பெரிய மாயாவி. அடிக்கடி வெவ்வேறு உருவங்களில் மாறும் சக்தி வாய்ந்தவன். அவனுக்குச் சிறுவர்களிடம் விஷமங்கள் செய்வதிலும் அவர்களைத் துன்புறுத்துவதிலும் மிகவும் ஆசை. அதனால் அந்த ஊரில் சிறுவர்களெல்லாம் எப்பொழுது பார்த்தாலும் எங்கேயாவது சித்திரக் குள்ளன் ஒளிந்து கொண்டிருந்து தங்களைத் துன்புறுத்தப் போகிறானோ என்று பயந்த வண்ணமாக இருப்பார்கள்.

அந்த ஊரில் கிருஷ்ணன் என்ற ஒரு சிறுவன் இருந்தான். அவன் மிகவும் புத்திசாலி. அவன் வகுப்பில் அவன்தான் முதல். உபாத்தியாயருக்கு அவன்மீது மிகவும் ஆசை. சித்திரக் குள்ளன் கிருஷ்ணனிடம் என்ன விஷமம் செய்யலாம் என்று எதிர்பார்த்துக் கொண்டிருப்பான். ஏனென்றால் கிருஷ்ணன் சித்திரக் குள்ளனை எப்படியாவது ஒழிக்க வேண்டும் என்று திட்டம் இட்டுக் கொண்டிருப்பதைச் சித்திரக் குள்ளன் நன்றாக அறிவான். ஆனால் சித்திரக் குள்ளனிடம் கிருஷ்ணனுடைய திட்டம் ஒன்றும் பலிக்காது. எப்படிப் பலிக்கும்? சித்திரக் குள்ளனிடம் தான் நிமிஷத்துக்கு நிமிஷம் வேறு உருவங்களாக மாறும் சக்தி இருக்கின்றதே!

கிருஷ்ணனுக்கு வெண்ணெய் மீது வெகு பிரியம். ஒருநாள் கிருஷ்ணன் பள்ளிக்கூடத்துக்குப் புறப்பட்டுக் கொண்டிருக்கும் பொழுது, "கிருஷ்ணா, கிருஷ்ணா! உனக்கு வெண்ணெய் என்றால் மிகவும் பிடிக்குமே! நல்ல வெண்ணெய் வீட்டில் இருக்கிறது, இந்தா!" என்று கிருஷ்ணனின் கையில் அவன் அம்மா வெண்ணெயைக் கொடுத்தாள். கிருஷ்ணன் வெண்ணெயை வாயில் போட்டுக் கொள்ளும் சமயத்தில் வெண்ணெய் அவன் கையிலிருந்து நழுவிப் பறந்து போய்க் கிருஷ்ணனுக்கு எதிரில் திடீரென்று தோன்றிய ஒரு பெரிய கரடியின் வாய்க்குள் சென்றது. அந்தக் கரடி பெரிதாகச் சிரித்தது. அடுத்த நிமிஷத்தில் கரடி இருந்த இடத்தில் சித்திரக் குள்ளன் தோன்றினான். "கிருஷ்ணா, நீ ஏமாந்தாயா?" என்று பரிகசித்துக் கொண்டே சித்திரக்குள்ளன் அவ்விடத்தை விட்டு மறைந்தான். கிருஷ்ணன் ஏமாந்ததைப் பார்த்த மற்றைய சிறுவர்கள் கைகொட்டிச் சிரித்தார்கள். அவமானமடைந்த கிருஷ்ணன் வருத்தத்துடன் பள்ளிக்கூடத்திற்குச் சென்றான்.

பள்ளிக்கூடத்தில் கணக்கு உபாத்தியாயர் பாடம் சொல்லிக் கொடுத்துக் கொண்டிருந்தார். மேஜையின் மீது அன்றுதான் சலவை செய்து வந்த தமது வெள்ளை சரிகைத் தலைப்பாகையை வைத்துவிட்டுக் கரும் பலகையில் சாக்குக் கட்டியினால் ஏதோ கணக்குப் போட்டுக் கொண்டிருந்தார். அப்பொழுது அவருக்கு அவர் கையிலிருந்த சாக்குக்கட்டி சித்திரக்குள்ளனாக மாறியது போல் தோன்

றியது. பயந்த உபாத்தியாயர் அவர் கையிலிருந்த பெரிய புதிய சாக்குக் கட்டியைக் கீழே போட, அது சுக்கு நூறாக உடைந்து சிதறிப் போயிற்று. உபாத்தியாயர் அவமானமடைந்தார். அந்தச் சமயத்தில் சித்திரக் குள்ளன் என்ன செய்தான் தெரியுமா? உபாத்தியாயர் மேஜையின் மீது வைத்திருந்த பெரிய கருப்பு மசிக் கூட்டுக்குள் சென்று வெளியே வந்தான். பிறகு பக்கத்தில் இருந்த சிவப்பு மசிக்கூட்டுக்குள் சென்று வெளியே வந்தான். உடனே மேஜையின் மேலிருந்த உபாத்தியாயரின் தலைப்பாகை மீது இரண்டு நிமிஷங்கள் படுத்துத் தூங்கினான்.

அதைப் பார்த்த உபாத்தியாயர் 'அடாடா, என் வெள்ளைத் தலைப்பாகை முழுதும் சிவப்பு மையாகவும் கருப்பு மையாகவும் ஆகிவிட்டதே' என்று தலைப்பாகையில் படுத்திருந்த சித்திரக்குள்ளனைப் பிடிக்கப் போனார். சித்திரக் குள்ளன்தான் மறைந்து விட்டானே! அவனை எப்படி பிடிக்க முடியும்? "எங்கே அந்தச் சித்திரக்குள்ளன்" என்று உபாத்தியாயர் உரக்கக் கத்தினார். வகுப்பில் இருந்த பையன்கள் யாவரும் இங்கும் அங்குமாகச் சுற்றிப் பார்த்தார்கள்.

அப்பொழுது உபாத்தியாயர், "அதோ சித்திரக் குள்ளன்" என்று கிருஷ்ணனுடைய சட்டைப் பையிலிருந்து எட்டிப் பார்த்துக் கொண்டிருந்த சித்திரக் குள்ளனைக் கோபத்துடன் சுட்டிக் காண்பித்தார். "எங்கே? எங்கே?" என்று கிருஷ்ணன் தன் சட்டைப் பையைப் பார்ப்பதற்குள் சித்திரக் குள்ளன் அவன் சட்டைப் பையிலிருந்து கீழே குதித்து ஓடிவிட்டான். கிருஷ்ணன் மீது உபாத்தியாயர் மிகவும் கோபம் கொண்டார். "கிருஷ்ணா, நீ வேணுமென்றே சித்திரக்குள்ளனை உன் ஜேபியில் வைத்துக் கொண்டு பள்ளிக்கூடத்திற்கு வந்தாயல்லவா? உடனே வகுப்பை விட்டு வெளியே போ" என்று உத்தர விட்டார். கிருஷ்ணன் அழுது கொண்டே தான் அதற்குப் பொறுப்பாளி இல்லை என்று சொல்லியும் உபாத்தியாயர் கேட்கவில்லை. கிருஷ்ணன் வகுப்பை விட்டு வெளியே வந்தான். வெளியே நின்று கொண்டிருந்த சித்திரக் குள்ளன் கிருஷ்ணனைப் பார்த்துக் கைகொட்டிச் சிரித்தான்.

சித்திரக்குள்ளனை எப்படியாவது ஒழித்துக் கட்ட வேண்டும் என்று அவன் தீர்மானித்தான்.

தீபாவளிக்கு முதல் நாள் இரவு கிருஷ்ணன் தன் வீட்டுத் திண்ணையில் சிநேகிதர்களுடன் வெடிகளையும் வாணங்களையும் கொளுத்திக் கொண்டிருந்தான். அந்தச் சமயத்தில் கிருஷ்ணனுக்குச் சமீபத்தில் சித்திரக் குள்ளன் தோன்றினான். கிருஷ்ணனுக்கு எந்த விதமான துன்பங்கள் செய்யலாம் என்று யோசித்த வண்ணமாக இருந்தான். அப்பொழுது கிருஷ்ணன் தைரியம்கொண்டு, "ஏ! சித்திரக்குள்ளா, உன்னை எதிர்பார்த்துக்கொண்டு தானிருந்தேன். நீயும் வந்தாய். வரவர உன் மீது எனக்கு மிகவும் பிரியம் அதிகரித்துக் கொண்டு வருகிறது. நீ அடிக்கடி உருவம் மாறுவதைக் கண்டு நான் ஆச்சரியம் அடைகிறேன்" என்று சொன்னான். சித்திரக்குள்ளன் சந்தோஷமடைந்து 'அப்படியா?' என்று கிருஷ்ணனிடம் நெருங்கினான். கிருஷ்ணன் சற்று பயத்துடன் சித்திரக்குள்ளனைத் தட்டிக் கொடுத்தான். "சித்திரக்குள்ளா, உன்னை ஒன்று கேட்க வேண்டும் என்று வெகு நாளாக ஆசை" என்றான் கிருஷ்ணன்.

"என்ன? என்ன? சொல்லு!" என்றான் சித்திரக்குள்ளன்.

"நீ எந்த உருவமாகவும் மாறுவாயா?"

"ஓ! எந்த உருவமாகவும் மாறுவேன். ஒரு குண்டூசியைப் போல் மாறுவேன். ஒரு பெரிய மலையைப் போலவும் மாறுவேன்!"

"எந்த உருவமாக மாறினால் என்ன! ஓர் உருவத்திலாவது நீ இரண்டு நிமிஷங்களுக்கு மேல் இருந்து நான் பார்த்ததில்லை!" என்றான் கிருஷ்ணன்.

"அப்படிச் சொல்லாதே. வேணுமென்றால் எந்த உருவத்திலும் எவ்வளவு நிமிஷங்கள் வேண்டுமானாலும் இருப்பேன்!"

"சரி, அப்படியானால் யானை வெடியைப் போலப் பத்து நிமிஷங்கள் இரு. போதும்."

"அப்படியா?" என்று பெரிதாகச் சிரித்தான் சித்திரக்குள்ளன். அடுத்த நிமிஷத்தில் சித்திரக்குள்ளன் இருந்த இடத்தில் ஒரு யானை வெடி தோன்றிற்று.

அதைப் பார்த்த கிருஷ்ணன் சந்தோஷங் கொண்டான். கையில் ஊதுவத்தியை எடுத்துக் கொண்டான். அரை நொடியில் புதிய யானை வெடியிடம் நெருங்கினான். திரியைக் கொளுத்தி விட்டான்.

யானை வெடியிலிருந்து "அநியாயம்! என்னை ஏமாற்றி விட்டாய்!" என்ற குரல் கேட்டது. கேட்டு என்ன பிரயோஜனம்? 'தடால்' என்று பெரிய சப்தத்துடன் யானை வெடி வெடித்தது. அத்துடன் சித்திரக் குள்ளனும் மறைந்தான்.

கிருஷ்ணனுடைய சாமர்த்தியத்தை எல்லோரும் புகழ்ந்து கொண்டாடினார்கள்.



# நீரிழிவு

## ஏழு நாட்களில்

## குணமாகும்!

●

எவ்வளவு நாட்பட்டதாயினும் மிகக் கடுமையாக இருப்பினும் நவீன ரஸாயன முறைத் தயாரிப்பான **வீனஸ் சார்ம் நீரழிவு** (DIABETES) வியாதியை முற்றிலும் குணமாக்கி விடும். அடங்காத பசி, மரண தாகம், அடிக்கடி சிறுநீர் பிரிதல், சொரி சிறங்கு ஆகிய இவைகளே இவ்வியாதியின் முக்கிய அறிகுறிகள். இதை கவனிப்பின்றி விட்டு விட்டால் கட்டி, பிளவை, கண் கோளாறுமுதலிய உபத்திரவங்களில் முடியும். **வீனஸ் சார்ம்** ஆயிரக்கணக்கானவர்களை மரிப்பினின்றும் பிழைக்க உதவியுள்ளது. உபயோகித்த மறுதினமே நீரிலுள்ள சர்க்கரைச் சத்தைக் குறைத்து இதமளிக்கும். இரண்டு மூன்று தினங்களில் பாதி குணமடைந்ததாக நீங்களே உணர்வீர்கள். ஆகார நிபந்தனை கிடையாது. இலவசமான விபரங்கள் அடங்கிய ஆங்கில காட்லாகிற்கு எழுதவும்.

●

**50 மாத்திரைகள் கொண்ட பாட்டில் ரூ. 6-12-0**

(தபால் செலவு இலவசம்)

●

**வீனஸ் ரிஸர்ச் லாபரடரி (K.M.)**

**தபால் பெட்டி நெ. 587, கல்கத்தா**

# 8 சுலபமான சக்தியுள்ள சிகிச்சைகள்

1. அஜீரணக் கோளாறுகளுக்கு
2. மலேரியா முதலிய ஜுரத்துக்கு
3. வயிற்றுக் கடுப்பு, காலராவுக்கு
4. ஜலதோஷம், இன்புளுயன்ஸா
5. இருமலுக்கு
6. எல்லாவித பிடிப்பு, வலிகளுக்கு
7. நரம்பு வியாதிகளுக்கு
8. இரத்த நோய்களுக்கு



## டி சேனின்

# மருந்து பெட்டி

அடிக்கடி மிகவும் அபாயகரமான வியாதிகளை உண்டாக்கும் அன்றாட சாதாரண உபாதைகளுக்கு ஓர் சிறந்த நிவாரணி. இந்த மருந்துப் பெட்டியில் எட்டுவிதமான மருந்துகள் அடங்கியுள்ளது. அவைகளைத் தனித்தும் சேர்த்தும் உட்கொள்ளலாம். விபரங்களடங்கிய குறிப்பு கேட்பவர்களுக்கு அனுப்பி வைக்கப்படும்.

**PRICES**

Size 1. Rs. 3/- Size 3. Rs. 9/-
Size 2. Rs. 5/- Size 4. Rs. 17/-




**J.&J. DeChane**

RESIDENCY ROAD-HYDERABAD-Dn




ராஜேசுவரி நடராஜன்

## ராதா சொல்லுகிறாள் :

அன்று மாலை, ஆபீஸிலிருந்து வரும்போதே கூப்பிட்டுக்கொண்டே வந்தார் 'அவர்.' முகத்தைப் பார்க்கும்போதே ஏதோ விஷயம் இருக்க வேண்டுமென்று நான் தீர்மானித்துக் கொண்டேன். அதற்கேற்றாற் போலவே 'நாளைக் காலை உன் தங்கை மல்லிகாவும், அவள் கணவன் மணியும் வருகிறார்களாம்' என்றார்.

மறுநாள், அவர் குறிப்பிட்டதுபோலவே மல்லிகாவும் அவள் கணவனும் வரத்தான் வந்தனர். மல்லிகாவைக் கண்டதும் ஒரு கணம் திடுக்கிட்டு விட்டேன். சுமார் நான்கு மாதங்களுக்கு முன் நான் பார்த்த மல்லிகா எங்கே! இப்பொழுது நான் பார்க்கும் மல்லிகா எங்கே! முன்பு சதா சர்வ காலமும் சிரிப்பும் விளையாட்டுமாக நான் பார்த்த மல்லிகாவுக்கும், இப்பொழுது வேதனையில் வாடும் மல்லிகாவுக்கும் எவ்வளவு வித்தியாசம்! என்ன காரணமோ தெரியவில்லை. இதுவரை அவளை எவ்வளவோ கேட்டுப் பார்த்தும் அவள் உண்மையைச் சொல்லவில்லை. எப்படியும் அதைத் தெரிந்து கொள்ளாமல் விடுவதில்லை.

## மல்லிகா சொல்லுகிறாள் :

ராதா அக்காவின் வாழ்க்கைதான் எவ்வளவு இன்பமாகச் செல்லுகிறது! என் வாழ்க்கை மட்டும் ஒரே சோகமயமாகச் செல்வதற்கு நான் என்ன பாவத்தைப் பண்ணினேன்! பார்க்கப் போனால் அக்காவைக் காட்டிலும் நான் அழகி என்று பெயர். கல்யாணத்தின்போது செய்திருப்பதிலும் எனக்குத்தான் அதிகம் செய்திருக்கிறார்கள். இருந்தும், அவளுடைய இன்ப வாழ்க்கை ஏனோ எனக்குக் கிடைக்கவில்லை.

அத்திம்பேர் தம் வீட்டுக்கு வரும்படி எங்களை மிகவும் வற்புறுத்திக் கூப்பிட்டார். அதன்பேரில் தான் இன்று காலை இங்கு வந்தோம். வரும்போதே அந்தக் காட்சிதானா என் கண்களில் பட வேண்டும்! சமையலறையில் உட்கார்ந்து அத்திம்பேர் அக்காவுக்குக் கூடமாட ஒத்தாசை செய்து கொண்டிருந்தார். நாங்கள் வரும்போது அவர் அரிவாள் மணையில் உட்கார்ந்து, பெண்களைப் போலக் கறிகாய் நறுக்கிக் கொண்டிருந்தார். அக்கா சமைத்துக் கொண்டிருந்தாள். நுழையும் போதே அக்காட்சியைக் கண்டதும் என் முகம் கன்றி விட்டது. மெதுவாக அவரைப் பார்த்தேன். அவரும் தம் உணர்ச்சிகளை யடக்க மிகவும் சிரமப்பட்டுக் கொண்டிருந்தார். அவருக்கும் எல்லோரையும்போல மனைவியுடன் கொஞ்சிக் குலாவ வேண்டும் என்று ஆசை யிருக்காதா! மாலை வேளைகளில் அவரவர்கள் தத்தம் மனைவிகளுடன் வெளியே போவதைக் கண்டு, தானும் அம்மாதிரி யில்லையே என்ற ஏக்கம் அவர் மனத்தில் எழாதா! எல்லோருக்கும் கிடைக்கும் இன்ப வாழ்வு தனக்கும் கிடைக்க வில்லையே என்ற பொறாமை உணர்ச்சி அவர் உள்ளத்திலும் தோன்றாதா! அவரும் மனிதர்தானே! மனித உணர்ச்சி யில்லாமலா போகும்!

எந்தக் காரணத்தாலோ, எனக்கும் அவருக்கு மிடையில் பெரிய பிளவு உண்டாகி விட்டது. அது வரவர அதிகமாகிக் கொண்டு வருகிறதே யொழியக் குறைகிற வழியாகக் காணோம். எப்படியாவது அதை அடியோடு அகற்றப் பாடுபட வேண்டும்.

## மணி :

இங்கு வந்தது முதல் எனக்கு என்னவோ போலிருக்கிறது. 'ராதா, ராதா' என்று அடிக்கடி கூப்பிடும் சந்துருவின் குரலும், 'இதோ வந்து விட்டேன்' என்று குரல் கொடுத்துக் கொண்டே வரும் ராதாவின் உருவமும் என்னைச் சித்திரவதை செய்கின்றன. சந்துரு அதிர்ஷ்டசாலி. என்ன இன்ப வாழ்வு அவருடையது!

நான் ஒரு பெரிய முட்டாள். முதலில் ராதையைத்தான் எனக்குக் கொடுப்பதாக இருந்தது. ஆனால் மல்லிகாவின் அழகைப் பிடித்திருந்த என் கண்களுக்கு, ராதையின் மனத்தழகைக் கவனிக்க முடியவில்லை. அதன் பலனை இப்போது காண்கிறேன். ராதா என்று கூப்பிடும்போதே சிரித்த முகத்துடன் ஓடி வரும் அவள் எங்கே! 'மல்லி' என்று கூப்பிடும்போதே எரிந்து விழும் மல்லிகா எங்கே!

ஒரு சமயம். அன்று சனிக்கிழமையானதால் ஆபீஸ் ஒரு மணியோடு முடிந்து விட்டது. நண்பர்களெல்லோரும் சேர்ந்து ஒரு திட்டம் தயாரித்தார்கள். அதன்படி கமலா டாக்கீஸில் நடக்கும் ஒரு சினிமாவுக்கு நண்பர்கள் தத்தம் மனைவிகளுடன் சரியாக ஐந்து மணிக்கு ஆஜராக வேண்டியது. முதலில் நான் அந்தத் திட்டத்தில் சேரத் தயங்கினேன். 'மல்லி' என்று கூப்பிடும் போதே சீறும் அவள் என்னுடன் சினிமாவுக்கு வர ஒப்புவாளா என்ற பயந்தான். ஆனால் நண்பர்கள் விடவில்லை. எப்படியோ சொல்லி என்னையும் அந்தத் திட்டத்திற்கு இணங்கச் செய்து

விட்டனர். முன்பு ஒரு தடவை அப்படித்தான் நடந்தது. ஆனால் மல்லி என்னுடன் வருவதற்குக் கண்டிப்பாக மறுத்து விட்டாள். நண்பர்களிடம் ஏதோ சால்ஜாப்புச் சொல்லி அப்போது தப்பித்துக் கொண்டு விட்டேன். இப்போது என்ன செய்வது! காப்பி, டிபன் சாப்பிடும்போது மெதுவாக விஷயத்தை ஆரம்பித்தேன். "மல்லிகா, இன்றைக்கு நண்பர்களெல்லாம் கூடி ஒரு தீர்மானம் செய்திருக்கிறார்கள். அதன்படி இன்றுமாலை ஐந்து மணிக்கு, கமலா டாக்கீஸில் நடக்கும் ஒரு சினிமாவுக்குப் போவதாக ஏற்பாடு. அதனால்..." என்பதோடு நிறுத்தி விட்டு அவள் முகத்தை நோக்கினேன். "உம், மேலே சொல்லுங்கள்" என்றாள் மல்லிகா. "உன்னால் வர முடியுமா!" என்று இழுத்தாற்போலக் கேட்டுக் கொண்டே தலையை நிமிர்த்தி அவளை நோக்கினேன். அவள் பதிலே சொல்லவில்லை. அந்த ஒரு நிமிஷத்தில் அவள் முகத்தில் எத்தனையோ பாவங்கள் தோன்றி மறைந்தன. பேசாமல் இடத்தை விட்டு அகன்றாள்.

சில நிமிஷங்களுக்குப் பிறகு தலையை நிமிர்த்த நான் அப்படியே திடுக்கிட்டு விட்டேன். காரணம் மல்லிகா தன்னைத் தயாரித்துக் கொண்டு என் முன் நின்றுகொண்டிருந்ததுதான். மல்லிகா ஏற்கனவே நல்ல அழகி. அத்துடன் அந்தப் பட்டுப் புடவையிலும், நகைகளிலும் இன்னும் நல்ல அழகுடன் காட்சியளித்தாள் அவள். பாவம்! அவளும் சிறு பெண்தானே! எல்லோரையும் போல உல்லாசமாக வெளியே செல்ல வேண்டும் என்று அவளுக்கும் ஆசை யிராதா! அவசர அவசரமாக என்னையும் தயார் செய்து கொண்டு அவளுடன் கிளம்பினேன். அவளுடன் போவதையே நான் பெருமையாகக் கருதினேன். ஆனால் என்னுடன் வருவதை அவள் அவ்வாறு கருதமாட்டாளே! நான் அழகு என்று இல்லாவிட்டாலும், மறைவில் நண்பர்கள் 'கோரம்' என்று சொல்லுவதைக் கேட்டிருக்கிறேன். உலகிலேயே பொருத்தமான ஜோடி அமைவது அபூர்வந்தான் போலும். மல்லிகா நல்ல அழகி. ஆனால் அவளுக்கு வாய்த்திருக்கும் நானோ திரைமறைவில் கோரம் என்று வர்ணிக்கப்படுபவன். ராதை சுமாரான அழகிதான். ஆனால், சந்துருவோ நல்ல அழகன். மல்லியையும், அவரையும் ஜோடியாகச் சேர்த்திருந்தால் எவ்வளவு நன்றாக இருக்கும்! சட்! என்ன விபரீதக் கற்பனை இது!

"மவுண்ட்ரோடு" என்று கத்திய கண்டக்டரால் என் சிந்தனை கலைந்தது. தியேட்டர் வாசலில் நண்பர்கள் எனக்காகக் காத்திருந்தனர். என்னைப் பார்த்ததும் ஒரே ஆரவாரம் செய்தனர். மல்லியையும், அவர்களுக்கு அறிமுகப்படுத்தி வைத்தேன். மல்லியைப் பார்த்த நண்பர்கள் எல்லோரும் "மணி, நீ அதிர்ஷ்டசாலியடா!" என்று புகழ்ந்தனர். உண்மைதான். நான் அதிர்ஷ்டசாலிதான். எதில்! என் பிளவு பட்ட வாழ்க்கை அவர்களுக்கு என்ன தெரியும்! அது தெரியாத வரையில் அவர்கள் அதுதானா சொல்லுவார்கள்! இன்னமும் சொல்லுவார்கள். வர வர எனக்கும் மல்லிக்கு மிடையில் ஏற்பட்டிருக்கும் பிளவு அதிகமாகிக் கொண்டே வருகிறதே தவிர, குறைந்த பாட்டைக் காணோம். எப்படியாவது அவளது வெறுப்பைக் குறைக்க வழி தேட வேண்டும். அன்யோன்ய வாழ்க்கை ஏற்பட வேண்டும்.

## மல்லிகா :

இங்கு வந்தது முதலே அவரது மனம் பழைய படி இல்லை போலிருக்கிறது. அவரைச் சொல்லப் போவானேன்! எனக்குங்கூடத்தான். இங்கு வந்த பிறகு எவ்வளவோ கசப்பான உண்மைகளை அக்காவின் மூலம் நான் தெரிந்து கொண்டேன். ஒரு நாள் நானும் அக்காவும் பேசிக்கொண்டிருந்தோம். பேச்சு அழகைப்பற்றித் திரும்பியது. நான் பேச்சின் நடுவில் "அக்கா, நீ அதிர்ஷ்டசாலி. அழகான கணவரைப் பெற்றிருக்கிறாய்" என்றேன். அக்கா என்னைப் பார்த்து, "மல்லி, நீ நினைப்பது சுத்தத் தவறு. அழகு என்கிறாய். எப்பொழுதும் வெளியழகைக் காட்டிலும் உள் அழகுதான் முக்கியம். மணியிடம் இருக்கும் உள் அழகு எவ்வளவு! அது ஏன் உனக்குத் தெரியமாட்டேனென்கிறது! உன் அத்திம்பேரைப் போன்ற ஒரு கணவன் உனக்குக் கிடைத்திருந்தால்......" என்றாள். உண்மைதான். மன்மதனைப் போன்ற கணவனைப் பெற்றிருக்கும் அவள் இதுதானா சொல்லுவாள்! இன்னமும் சொல்லுவாள். வாய் வேதாந்தம் பேசுவது எல்லோருக்கும் எளிதுதான்.

வராந்தாவில் ஜன்னலருகில் நின்று ஏதோ வேடிக்கை பார்த்துக் கொண்டிருந்தேன் நான். பின்னால் ஏதோ காலடிச் சத்தம் கேட்கவே திடுக்கிட்டுத் திரும்பினேன். அவர்தான் நின்றுகொண்டிருந்தார். "மல்லி, சாயந்திரம் எல்லோரும் சேர்ந்து பீச்சுக்குப் போகலாமென்று சந்துரு சொல்லுகிறார்..." அவர் வார்த்தையை முடிக்கவில்லை. அதற்குள் நான் குறுக்கிட்டு, "நான் வரவில்லை" என்றேன் வெடுக்கென்று. அப்படிச்



"மிஸ்டர் கருமேகம்! எங்கே போயிருந்தீர்கள்?"

"நீல மேகத்தோடு, கிரிக்கட் மாட்சுக்குப் போயிருந்தேன்."

"மாட்சு, நன்றாக இருந்ததா?"

"நான் போனேன். மாட்சே நின்று போய்விட்டது."

சொல்ல வேண்டுமென்ற எண்ணம் எனக்குத் துளிக்கூட இல்லே. இருந்தாலும், என்னமோ அப்படிச் சொல்லிவிட்டேன். அதற்காக நானே என்னைக் கடிந்து கொண்டேன். அவர் பேசாமல் சென்று விட்டார். ராதா கேட்டதற்கு "அவளுக்குத் தலைவலியாம். அவள் வரவில்லையாம்" என்று பதில் சொன்னார். அவருக்கு என்னிடம் எவ்வளவு அன்பிருந்தால் நான் வெடுக்கென்று சொன்னதையும் பொருட்படுத்தாமல் ஒரு பொய்யைச் சொல்லுவார்! சிறிது நேரம் சென்றது.

சிறிது தூரத்தில் அக்காவும், அத்திம்பேரும் ஏதோ பேசிக்கொண்டிருந்தார்கள். "என்ன ராதா, மணி மூன்றரை யாகிவிட்டதே! இன்னுமா டிரெஸ் செய்து கொள்ளவில்லே!" என்றார் அத்திம்பேர். "இல்லே. மல்லி வரவில்லையாம். அவளுக்குத் தலைவலியாம்" என்றாள் அக்கா இழுத்தாற்போல.

அப்போது அத்திம்பேரின் முகத்தைப் பார்த்த நான் உண்மையிலேயே பயந்து விட்டேன். கோபம் பொங்கி வந்து கொண்டிருந்தது அவர் முகத்தில். "அதிகப் பிரசங்கி! உனக்குத்தான் தங்கையிடம் ஆசை. எங்களுக்கெல்லாம் இல்லையா! அவள் வரவில்லையாம்; இவளும் வரமாட்டாளாம். அவள் வரவில்லே என்றால் யார் விடப் போகிறார்கள்" என்று சொல்லிக் கொண்டே அக்காவின் பூப்போன்ற கன்னத்தில் ஓர் அறை விட்டார். அக்கா பதில் பேசாமல் சென்று விட்டாள். அத்திம்பேர் கூண்டில் அடைபட்ட புலியைப் போலக் குறுக்கும் நெடுக்கும் உலாவிக் கொண்டிருந்தார். சட், என்ன மனிதர் இவர்! தொட்டதற்கெல்லாம் கோபமா! எடுத்ததற்கெல்லாம் அடியா! இவரிடம் எப்படித்தான் அக்கா குடும்பம் நடத்துகிறாளோ! இவரையும், அத்திம்பேரையும் நினைத்துப் பார்க்கும்போது, இவர் தெய்வப் பிறவியாகவே எனக்குத் தோன்றினார். இவரது பொறுமையும், சாந்தமும், அத்திம்பேருக்கு வருமா! இதனால்தான் அக்கா அன்று, உன் அத்திம்பேரைப் போன்ற கணவர் உனக்குக் கிடைத்திருந்தால், என்றாளோ! இப்படிப்பட்ட கோபக்காரராக இருந்தும் அவர்களது வாழ்க்கை எப்படிச் சோபிக்கிறது! அதை எப்படியாவது தெரிந்து கொள்ள வேண்டும்.

பின்னால் காலடிச் சப்தம் கேட்டது. அத்திம்பேர் நின்று கொண்டிருந்தார். அவர் முகத்தில் முன்பிருந்த கோபம் இல்லே. "மல்லிகா, நாழிகையாகிறது. சீக்கிரம் 'டிரெஸ்' செய்து கொள். கடற்கரைக்குப் போய் விட்டு வரலாம்" என்று சொல்லிக் கொண்டே சென்று விட்டார். பதில் பேசாமல் 'டிரெஸ்' செய்து கொள்ளச் சென்றேன். என் விருப்பு, வெறுப்பெல்லாம் அவரிடத்தான் செல்லும். அத்திம்பேரிடம் வாயைத் திறக்க முடியுமா!

**ராதா :**

ரம்மியமான மாலே வேளையில் இந்தக் கடற்கரைதான் எவ்வளவு குதூகலமாகக் காட்சி யளிக்கிறது! கும்பல் கும்பலாக உட்கார்ந்து பேசிக்கொண்டிருக்கும் ஜனங்கள்கூட என்றுமில்லாத சந்தோஷத்துடன் இருப்பது போலத்தான் என் கண்களுக்குத் தோன்றுகிறது. ஏன்! ஆரவாரத்தோடு ஒன்றன்பின் ஒன்றாக அலைகளை வீசிக் கொண்டிருக்கும் கடல்கூட அல்லவா சந்தோஷத்தோடு துள்ளிக் குதிப்பதுபோல் இருக்கிறது! அதற்குக் காரணமும் இல்லாமல் போகவில்லே. எங்கேயாவது வெளியே கிளம்பினால் யாருடனும் பேசாமல் விடுவிடென்று வெளியே சென்று விடுவார் அவர். வேண்டுமென்றல்ல. அது அவர் சுபாவம். அப்படிப்பட்டவர் இன்று காரணமில்லாமல் தொண தொண வென்று ஏதோ பேசிக்கொண்டே வந்தார். அந்தச் சந்தோஷத்தில் கடற்கரையே சந்தோஷமாகக் காட்சி யளித்ததில் வியப்பொன்று மில்லேயல்லவா! ஆனால் கூடவே ஒரு ஒரு எண்ணம். மல்லியையும் கூடவே அழைத்துக் கொண்டு வந்திருப்பதால் அவளுடன் பேசவிடாமல் இப்படிப் பேசிக் கொண்டு வருகிறாரே, அவள் அதைத் தப்பாக எடுத்துக் கொள்ளாமல் இருக்க வேண்டுமே என்று நான் மெதுவாக மல்லியின் பக்கம் திரும்பினேன். அவள் ஒரு புறமும், மணி மற்றொரு புறமுமாக வேடிக்கை பார்த்துக் கொண்டு வந்து கொண்டிருந்தார்கள். கடைசியில்தான் அவர் என்றுமில்லா வழக்கமாக என்னுடன் பேசிக்கொண்டு வந்ததற்குக் காரணம் தெரிந்தது. மல்லிகாவுக்கும் மணிக்குமிடையில் ஒரு பெரிய பிளவு ஏற்பட்டிருக்கிறதாம். அதை எப்படியாவது போக்க வேண்டுமாம். அதற்காகத்தான் அவர்கள் இங்கு வந்திருக்கிறார்களாம். இந்த விவரத்தை என்னிடம் சொல்லி விட்டு, "ராதா, நீதான் மல்லியைத் திருத்த வேண்டும். அதைச் செய்ய உன்னால் முடியும் என்று நம்பித்தான் அவர்களே இங்கு வரவழைத்தேன்" என்றார். நான் திகைத்தேன். அதே சமயம் பின்னாலிருந்து மல்லியின் குரல் கேட்டது. சமுத்திர அலைகளில் சிறு குழந்தையைப்போல விளையாடிக் கொண்டிருந்தாள் மல்லிகா. அவளிடம் சென்றேன் நான். மல்லி என்னைச் சிறிது நேரம் உற்றுப் பார்த்து விட்டு "அக்கா, உனக்குக் கொஞ்சங்கூட மானம், ரோஷம் என்பதே கிடையாதா!" என்றாள். "என்ன சொல்லுகிறாய் மல்லி!" என்றேன் ஒன்றும் புரியாமல். "அக்கா, இப்பொழுதுதானே அப்படி அடித்தார்! அதற்குள் கொஞ்சப் போய் விட்டாயே! அதனால்தான் கேட்டேன்" என்றாள் மல்லி. அவர் சொல்லிய சமயம் வாய்த்து விட்டது என்று நான் எண்ணினேன். ஒரே நிமிஷத்தில் ஒரு பிரசங்கத்திற்குத் தயாராகி விட்டவள்போல மல்லிகாவைப் பார்த்துக்கொண்டே சொன்னேன்:



**மனைவி** :—வர, வர, எனக்கு ஞாபக மறதி அதிகமாகப் போச்சு. உங்களுக்கு 'பனியன்' வாங்கிக்கொண்டு வரப்போனவள், ஞாபகமறதியாய் எனக்குப் புடவை வாங்கிக் கொண்டு வந்து விட்டேன்.

---

"மல்லி, உன் வாழ்க்கை ஏன் பாழாகிறது என்பதன் காரணத்தை நான் நன்றாகத் தெரிந்து கொண்டு விட்டேன். வாழ்க்கையில் இன்பமும்—துன்பமும் மாறி மாறி வந்தால்தான் வாழ்க்கை ருசிக்கும். அதற்காக வாழ்க்கை முழுவதும் துன்பப்பட வேண்டுமா என்று கேட்பாய். அப்படியும் கூடாது; வாழ்க்கை ஒரே இன்பமாகவே சென்றாலும் ருசிக்காது. சப்பிட்டுப் போய் விடும். ஒரே துன்ப மயமாகச் சென்றாலும் விரக்தி ஏற்பட்டுவிடும். இரண்டும், இன்பமும் துன்பமும், மாறி மாறி வந்தால்தான் வாழ்க்கை ருசிக்கும். ஒரு ரோஜாச் செடியை எடுத்துக் கொள். இவ்வளவு முட்களுக் கிடையிலும் ஒரு அழகான பூ இருக்கிறதே என்றுதான் சந்தோஷப் பட வேண்டும். அதை விட்டு, 'இந்த ஒரு பூவைச் சுற்றி இவ்வளவு முட்களா!' என்று வருத்தப் படக் கூடாது. அதைப் போலவே இவ்வளவு கஷ்டங்களுக் கிடையிலும் கொஞ்சமாவது இன்பம் இருக்கிறதே என்று சந்தோஷப்படுவதை விட்டு அந்த இன்பத்தைச் சுற்றி இவ்வளவு துன்பங்களா என்று வருத்தப் படக்கூடாது. இன்று கணவன் அடித்து விட்டான் என்று முகத்தைத் தூக்கி வைத்துக் கொள்ளுகிறோம். நாளைக்கு அதே கணவன் நமக்கு வேண்டியதை வாங்கிக் கொடுத்து நம்மைச் சந்தோஷப் படுத்தும்போது அதில் யாருக்காவது பங்கு கொடுக்கிறோமா! அடிக்கிற கைதான் அணைக்கும். அவ்வப்பொழுது நடப்பதை அவ்வப் பொழுதே விட்டு விட வேண்டும். அதை விட்டு விட்டு அதை அப்படியே மனத்தில் வைத்துக் கொண்டு உருகுவது கூடாது. நமக்கும் கீழ் நிலையில் உள்ளவர்களைப் பார்த்துதான் நாம் நம்மைத் தேற்றிக்கொள்ள வேண்டுமே தவிர, நமக்கு மேல் நிலையில் உள்ளவர்களைப் பார்த்துப் பொருமுவதும் பொறாமைப் படுவதும் கூடாது. அதனால் பயனில்லை."

இன்னும் ஏதேதோ சொல்லிக் கொண்டே போயிருப்பேன். பின்னாலிருந்து வந்த அவரது குரல் கேட்டு அவரிடம் சென்றேன். "சபாஷ்! ராதா" என்றார். நான் பேசாமல் நின்றேன். "ராதா, உன்னுடைய பிரசங்கம் அருமையாக இருந்தது. என்னையே ஒரு கலக்குக் கலக்கி விட்டது. மல்லிகாவைப் பற்றிக் கேட்க வேண்டாம். நான் உன்னிடம் வைத்த நம்பிக்கை வீண் போகவில்லை. முரடனாக இருந்த என்னைக்கூட அல்லவா உன் பிரசங்கம் ஒரு 'ஆட்டு' ஆட்டி விட்டது!" என்றார். நான் மல்லியின் பக்கம் திரும்பினேன். அவள் சிந்தனையில் மூழ்கி யிருந்தாள்.

**சந்துரு :**

**ம**ல்லிகாவை இங்கே கொண்டு வந்து விடும்படி நான்தான் மணியிடம் சொன்னேன். அவனும் அதை நிராகரிக்காமல் நான் சொன்னபடியே செய்தான். ராதாவைப் பார்த்த பிறகாவது மல்லிகா திருந்த மாட்டாளா, பிளவு பட்ட அவர்களது வாழ்க்கை ஒன்று சேராதா என்றுதான் சொன்னேன். நான் எண்ணியதும் பொய் யாகவில்லை. நானோ முன் கோபக்காரன். காரணமில்லாமல் ராதையை அடித்து விடுகிறேன். பின்னால் வருத்தப்படுகிறேன். நல்ல காலம். ராதாவைப் போன்ற ஒரு மனைவி கிடைத்ததும் என் அதிர்ஷ்டந்தான். எவ்வளவு அடித்தாலும் கோபித்தாலும் கொஞ்சங்கூட முகங்கோணுவதே யில்லை. இதே மல்லிகாவைப் போன்ற ஒரு மனைவி எனக்குக் கிடைத்திருந்தால்....அப்பப்பா! நினைக்கவே பயமாக இருக்கிறது. இப்பொழுது நான் மணிக்கு உதவி செய்ததுபோல எனக்கு உதவி செய்ய வேறு ஆசாமிதான் வேண்டும். உண்மையிலேயே ராதா கிடைத்தற்கரிய பொக்கிஷந்தான். அதைச் சரியானபடி பாதுகாக்க வேண்டியது என் பொறுப்புத்தான்.

"ஸார்!" என்ற குரல் கேட்டு என் சிந்தனை கலைந்தது. திரும்பிப் பார்த்தேன். மணி நின்று கொண்டிருந்தான். "அடடா, மணியா! வா வா!" என்று கூறி விட்டுத் திரும்பினால் மல்லிகாவும் நின்று கொண்டிருந்தாள். "வா அம்மா, மல்லி!" என்றேன். "வந்து கொண்டே இருக்கிறேன், அத்திம்பேரே!" என்று சிரித்துக் கொண்டே சொல்லிவிட்டு ராதையிடம் சென்றாள் அவள். "என்ன மணி, இப்பவெல்லாம் என்னமாயிருக்கே! எங்கே உன்னைக் கண்ணிலேயே காணோமே!" என்றேன்.

"இப்பவெல்லாம் நன்றாகத்தா னிருக்கிறேன், ஸார்! மல்லி இப்பொழுது பழைய மல்லியாகவே இல்லை, ஸார்! ரொம்பவும் மாறி விட்டாள். எல்லாம் உங்களால்தான். உங்களுக்கு என்ன கைம்மாறு செய்யப் போகிறேனோ!" என்று என்னென்னவோ சொல்லிக் கொண்டே போனான் மணி. தற்செயலாக ராதாவின் அறைப் பக்கம் பார்வையைத் திருப்பிய நான் அப்படியே திகைத்து நின்று விட்டேன். மணியையும் கூப்பிட்டு அக்காட்சியைக் காண்பித்தேன். "அக்கா, நீதான் என்வாழ்வு மலரை விகசிக்கச் செய்தவள். உனக்கு என்ன கைம்மாறு செய்யப் போகிறேன்!" என்று கூறிக்கொண்டே ராதையின் கால்களில் வீழ்ந்து வணங்கினாள். தன் காலடியில் விழுந்த மல்லியை வாரியணைத்துக் கொண்டாள் ராதா. அந்தக் காட்சியைப் பார்த்த மணி அப்படியே மெய் மறந்து நின்றான். ஏன்! நானும் என்னையே மறந்தவாறு அந்த அற்புதக் காட்சியைப் பார்த்துக்கொண்டு நின்றேன்.

# வட்ட மேஜை

## பஞ்சநிவாரணத்துக்கு உதவி

தினப் பத்திரிகைகளில் வடார்க்காடு ஜில்லா பஞ்சத்தைப் பற்றி வரும் செய்திகள் உள்ளத்தை உருக்குகின்றன. 4-11-52 "சுதேசமித்திர"னில் கஞ்சியை வாங்கிப் போகக்கூட வசதியற்ற நிலையில் பெண்கள் இருப்பதாக எழுதி யிருந்தது. உடலை மூடக்கூடத் துணியில்லாததால் வெளியே வர இயலாமல் இருப்பதைப் பற்றியும், ஒருவர் உடுத்தி யிருக்கும் ஆடை "தேங்காய் சலிக்கும் சல்லடை" போன்றிருப்பதாகவும் வர்ணித்திருந்தது. கஞ்சிக்கும், கந்தலுக்கும், பெண்களும் ஆண்களும் பதறுகையில் நம் சகோதரிகள் கொஞ்சம் தியாகம் செய்ய முன் வர வேண்டும். 'எவர்சில்வர்' பாத்திரம் வாங்கும் ஆசையில் கொஞ்சம் பழசானதைக்கூடத் தெருவில் பாத்திரம் விற்க வருபவனிடம் போட்டு விடும் புடவை, வேஷ்டி, சட்டைகளைச் சேர்த்து வைத்துப் பஞ்ச நிவாரண விடுதிக்கு அனுப்பலாம். பட்டுப் புடவை, சில்க் புடவை வாங்குவதைக் குறைத்து, அந்த மீதிப் பணத்தைத் துணியாகவோ பணமாகவோ அனுப்பலாம். "உண்ணும் போதொரு கைப்பிடி"யைப் போலவே, "உடுக்கையில் ஒரு முழம்" மீதி செய்து அனுப்பினால், பெரும் புண்ணியம் செய்தவராவோம். பல துளி பெரு வெள்ளமாகும்.*** நவம்பர் 23உ "கல்கி"யில் பஞ்ச நிவாரண நிதி அனுப்பவேண்டிய விலாசம் கொடுத்திருந்தது. அங்கே ஒருவரை அனுப்பியதில் விலாசம் தவறு என்று தெரிந்தது. அவர் மிகச் சிரமப்பட்டு ஆடிட்டரின் விலாசம் கண்டு பிடித்தார். சரியான விலாசத்தை மறுபடியும் "கல்கி"யில் பிரசுரித்தால் உபயோகமா யிருக்கும்.

சென்னை
30-11-52 ராஜேசுவரி மாத்ருபூதம்

[நவம்பர் 23உ "கல்கி" பிரதியின் வெளிவந்தில் உதவி அனுப்ப வேண்டிய விலாசம் தவறாக அச்சிடப்பட்டிருந்தது பற்றி வருந்துகிறோம். துணி, தானியம் அல்லது பணமாகப் பஞ்சநிவாரணத்துக்கு உதவி அனுப்ப வேண்டிய சரியான விலாசம் வருமாறு:—

ஆடிட்டர் சூரியநாராயணன், டிரஸ்டி, அன்னதான சேவா சங்கம், 19, ஸ்ட்ரிங்கர்ஸ் தெரு, (Stringers St) பிராட்வே, மதராஸ்.]

●

## வாலிபர் காங்கிரஸ் துவக்கம்

ஸ்ரீரங்கத்தில் 1-9-52 வாலிபர் காங்கிரஸ் சகோதர திரு எஸ். மீனாட்சிசுந்தர முதலியார் பி. ஏ. எல். டி. அவர்களால் ஆரம்பித்து வைக்கப்பட்டது. பெரும்பாலும் கல்லூரி மாணவர்களையே அங்கத்தினர்களாகக் கொண்டது. காங்கிரஸின் திட்டங்களைத் தீவிரப்பிரசாரம் செய்யும் பொருட்டும், காந்திய வழியில் பொது மக்களுக்குச் சேவை செய்யும் பொருட்டும் மாணவர்களால் ஆரம்பிக்கப்பட்டது. இதில் 125 பேர் அங்கத்தினர்களாக உள்ளனர். 500 பேர்கள் வரை அங்கத்தினர்கள் சேர்க்க முடிவு செய்யப்பட்டுள்ளது. மாணவர்களுக்குச் சொற்ப பயிற்சியும் அளித்து வருகிறோம். ஸ்ரீரங்கத்தில் வாலிபர் காங்கிரஸ் தோன்றியது முதற்கொண்டு, நிலைமை சிறிது அபிவிருத்தி அடைந்திருக்கிறதென்று சொல்லலாம்.

நகரசபைத் தேர்தலும், நகரசபைத் தலைவர் தேர்தலும் நடுவே வந்தபடியால் எங்களுடைய வேலைத் திட்டங்கள் பெரிதும் தடைப்பட்டு விட்டன. மனஸ்தாபம் காரணமாகக் காங்கிரஸிற்காக அல்லும் பகலும் உழைத்தவர்கள் சுயேச்சையாக நின்றதால் கமிட்டிக் கூட்ட முடிவுப்படி தேர்தலில் நாங்கள் கலந்து கொள்ளவில்லை. நகரசபைத் தலைவர் தேர்தலும் சமீபத்தில்தான் முடிவடைந்தது. எதிர்காலத் திட்டங்களைப் பற்றித் தீவிரமாக ஆலோசனை செய்து வருகிறோம்.

இதன் மத்தியில் அக்டோபர் 2உ காந்திஜெயந்தியையும், நவம்பர் 14உ நேரு ஜெயந்தியையும் வெகு விமரிசையாகக் கொண்டாடினோம்.

ஸ்ரீரங்கம்
21-11-52 வி. அண்ணாஜீ ராவ்
காரியதரிசி, வாலிபர் சங்கம்

●

## மல் யுத்தம்—ஒரு விளையாட்டுத்தான்!

நவம்பர் 30உ "கல்கி" இதழில் மல் யுத்தம் ஒரு சகோதரியினால் பலமாகத் தாக்கப்பட்டிருக்கிறது. இந்தத் தாக்குதலை மல் யுத்தம் வரவேற்கும் என்று திடமாக நம்புகிறேன். ஒரு தமிழ்நாட்டுச் சகோதரி பயத்தை அகற்றி வெளிப்படையாகவே மல் யுத்தத்தைத் தாக்க வந்தார் என்றால் அது மகிழ்ச்சி யடையாதா! தமிழ் நாடு ஒரு கோழை நாடாக மாறி விட்டது. க்ஷயரோக விடுதிகளை

விருத்தி செய்கின்றோமே யன்றி, புஜ பலத்தை விருத்தி செய்யாமல் சோம்பி நிற்கின்றோம். தாங்கள் பண்டைய சரித்திரக் கோட்பாடுகளைக் கொண்டு நமது சகோதரியின் தாக்குதலுக்குப் பதில் கூறி யிருக்கிறீர்கள். நான் இக்கால உதாரணங்களைக் கொண்டே மல் யுத்தம் ஒரு விளையாட்டுத்தான் என்று நிரூபிக்க விரும்புகிறேன். கிரிக்கெட் பந்தயத்தில் ஒரு கட்சிக்காரர் பலமாகப் பந்தை வீசுகிறார். எதிரியின் மண்டையை உடைப்பதற்கல்ல, ஸ்டம்புகளை (Stumps) வீழ்த்துவதற்காகத்தான். ஆனால் இந்த விளையாட்டில் மண்டை உடையலாம். பலமான காயம் ஏற்படலாம். விளையாடுபவருக்கு அதுவா நோக்கம்! சிறிதும் கிடையாது. இது போன்றே கால் பந்து முதலான விளையாட்டுக்களிலும் சரி சில எதிர்பாராத அசம்பாவிதங்கள் ஏற்பட இடமுண்டு. இவைகளெல்லாம் விளையாட்டே தான் என்று மல் யுத்த ஆட்சேபகர் அடித்துக் கூறுகிறார்.

பின், மல் யுத்தத்தில் மட்டும் மல்லருக்கு எதிரியின் மார்பைக் கிழித்து மாலையாகப் போட்டுக் கொள்ள வேண்டும் என்ற எண்ணமா அல்லது நோக்கமா! அல்லவே அல்ல. அவரது நோக்கம் தன்னை எதிர்க்கும் மல்லரை மல்லாந்து படுக்க வைப்பதே. ஏன், எதிரிக்கு அச்சமிருந்தால் அவர் தாமாகவே மல்லாந்து படுத்து உறங்கலாமே!

திருவல்லிக்கேணி
28—11—52 ச. சந்தானம்

●

## தவறான வரலாறு!

ஆரம்பப் பாடசாலையின் மூன்றாவது வகுப்புக்குரியதும், "Madras Text-Book Committee" யாரால் அங்கீகரிக்கப்பட்டதுமான பாலர் பூகோளம் என்ற பாட புத்தகத்தில், "மாயன் என்ற படுகச் சிறுவன்" என்னும் தலைப்பின் கீழுள்ள பாடத்தில் நீலகிரியில் வசிக்கும் படுகர்கள் மூங்கிலாலும், மரக்கிளை, ஓலை இவைகளாலும் செய்யப்பட்ட சிறு குடிசைகளில் வசிக்கின்றனரென்றும், அந்தக் குடிசைகளுக்குச் சன்னல்களே கிடையாது என்றும் அந்தப் புத்தகத்தின் ஆசிரியர்கள் எழுதியிருக்கின்றனர். இதைத் தவிர படுக மாதர்கள் கழுத்தில் பாசி மணியும், கையில் பித்தளை வளையல்களும் அணிவர் என்றும், அவர்கள் நாள்தோறும் குளிப்பதில்லை என்றும் மனத்திற்குத் தோன்றியவாறு எழுதியிருக்கின்றனர்.

படித்துப் பட்டம் பெற்ற மேதாவிகள் தாங்கள் இருந்த இடத்திலேயே இருந்து கொண்டு தமக்குத் தோன்றியவைகளை எழுதிப் புத்தக ரூபமாக வெளியிடுகிறார்களே யன்றிப் பல ஊர்களுக்கு நேரில் சென்று, அங்கு வாழும் மக்களிடையே சில நாட்கள் தங்கி, அவர்களின் வாழ்க்கை வரலாற்றைப் பூரணமாகத் தெரிந்து கொண்டு, புத்தகங்கள் எழுதுவது கிடையாது என்னும் உண்மை மேற்கண்ட புத்தகத்திலிருந்து நன்கு புலனாகின்றது.

அந்தப் புத்தகத்தை உருவாக்கிய மகான்களிடத்தில் சென்று "நீலகிரி எத்திசையி லுள்ளது!" என்று கேட்போமானால் அவர்கள் உடனே வானத்தைச் சுட்டிக் காட்டுவார்கள் என்பதற்குச் சற்றும் ஐயமில்லை.

படுகப் பெண்கள் ஒரு காலும் பாசி மணிகளும் பித்தளை வளையல்களும் அணிந்தது கிடையாது. நீலகிரி படுக சமூகத்தார் இப்போது வாழ்க்கையின் எல்லாத் துறைகளிலும் முன்னேறி யிருக்கின்றனர் என்பதை அந்த ஆசிரியர்கள் அறியவில்லை போலும். ஒரு சமூகத்தாரை இவ்வாறு இழிவு படுத்திக் கூறியிருப்பது சிறிதும் தகாது.

சன்னல்களில்லாத குடிசைகளில் வாழ்வதாகச் சொல்லும் அந்த ஆசிரியர்கள் அதே சமயத்தில் படுகர்கள் பல தானியங்கள் விளைவிப்பதாகக் கூறியிருக்கின்றனர். அவ்வாறு குடிசையில் வசிப்பது உண்மையாயின் அவ்வளவு தானியங்களையும் கிழங்குகளையும் கெட்டுப் போகாமல் வருஷ முழுவதும் எப்படி இருப்பு வைக்க முடியும்! காட்டு மிருகங்கள் என்றாலும் வாரத்துக்கு மூன்று நான்கு நாட்கள் ஆற்றில் இறங்கிக் குளிக்கும் போது மனித ஜன்மம் எடுத்த படுகர்கள் ஒரு நாளும் குளிக்காமல் இருக்க முடியுமா! மேற்கண்ட புத்தகத்தின் ஆசிரியர்கள் நீலகிரி மலைக்கு ஒரு தடவையாவது நேரில் விஜயம் செய்து உண்மையை அறிந்துகொள்ள வேண்டியது அவசியம்.

கோத்தகிரி
23-11-52 கு. பி. காரி

●

## மல்யுத்தம் வாழ்க!

மல்யுத்தம் நம் நாட்டிற்கு அத்தியாவசியமான மிக முக்கியமான ஒரு விளையாட்டு. ஒரு இடத்தில் கால் பந்தாட்டத்தில் ஒரு சகோதரர் மற்றொருவரை வேண்டுமென்றே தடுத்து, அவர் கரத்தை முறித்துவிட்டார் என்று படித்தேன். அதற்காகக் கால் பந்தாட்டம் அநாகரிகமானது என்று சொல்லலாமா! மல்யுத்தம் நிச்சயமாக விளையாட்டுத்தான். தேவையானதும்தான். நாகரிகமானதுதான். எந்த ஆட்டத்திலும் மனிதத்

## இந்திய ரயில்வேக்களுக்கு ஜெர்மன் வாகன்கள்

●

500-க்கு மேற்பட்ட மீட்டர் கேஜ் கூட்ஸ் வாகன்கள் நூரம்பர்க்கிலிருந்து ஒகா துறைமுகத்துக்கு வந்துள்ளன. இது இந்திய சர்க்காரால் ஜெர்மனியில் எம். ஏ. என். (மெஷினன்பேப்ரிக் - ஆக்ஸ்பர்க் - நூரம்பர்க்) ஸ்தாபனத்தாரிடம் ஆயிரம் வாகன்களுக்கு ஆர்டர் கொடுத்ததில் பாதியாகும். இந்த எம். ஏ. என். ஸ்தாபனத்தார் உலகின் பல நாடுகளிலும் ரயில்வேக்களுக்குக் கூட்ஸ் வாகன்களையும் பாசஞ்சர் கோச்சுகளையும் செய்து அனுப்புகின்றனர். இந்த ஜெர்மன் ஸ்தாபனத்தின் இந்திய பிரதிநிதிகளான எஸ்கார்ட்ஸ் (ஏஜண்ட்ஸ்) லிட். முழுதும் ஒரு இந்திய ஸ்தாபனமாகும். இவர்களுக்கு நம் நாட்டில் எங்கும் கிளைகள் உண்டு. இவர்கள் மூலம் இந்திய சர்க்காரின் அணைக்கட்டு, நீர்ப்பாசனத் திட்டங்களுக்கு சகலவிதமான எஃகு கட்டுமானங்களும் இயந்திரங்களும் பல கோடி ரூபாய் மதிப்பில் சப்ளை யாகின்றன.

தன்மைக்குப் புறம்பான அநாகரிகச் செயல்கள் செய்யக்கூடும். கிரிக்கெட் விளையாட்டை அதை அறிந்தவர்களும் ஆதரிப்பவர்களும்தான் போற்றவும் ரஸிக்கவும் முடியும். ஆனால் மல் யுத்தம் போன்ற விளையாட்டுக்களை யாரும் ரஸிக்கலாம். அவை பலமற்ற கோழைகளுக்குப் பலம் ஊட்டும் விளையாட்டு. பார்ப்பவர்களை வீறு கொண்டெழச் செய்யும் விளையாட்டு. பாரத நாட்டிற்கு மிகத் தேவையான விளையாட்டு.

நம் இளைஞர்கள் மல் யுத்தம் போன்ற விளையாட்டுக்களில் தீவிர பங்கெடுத்துக் கொள்ள வேண்டும். உடற்கட்டைப் பெறவேண்டும்.

சிதம்பரம்
1-12-52

கோ. பா. சிம்ஹன்

●

## இளைஞர் முன்னணி

"தேசிய வாலிபர் காங்கிரஸ்" என்ற ஸ்தாபனத்தை ஆரம்பித்துக் கடந்த ஒரு வருஷ காலமாக ஜார்ஜ் டவுன் தொகுதியில் நானும் என்னைப் போன்ற வாலிபர்களும் வேலை செய்து வருகின்றோம். சென்ற பொதுத் தேர்தலிலும் சரி, சமீபத்தில் நடந்த கார்ப்பரேஷன் தேர்தலிலும் சரி, காங்கிரஸ் அபேட்சகர்கள் பெருவாரியான வாக்குகள் பெற்று வெற்றி பெற நாங்கள் பெரிதும் காரணமாக இருந்திருக்கிறோம். சுதந்திர தினம், காந்தி ஜெயந்தி, நேரு ஜெயந்தி முதலிய தேசியத் திருநாட்களில் முக்கிய பங்கெடுத்துக் கொண்டும், குறிப்பாகச் சென்ற செப்டம்பர் மீ எங்கள் பேட்டையில் பாரதி விழா நடந்தபொழுது பாரதியார் சங்கத்தாருடன் பெரிதும் ஒத்துழைத்தும் பல பொதுக்கூட்டங்கள் போட்டும் இந்தத் தொகுதியில் காங்கிரஸ் பிரசாரத்தைச் சிறந்த முறையில் நடத்தி வந்திருக்கிறோம். இந்தப் பேட்டை, காங்கிரஸின் கோட்டையாக விளங்குவதற்கு எங்கள் சங்கம் போன்ற வாலிபர் காங்கிரஸ் ஸ்தாபனங்களின் ஓயாத வேலைதான் காரணம் என்று சொல்ல முடியும்.

காங்கிரஸ் பிரசாரத்துடன் காந்திய நிர்மாணத் திட்டத்தில் சிலவற்றையேனும் நிறைவேற்றுவதற்கான ஏற்பாடுகளையும் செய்ய முயற்சி எடுத்துக்கொண்டு வருகின்றோம். தேசியத்துக்கு விரோதமாக உள்ள எதிர்ப்புச் சக்திகளையும் தீய சக்திகளையும் எதிர்த்துப் போராடி வெற்றி காண தேசிய இளைஞர் ஸ்தாபனங்கள் தமிழ்நாடு பூராவும் ஏற்பட வேண்டும் என்று விரும்புகிறோம்.

259, லிங்கி செட்டித்தெரு, சென்னை

தி. சு. கிருஷ்ணமூர்த்தி
காரியதரிசி தேசிய வாலிபர் காங்கிரஸ்

●

## நல்ல பலன்!

வட ஆற்காடு ஜில்லாவில் பஞ்ச நிவாரண வேலைகளில் ஈடுபட்டுள்ள எங்கள் சங்கத்தின் சேவைகளைப் பற்றியும், அதற்கு உதவியளிக்க வேண்டியதின் அவசியத்தைப் பற்றியும் தங்கள் பத்திரிகையில் வெளிவந்த குறிப்புகளுக்கு நன்றி. இதற்கான பலனும் உடனடியாக எங்களுக்கு கிடைக்க ஆரம்பத்துள்ளதென்பதை மகிழ்ச்சியுடன் தெரிவித்துக் கொள்கிறோம்.

டில்லி ஷண்முகானந்த சபையின் ஸ்கந்த சஷ்டி குறிப்பைத் தங்கள் பத்திரிகையில் பார்த்தநாங்கள் அதன் தலைவர் ஸ்ரீ கே. அன்னதானம் அவர்களுக்கு உடனே எழுதினோம். மறு தபாலிலேயே ரூ. 301 (ரூபாய் முன்னூற்றி யொன்று) அனுப்பி வைத்தது மின்றி இதுவரை ஐந்நூறு ரூபாய்க்கு மேல் வசூல் செய்து அனுப்பியுள்ளார்.

கும்பகோணத்தில் ஸ்ரீ கஸ்தூரி பாய் மாதர் சங்கத்தினர், இந்த அன்புப்பணியில் முழு மூச்சுடன் உதவி அளித்து வருகின்றனர். இதுவரையில் ரொக்கமாக ரூ. 207. (ரூபாய் இருநூற்றியேழு) அனுப்பியுள்ளனர். 900 துணிகள் வசூலித்துத் தந்துள்ளனர். மேலும் பணமும், துணிகளும் வசூல் செய்து வருகின்றனர்.

சென்னையில் ஸ்ரீனிவாச காந்தி நிலயத்தைச் சேர்ந்த சகோதரிகள் குகப்பிரியை, வசுமதி ராமஸ்வாமி, சரோஜினி வரதப்பன், சந்திரா முதலியோர் இப்பணியில் ஆர்வம் காட்டி வருகின்றனர். இதுவரையில் 350 துணிகள் அனுப்பியுள்ளனர். ரொக்க வசூலும் நடத்தி வருகின்றனர்.

தினசரி எங்கள் காரியாலயத்தைத் தேடித் துணிகளும்பணமும் வந்துகொண்டிருக்கின்றன. அனுப்புபவர்களில் பெரும்பாலோர் சகோதரிகளே!

19, ஸ்டிரிங்கர்ஸ் தெரு, சென்னை.

டி. எஸ். இராமநாதன்
காரியதரிசி, அன்னதான வேள்சங்கம்

படித்துப் பாருங்கள்

# அமர வாழ்வு

ஸ்ரீ சுபாஷ் பாபுவின் சுதந்திர இந்தியப் படையில் சேர்ந்து தொண்டாற்ற டாக்டர் ராகவனுக்கும் டாக்டர் ரேவதிக்கும் சந்தர்ப்பம் கிடைத்தது. வைத்தியக் கல்லூரியில் படித்துக் கொண்டிருக்கும்போதே ஒருவர் இருதயத்தில் இன்னொருவராக மாறிக் குடிபுகுந்து விட்டனர். அதன் காரணமாக, காதலர்கள் இருவருக்கும் வாழ்க்கையில் பல விசித்திர அநுபவங்கள் ஏற்பட்டன. கர்னல் குமரப்பா ரேவதியையும் ராகவனையும் காதல் பாதையிலிருந்து பிரித்து வைக்கக் கங்கணம் கட்டிக் கொண்டு பல கடும் சோதனைகளை அவர்களுக்கு உண்டாக்கினர். அந்தச் சோதனைகளில் மிகக் கடும் சோதனை, ராகவன் தன் உயிருக்கு உயிரான ரேவதியை எதிரே நிற்க வைத்துத் தானே துப்பாக்கியால் சுடும்படியாக நேர்ந்ததுதான்.

இதற்கு அப்புறம் ரேவதி என்னவானுள்! டாக்டர் ராகவன் என்னவானுன்! அவர்களுடைய காதல் என்ன ஆயிற்று! கர்னல் குமரப்பா என்ன ஆனுர் என்னும் கேள்விகளுக்கெல்லாம் இந்தப் புத்தகத்தின் முதல் கதையான அமரவாழ்வைப் படித்துத்தான் தெரிந்து கொள்ள வேண்டும்.

ஜானகி வேண்டுமென்று தன் கணவனைப் போலீஸுக்குக் காட்டிக் கொடுக்கவில்லை; அப்படிக் காட்டிக் கொடுக்கும் அளவுக்குக் கொடியவளும் அல்ல. அவள் அரும்பாடு பட்டுக் கொஞ்சம் கொஞ்சமாகச் சேர்த்து வைத்திருந்த பணம் அப்படியே காணமற் போனதும், வயிற்றெரிச்சல் தாங்காமல் கூச்சலிட்டு விட்டாள். ஊர் கூடி விட்டது. போலீஸார் வந்து விட்டனர். பிறகு, ஜானகியின் கணவன் ராமுடுவுக்கு ஒரு வருஷம் சிறைவாசம் கிடைத்தது.

இந்தச் சம்பவம் அவன் மகன் பாலனின் இளம் உள்ளத்தில் தாங்க முடியாத சங்கடத்தை உண்டாக்கிவிட்டது. அந்த வேதனையில் உருகிப்போன அவன் தன் தகப்பனாரின் திருட்டுக் குற்றத்தை நீக்க முயன்றான். அவன் அதற்காக எப்படிப் பணம் சேகரித்தான் என்பதும், அம்மாவிடம் அது எப்படிப் போய்ச் சேர்ந்தது என்பதும் மிகவும் ஆச்சரியமான விஷயம். கடைசியில், தன் கணவன் திருடவில்லை என்பதை ஜானகி தெரிந்து கொள்ளுவது மிக மிக ஆச்சரியமானது. இவ்வளவு அதிசயமான சம்பவங்களைக் கொண்ட கதை "திருடன் மகன் திருடன்" என்பது.

"கம்ப சுண்டுவைத் தெரியுமோ இல்லையோ! தெரியும் என்று ஒப்புக் கொண்டுவிடுங்கள். தெரியாது என்று நீங்கள் சொன்னால் அவன் உங்களை விட்டுவிடப் போகிறானா என்ன! முதுகு வலிக்கு ஆளாவதுதான் பலனாக முடியும்!" என்று "சுண்டுவின் சந்நியாச"த்தைப் படிக்க ஆரம்பித்ததுமே கதை ஹாஸ்யக் கலை கட்டி விடுகிறது. சுண்டு ஒவ்வொரு பிரச்னையாக எடுத்துக் கொண்டே போய், கடைசியில் சந்நியாசம் வாங்கிக்கொள்ளும் வரையில் படித்து முடிப்பதற்குள் நாம் ஒரே சமயத்தில் இரண்டு காரியத்தைச் செய்ய வேண்டியிருக்கிறது. அதாவது, படித்துக் கொண்டே சிரிக்க வேண்டியிருக்கிறது!

புது டில்லியில் இந்திய சர்க்கார் காரியாலய மாகிற மகா சமுத்திரத்தில் பெரிய திமிங்கிலம் மாதிரி இருந்த யக்ஞசாமி ஐயர் எங்கே! அந்தப் பெரிய சமுத்திரத்தில் ஒரு சிறு மீனை நிகர்த்த எஸ். பி. சிவன் எங்கே! அந்த யக்ஞசாமி ஐயரின் குமாரி ஹேமாவதியைக் காதலித்து எஸ். பி. சிவன் மணந்து கொண்ட சுவாரஸ்யமான கதை "இமய மலை எங்கள் மலை"யில் கூறப்பட்டிருக்கிறது.

"பொங்குமாங்கடல்" என்னும் கதையில் வாஞ்சி ஐயர், நீலகண்டப் பிரம்மச்சாரி முதலிய நம் தமிழ் நாட்டுப் பழைய புரட்சி தேசபக்தர்களின் காலத்தில் நடந்த ஒரு ரஸமான நிகழ்ச்சியைக் கற்பனையில் ஜோடித்துக் குற்றாலத்துத் தாடிச் சாமியார் சொல்லுகிறார்.

ஆசிரியர்:—கல்கி; பிரசுரம்: பாரதி பதிப்பகம், தியாகராய நகர், சென்னை—17. விலை: ரூ. 2—4.

## சமைத்துப் பார்! (இரண்டாம் புத்தகம்)

ருசிகரமான பலகார வகைகளை ரஸித்துச் சாப்பிடுவதற்குத் தெரிந்தால் மட்டும் போதாது. அவைகளைத் தயார் செய்யவும் தெரிய வேண்டும். முக்கியமாக அவற்றில் சேர்க்கப்படும் பண்டங்களின் அளவு தெரியவேண்டும்; பிறகு பக்குவம் செய்யும் முறை தெரிய வேண்டும். ஸொஜ்ஜியிலிருந்து ஸோமாஸ் வரையிலும் பருப்புத் தேங்காயிலிருந்து பாதுஷா வரையிலும், உள்ள சகல விதமான இனிப்பு, கார வகைப் பட்சணங்கள் செய்யும் விதமும் இந்த நூலில் தெளிவாகச் சொல்லப் பட்டிருக்கின்றன. இப்புத்தகத்தின் அட்டைப் படம் கவர்ச்சியாயிருக்கிறது.

ஆசிரியை: எஸ். மீனாக்ஷி அம்மாள், நெ. 2, வீரப்பெருமாள் கோவில் தெரு, மயிலாப்பூர், சென்னை—4; விலை: ரூ. 4—0—0.

## பஞ்சத்துக்கு ஆண்டி

இன்றைய நம் வாழ்க்கையிலும் காதல் இருக்கிறது; வீரம் இருக்கிறது; தியாக மிருக்கிறது. சங்கரராம் அவர்களின் கதைகளில் அவை நிச்சயமாக இருக்கின்றன. பட்டிக்காட்டு மக்களைப் பெரும்பான்மையான கதைகளுக்குப் பாத்திரங்களாகக் கொண்டு மனிதனின் உயரிய பண்புகள், கஷ்டத்திலும், நஷ்டத்திலும் வறுமையிலும் பிணியிலும் எப்படிச் சுடர்விட்டுப் பிரகாசிக்கின்றன என்பதைச் சங்கரராம் இந்த நூலில் உள்ள ஐந்து கதைகளில் நன்கு எடுத்துக் காட்டியிருக்கிறார். பிரசுரம்: அமுத நிலையம் லிமிடெட், சென்னை-18. விலை ரூ. 1.

## அறிவுத் திரள்

ஒவ்வொரு தேசத்திலும் அறிஞர்கள் இருந்திருக்கிறார்கள்; இருக்கிறார்கள். அவர்கள் தங்கள் வாழ்க்கையில் கண்ட உண்மைகளையும் முடிவுகளையும் மணி மணியான வாக்கியங்களில் சொல்லியிருக்கிறார்கள். அவற்றை யெல்லாம் தமிழில் மொழி பெயர்த்துப் படித்தால் தமிழர்களுக்கு ஒரு அரும் செல்வமாக, அறிவுக் களஞ்சியமாக விளங்கும். இந்த அரிய பணியை ஸ்ரீ குமரேசன் அவர்கள் செய்திருக்கிறார்கள். 'அறிவுத் திரள்' என்று மகுடமிட்டு இப்பொழுது வெளியாகியிருக்கும் இரண்டாம் பாகத்தில் உலக அறிஞர்களுடைய பல மணி மொழிகளும் பாரத தேசத்துப் பல பேரறிஞர்களின் ஆழ்ந்த கருத்துக்களும் இடம் பெற்றிருக்கின்றன.

பிரசுரம்: யமுனா இண்டஸ்ட்ரீஸ், பார்வதிபுதூர், தாழக்குடி, நாகர்கோவில். விலை: ரூ. 3.

# புதிய மனிதன்

ஸாயி



இரவு மணி பத்து இருக்கும். பௌர்ணமி நிலா பாலைப் பொழிந்து கொண்டிருக்கது. ஜன்னல் வழியாக அந்த அமுத கிரணம் எங்கள் வீட்டினுள்ளும் புகுந்தது. கட்டிலில் சாந்தி படுத்துக் கொண்டிருந்தாள். எனக்கு என்னவோ மன நிம்மதியில்லாமல் இருந்தது. மன நிம்மதியை இழப்பதற்கு அன்றைக்குப் புதிதாக ஒன்றும் நிகழ்ந்து விடவில்லை. பழைய மனப் போராட்டந்தான். என் மனம் சென்று போன சம்பவங்களில் ஈடுபட்டுத் தவித்தது.

"சாந்தி!" என்று ஒரே ஒரு முறைதான் அழைத்தேன்.

அவள் உடனே விழித்துக் கொண்டு, "ஏன்? கூப்பிட்டீர்களா? என்ன வேண்டும்?" என்று கேட்டாள். நிலா வெளிச்சத்தில் அவள் சரீரத்தில் புதுக் காந்தி பரவியிருந்தது. ஏனோ என் மனம் அந்த அழகில் முழுவதும் ஈடுபடவில்லை.

"சாந்தி, கொஞ்சதூரம் நிலவில் உலாவி விட்டு வரட்டுமா? நீ தனியாக இருக்க வேண்டுமே!" என்றேன்.

"அதைப் பற்றிப் பாதகம் இல்லை. நீங்கள் போய் வாருங்கள்!" என்றாள் சாந்தி. "நானும் வருகிறேன்!" என்று அவள் சொல்லமாட்டாள் என்று எனக்குத் தெரியும். நான்தான் அவளை என்னுடன் எங்கேயும் அழைத்துக் கொண்டு போகிறதில்லையே! இருந்தாலும் அவள் முகத்தில் இலேசாகச் சோகம் படர்ந்திருப்பது என் கண்களுக்குத் தெரியாமல் இல்லை. ஆனால் நான் அதைக் கவனித்ததாகவே காட்டிக் கொள்ளவில்லை.

"கதவைத் தாழ் போட்டுக்கொள். நான் கொஞ்சம் நடந்து விட்டு வந்துவிடுகிறேன்" என்று சொல்லி விட்டு வெளியே வந்தேன். நிலவின் அமைதியில் கொஞ்ச தூரம் நடந்து சென்றேன். ஆனால் என் மனசில் மட்டும் அமைதியில்லை.

ரஸ்தாவில் சிறு கால்வாய்க்கு மேல் அமைந்திருந்த பாலத்தின் கைப் பிடிச் சுவரைப் பார்த்ததும் எனக்கு அதன்மேல் கொஞ்ச நேரம் உட்கார்ந்திருக்கலாம் என்று தோன்றியது; உட்கார்ந்தேன். கால்வாயில் அருவி ஜலம் சல சல வென்று ஓடிக் கொண்டிருந்தது என் காதில் தெளிவாக விழுந்தது. என் உள்ளமும் அப்பொழுது சலசலத்த வண்ணம் தான் இருந்தது. அந்தச் சமயத்தில் என்னையும் அறியாமல் என் மனம் ஜயந்தியினிடம் சென்றது. அவள் இப்பொழுது இங்கேயிருந்தால் எவ்வளவு ஆனந்தமாயிருக்கும் என்று நான் எண்ணினேன்.

* * *

நான் கல்லூரியில் படித்துக் கொண்டிருந்த போது என் வகுப்பில் சில மாணவிகளும் படித்தனர். அவர்களுள் ஜயந்தியும் ஒருத்தி. உருக்கி வார்த்த தங்கப் பதுமையைப் போல் இருப்பாள் அவள்; நாகரிகம் என்ற பெயரால் மற்ற மாணவிகளைப் போல் விசேஷ அலங்காரம் எதுவும் செய்து கொள்ள மாட்டாள். ஜயந்தி வாய் திறந்து பேசவே வேண்டாம். அவள் பேச வேண்டிய விஷயங்களையெல்லாம் அவளுடைய விழிகள் பேசிவிடும். சுருள் சுருளான கேசமும் துருதுருப்பான அவளது பார்வையும் எல்லோரிடமும் சரளமாகப் பழகிப் பேசும் சுபாவமும் அவளிடம் ஒரு விசேஷக் கவர்ச்சியை உண்டாக்கி விட்டன.

ஜயந்தி எல்லோரிடமும் கல கலப்பாகப் பேசினாள் என்றாலும் என்னிடம் மட்டும் அதிக உரிமை எடுத்துக் கொண்டு பேசினாள் என்றே கூற வேண்டும். கல்லூரிப் பாடங்களில் ஏதாவது சந்தேகம் ஏற்பட்டால் அதைப் பற்றிக் கேட்க என்னிடம் வருவாள். அப்போதெல்லாம் என் மனம் களி கொண்டு துள்ளும். எனக்கே அதற்குக் காரணம் தெரியாது. மாணவர்கள் யாருமே ஜயந்தியினிடம் பேசிப் பழக ரொம்பவும் விருப்பங் கொண்டிருந்ததில் அதிசயம் ஒன்றுமில்லை. அந்தப் பேறு எனக்குச் சுலபமாகக் கிடைத்து விட்டதில் எனக்குக் கொஞ்சம் கர்வமே ஏறிப் போயிருந்தது.

சில மாத காலம்தான் நான் ஜயந்தியோடு பழகியது, பேசியது எல்லாம். ஆனால் அந்தக் குறுகிய காலத்தில் என் மனம் மிகவும் சுலபமாக அவளிடம் ஈடுபட்டு விட்டது. அத்துடன் நில்லாமல் அவளையும் என்னையும் பிணைத்து வைத்து வருங்காலத்தைப் பற்றி என்னென்னவோ கோட்டைகள் கட்டவும் என் மனம் தயங்கவில்லை.

என் மனத்தின் அடி வாரத்தில் ஒரு சிறு சந்தேகம் பிறந்து வளர்ந்து வந்தது. என் மனம் ஜயந்தியினிடம் ஈடுபட்டிருப்பது போல் ஜயந்தியின் மனம் என்னிடம் ஈடுபட்டிருக்கிறதா என்பதுதான் அது. அவளையே இது பற்றிக் கேட்டுத் தெரிந்து கொண்டு விட வேண்டும் என்று என் மனம் பலமுறை துடித்தது. ஆனால், ஏனோ அவளை நேரில் கண்டுவிட்டால், இந்த விஷயத்தையே அடியோடு என் மனம் மறந்து விடும். இந்தச்

சந்தேகத்தைச் சிறிதும் பொருட்படுத்தாமல் நான் அவள்மேல் கொண்டிருந்த அன்பு வளர்ந்து கொண்டே யிருந்தது.

இண்டர் பரீட்சை எழுதிவிட்டு ஊருக்குப் புறப்பட்டேன். ஜயந்தியின் தகப்பனாரிட மிருந்து ஏதோ தந்தி வரவே அவள் பரீட்சை எழுதிய அன்றே புறப்பட்டு விட்டாள். நான் சில தினங்கள் தாமதித்துப் புறப்பட்டேன். அவசரத்தில் அவள் விலாசமும் கேட்டு வாங்கிக் கொள்ள வில்லை.

ஊரில் நான் அம்மாவோடு தங்கியிருந்த போது, அம்மா என் விவாகப் பேச்சை மெது வாக ஆரம்பித்தாள். நான் மெதுவாகத் தட்டிக் கழித்துப் பார்த்தேன். சதாகாலமும் ஜயந்தியின் நினைவாக இருந்து வந்த எனக்கு விவாகப் பேச்சை யெடுத்தாலே பிடிக்க வில்லை. இதை அம்மாவிடம் வெளிப் படை யாகச் சொல்லத் தைரியமும் இல்லை. ஜயந்தி யின் விலாசம் தெரிந்தாலாவது அவளுக்கு எழுதி அவள் மனப் போக்கை அறிந்து கொள்ளலாம். அதற்கும் வழியில்லை.

அன்று, அம்மாவின் முன் ஏற்பாட்டின் படி பெண் பார்க்க நான் நிச்சயிக்கப்பட்டிருந்தது. நான், மிகவும் வெறுப்போடு, "எனக்கு என்ன அம்மா, இப்பொழுது கல்யாணத் துக்கு அவசரம்?" என்று கடிந்து கூறினேன்.

"என்னால் எத்தனை நாளைக்கு வளைய வந்து விட்டுக் காரியங்களைச் செய்ய முடியும்? காலாகாலத்திலே உனக்கு ஒரு கல்யாணம் பண்ணி வைத்துவிட்டால், நான் கொஞ்ச நாளைக்காவது நிம்மதியாக இருந்து விட்டுக் கண்ணை மூடுவேன்! பெண்ணைப் போய்ப் பார்த்து விட்டு வந்து உனக்குப் பிடிக்க வில்லை யென்றால் நாம் அவர்களிடம் நம் அபிப்பிராயத்தைத் தெரிவித்து விடலாம். அதனால் பாதகம் ஒன்றும் இல்லை. ஆனால் பெண் பார்க்க வரமாட்டேன் என்று சொல் லுவது சுத்தத் தப்பு" என்று அம்மா சொன்னபோது அவளை மீறி என்னால் ஒன் றும் பேச முடியவில்லை.

சிறு வயதிலேயே தந்தையை இழந்து விட்ட எனக்கு அம்மாவின் பேச்சைத் தட்டி நடக்கத் தைரியம் கிடையாது. போதும் அம்மா என்னிடம் உயிரையே வைத்திருந் தாள். அவளை எதிர்த்து அவள் ஏற்பாட் டைக் குலைக்க மனம் வரவில்லை. அரை மன துடன் அவளோடு பக்கத்து ஊருக்குப் பெண் பார்க்கப் போனேன்.

சாந்தியின் நிறம் மாநிறம்தான். பெயருக்கு ஏற்ப முகத்தில் வியக்கத்தக்க அமைதி குடி கொண்டிருந்தது. அழகு என்று விசேஷ மாகச் சிலாகிக்க முடியாவிட்டாலும், அவள் முகத்தில் ஒரு கவர்ச்சி இருந்தது. பத்தாவது வகுப்பு வரையில் படித்திருந்தாள். அம்மா வுக்கு அவளிடம் பிரியம் விழுந்து விட்டது.

பெண்ணைப் பார்த்துவிட்டு ஊருக்குத் திரும்பியதும் அம்மா சும்மா இருந்துவிட வில்லை. சாந்தியைப் பற்றி என் அபிப்பிரா யத்தைப் பல விதத்திலும் அறிய முயன்றாள்.

நான் என்ன பதில் சொல்லுவது? என் கண்ணையும் கருத்தையும் கவர்ந்து கொண்ட ஜயந்தி எங்கே? இந்தப் பேதைப் பெண் சாந்தி எங்கே? சாந்தியை என்னால் வெறுக்க முடியவில்லை என்றாலும் ஜயந்தியை என்னால் மறக்க முடியவில்லையே!

என் மனப் பொருத்தத்தைத் தவிர, சகல பொருத்தங்களும் எனக்கும் சாந்திக்கும் பொருந்தி யிருந்தன. பெண் வீட்டாருக்கு என்னை ரொம்பவும் பிடித்துப் போய்விட்டது. அம்மாவும் இந்தக் கல்யாணத்தில் ஒரே பிடி வாதமா யிருந்தாள். கடைசியில் நடந்தது என்ன? ஒரு சுப முகூர்த்தத்தில் சாந்தி என் கரம் பற்றினாள். என் தாயாருக்கு அன்றைய தினத்திலிருந்து வீட்டு வேலைகளிலிருந்து ஒருமாதிரி ஓய்வு கிடைத்தது.

சாந்தி வீட்டுக்கு வந்த அதிர்ஷ்டம் தானோ என்னவோ, சென்னையில் எனக்கு ஒரு நல்ல உத்தியோகம் கிடைத்தது. சாந்தி யையும் என் தாயாரையும் அழைத்துக் கொண்டு சென்னைக்கு வந்து சேர்ந்தேன். ஆனால் என் மனசில் மட்டும் சாந்தியில்லை. சென்னைக்கு வந்ததும் என் பழைய கல்லூரி நண்பர்களை யெல்லாம் சந்தித்து, ஜயந்தி யைப் பற்றி விசாரித்தேன். அவள் முன்பு ஊருக்குப் போன பிறகு மறுபடியும் கல்லூ ரிக்கு வரவில்லை என்று தெரிய வந்தது.

என் மனதில் அர்த்தமற்ற ஏக்கம் குடி கொண்டது. ஒரு வேளை ஜயந்தி என்னை நினைத்து ஏங்குகிறாளோ என்று என் மனம் அவளை நினைத்து ஏங்கியது. நான் அவளை



**சாப்பிட உட்கார்ந்திருந்தவர்** :— இந்தாருங் கள், ஸர்வர்! அந்தக் கூட்டுக் கிண்ணத்தை எடுத்துக் கொண்டு வாருங்கள்.

**ஸர்வர்** :—கூட்டு, கறியெல்லாம் இரண் டாந் தடவை போடக் கூடாது என்று முதலாளியின் உத்தரவு, ஸார்!

**சாப்பிடவந்தவர்** :—உம்மை இரண்டாம் தடவை போடச் சொல்லவில்லை, ஐயா! முதல் தடவை போட்டிருக்கிறதையே எடுத்துப் போய் விடுங்கள் என்று சொல் வதற்காகத் தான் கூப்பிட்டேன்!

மறந்து வேறொரு பெண்ணை மணந்துகொண்டு விட்டேன் என்று தெரிந்து விட்டால் அவன் மனம் என்ன பாடுபடும்! இந்த நினைவில் இருந்த எனக்குச் சாந்தியை ஒரு பொருட்டாகவே நினைக்கத் தோன்றவில்லை. அற்பப் பிழைகளுக் கெல்லாம் அவளிடம் எரிந்து விழுந்தேன். அவளை ஒரு நாள் கூட என்னுடன் வெளியே அழைத்துச் சென்றதில்லை. ஜயந்தியை அடைய முடியாமற் போனதற்குக் காரணம் சாந்தி என் வாழ்க்கையில் குறுக்கிட்டதுதான் என்று நான் தீர்மானித்துக்கொண்டு விட்டேன். அதன் காரணமாக அவளிடம் இன்னும் வெறுப்புக் காட்ட ஆரம்பித்தேன். ஆனால் சாந்தி இது விஷயமாக என்னிடம் ஒரு நாள் கூட முகங்கடுத்ததில்லை.

என் தாயாரிடம் சாந்தி மதிப்பும் மரியாதையும் வைத்து அளவு கடந்த அன்போடு பழகினாள். அம்மாவும் அவள் அன்பு கலந்த உபசரணைகளில் பூரித்துப் போனாள். வாய்க்கு வாய் "சாந்தி, சாந்தி!" என்று அழைத்து மகிழ்ந்தாள். என் மனமும் அதைக் கண்டு ஓரளவு சாந்தியடைந்தது. தாயாருக்காகத் தானே நான் சாந்தியைக் கல்யாணம் செய்து கொண்டேன்! அவளுக்குத் திருப்தியிருந்தால் சரிதான் என்று நான் எண்ணினேன்.

சாந்தியின் சாந்தமான சுபாவம் என் முரட்டுத்தனமான போக்குக்குச் சாதகமாகவே இருந்தது. எத்தனையோ தடவை நான் அவளைக் கடு கடு வென்று முகத்தை வைத்துக் கொண்டு எடுத்ததற்கெல்லாம் எரிந்து விழுந்திருக்கிறேன். அதை யெல்லாம் அவள் துளிக் கூடப் பொருட்படுத்தாமல் இருந்தாள். ஒழிந்த வேளைகளில் சாந்தி என் தாயாருக்குச் சில நல்ல புத்தகங்களைப் படித்துச் சொல்லுவாள். அப்போது அம்மா அடையும் ஆனந்தத்தைச் சொல்லி முடியாது.

"சாந்தி உன்னைவிட எவ்வளவோ சின்னவள். சினிமா, கச்சேரி என்று இப்படி எங்கேயாவது வெளியே போக அவளுக்கு ஆசையா யிருக்காதா? ஓயாமல் எரிந்து விழுந்து கரித்துக் கொட்டினால் ஒரு பெண் மனசு என்ன பாடு படும்!" என்று என் தாயார் என்னை எவ்வளவோ தடவை கண்டித்திருக்கிறாள். அந்தமாதிரி சமயங்களில் நான் வாய் திறவாமல் மௌனியாகி விடுவேன். சாந்தியின்மேல் குற்றம் சுமத்த வெளிப்படையான காரணம் ஏதாவது இருந்தால்தானே நான் வாய்திறக்க முடியும்?

அந்த வருஷம் சீஸனில் குற்றாலம் போவதாக என் நண்பர்கள் சிலர் நிச்சயித்தனர். என்னையும் அழைத்தனர். நிம்மதி யில்லாத என் மனத்துக்கு இது கொஞ்சம் நிம்மதியை அளிக்கலாம் என்று நினைத்து நான் அதற்குச் சம்மதித்தேன்.

அன்று வெள்ளிக்கிழமை. என் மனைவி சாந்தி குத்து விளக்கின் எதிரில் அமர்ந்து தேவி ஸ்தோத்திரம் படித்துக் கொண்டிருந்தாள். அம்மா சுவரில் சாய்ந்து கொண்டு



அவள் படிப்பதைக் கேட்டுக் கொண்டிருந்தாள். என் குற்றாலப் பிரயாணத்தைப் பற்றி அம்மாவிடம் பிரஸ்தாபித்தேன். அதற்கு என் தாயார் கூறிய பதில் என்னைத் திடுக்கிட வைத்தது. "தக்க துணையாக இருப்பதால் பக்கத்து வீட்டுக்காரர்களுடன் காசிக்குப் போகலாம் என்றிருக்கிறேன். அவர்கள் அடுத்த வாரம் புறப்படுகிறார்கள். நீ குற்றாலம் போய்ச் சில நாள் தங்கி யிருப்பது பற்றி எனக்கு ரொம்ப சந்தோஷம். சாந்தியையும் உன்னோடு அழைத்துக் கொண்டு போ. நான் இல்லாமல் அவள் மட்டும் இங்கே தனியே இருக்க முடியாதல்லவா? வீண் பிடிவாதம் செய்யாதே!" என்றாள்.

"தனியாகக் கொஞ்ச நாள் இருக்கலாம் என்றுதான் குற்றாலம் போகத் தீர்மானித்தேன்? சாந்தியை அழைத்துக் கொண்டு நான் எங்கேயும் போகத் தயாரா யில்லை!" என்று மிகவும் கோபத்தோடு கூறினேன்.

வழக்கம்போல் அம்மா இன்று கொஞ்சங் கூட விட்டுக் கொடுக்கவில்லை. போடு போடு என்று போட்டு என்னை அயர்ந்து போகும்படி செய்து விட்டாள். கடைசியில் நான் வேறு வழியில்லாமல் சாந்தியையும் என்னுடன் குற்றாலத்துக்கு அழைத்துக் கொண்டு போகச் சம்மதித்தேன். இவ்வளவுக்கும் சாந்தி வாய் திறக்கவில்லை.

அடுத்த வாரம், ஆபீசில் ஒரு மாதத்துக்கு லீவு வாங்கிக் கொண்டேன். அம்மா சந்தோஷத்துடன் என்னையும் சாந்தியையும் குற்றாலத்துக்கு ரயிலேற்றி விட்டுத் தான் காசிக்குப் பயண மானாள்.

இப்பொழுது குற்றாலத்துக்கு வந்து ஒரு வாரம் ஆகிறது. ஒரு நண்பரின் உதவியினால் ஒரு பங்களாவில் இடம் பிடித்துக் கொண்டு சாந்தியுடன் தங்கி யிருக்கிறேன். குற்றால வாசமோ, அருவி ஸ்நானமோ என் மனசுக்குப் பூரண அமைதியைத் தரவில்லை. மீண்டும்

மீண்டும் பழைய நினைவுகளில் என் மனம் சிக்கிச் சுழன்றது; அமைதி நழுவியது.

என் சமீபத்தில் யாரோ வரும் அரவம் கேட்டு என் பழைய நினைவுகளிலிருந்து விடுபட்டுத் திரும்பினேன்.

"என்னடா, விழிக்கிறாய்? என்னைத் தெரியவில்லையா? நேற்றுக் காலையில்தான் நான் இங்கு வந்தேன். உடனே உன்னைப் பார்க்க முடியவில்லை!" என்று சொல்லிக்கொண்டே என் பக்கத்தில் உட்கார்ந்தான், என் பழைய நண்பன் ஸ்ரீகாந்தன்.

ஸ்ரீகாந்தனும் நானும் பால்ய நண்பர்கள். அவன் என்னை விட்டுப் பிரிந்து பல வருஷங்கள் ஆகிவிட்டன.

"என்ன அப்பா, ஒரேயடியாக உருமாறி இளைத்துப் போய் விட்டாயே!" என்றேன்.

"எல்லாம் சம்சாரத் தொல்லைதான், அப்பா!" என்றான் ஸ்ரீகாந்தன் விரக்தியுடன்.

"என்ன, உனக்கு விவாகம் ஆகிவிட்டதா?"

"ஆகிவிட்டது!" என்றான் அசுவாரஸ்யமாக. பிறகு, "என் மனசில் இருப்பதை யாரிடமாவது சொன்னால்தான் எனக்கும் கொஞ்சம் ஆறுதலாயிருக்கும்!" என்று சொல்லிவிட்டுத் தன் கதையைச் சொன்னான்.

ஸ்ரீகாந்தன் திருச்சியில் படித்து பி. ஏ., பாஸ் செய்து விட்டுக் கோயமுத்தூரில் இருக்கும் தன் மாமா வீட்டுக்குப் போய்ச் சில காலம் இருந்தான். அவர் உதவியால் நல்ல உத்தியோகம் கிடைத்தது.

அவன் மாமா வீட்டுக்கு எதிரில் பதினாறு, பதினேழு வயதுள்ள பெண் ஒருத்தி இருந்தாள். அவள் அவன் தங்கைக்குத் தோழி. அடிக்கடி அவர்கள் வீட்டுக்கு வருவாள். நல்ல அழகி. அத்துடன் பணக்காரர் வீட்டுப் பெண்ணும் கூட. என் மாமாவின் முயற்சியினால் அந்த அழகு ராணி, ஏராளமான சீர் செனத்திகளுடன் ஸ்ரீகாந்தனின் மனைவியானாள். அவன் தாயார் மருமகளின் பாத்திரம் பண்டங்களையும், சொத்து சுதந்திரங்களையும் பார்த்துப் பூரித்துப் போனாள்.

ஆனால் கொஞ்ச நாளைக்குத்தான் அந்தப் பூரிப்பு நிலைத்திருந்தது. அவள் மாமியாரைக் கொஞ்சமும் மதிக்காமல் மனம் போனபடி நடக்க ஆரம்பித்தாள். நினைத்தபொழுது தன் தோழிகளின் வீட்டுக்கும் பிறந்த வீட்டுக்கும் போய் விடுவாள். இதைப் பற்றி யெல்லாம் ஏதாவது கேட்க ஆரம்பித்தால் அழுது ஆர்ப்பாட்டம் செய்ய ஆரம்பித்து விடுவாள். வீட்டில் அவள் வைத்தது சட்டமாக இருக்க வேண்டும் என்று விரும்பினாள்.

இந்த வரலாற்றைச் சொல்லும்பொழுது ஸ்ரீகாந்தனின் குரல் தழு தழுத்தது.

"அவளைப் போலவே அவள் பெயரும் அழகாயிருக்கிறது — ஜயந்தி! கல்லூரிப் படிப்பு வேறு..." என்று அவன் சொன்னதும் திடுக்கிட்டேன். ஜயந்தியின் பெற்றோர்கள் இருந்த ஊரும் கோயமுத்தூர்தான். நல்லவேளையாக என் முகத்தில் ஏற்பட்ட மாறுதலை என் நண்பன் கவனிக்கவில்லை.

"...... முதலில் ஒரு பெண் எனக்கு மனைவியாக வாய்க்க இருந்தாள். அவள் தஞ்சாவூரில் ஒரு ஏழை உபாத்தியாயரின் பெண் என்கிற காரணத்தினால் என் பெற்றோர்களும், மாமாவும் விரும்பவில்லை. அவள் கோயமுத்தூரில் நடந்த எங்கள் உறவினரின் வீட்டுக் கல்யாணத்துக்கு வந்திருந்தாள். அப்பா! அவள் முகத்தில்தான் என்ன அமைதி என்கிறாய்! பெயரும் பொருத்தமான பெயர்தான்—சாந்தி! அவளை மனைவியாக அடைந்தவன் பாக்கியசாலி ......!" என்று மேலும் ஏதோ சொல்லிக் கொண்டே போனான். நான் மிகவும் கலங்கிப் போனேன். அப்பொழுதே ஓடிப் போய்ச் சாந்தியைப் பார்த்துக் கோவென்று கதறி அழ வேண்டும் போல் இருந்தது.

"...... சரி. நாம் போகலாமா?" என்று கூறி எழுந்தேன். அவனும் எழுந்தான். பிறகு வீடு போய்ச் சேரும் வரையில் இருவரும் ஒரு வார்த்தைகூடப் பேசவில்லை.

கொஞ்ச தூரம் போனதும் ஸ்ரீகாந்தன், "நான் இந்த வீட்டில்தான் தங்கியிருக்கிறேன். நாளைக்கு உன் மனைவியையும் அழைத்துக்கொண்டு வா!" என்றான்.

நான் சம்மதத்துக்கு அறிகுறியாகத் தலையை ஆட்டி விட்டு நடந்தேன்.

நான் தங்கியிருந்த பங்களாவில் விளக்கு எரிந்துகொண்டிருந்தது. என் மனைவி சாந்தி ஏதோ படித்துக் கொண்டிருந்தாள்.

"சாந்தி, உனக்குத் தூக்கம் வரவில்லையா?" என்று கேட்டேன்.

அவள் வியப்புடன் என்னை ஒரு பார்வை பார்த்தாள். ஆம், இத்தனை காலமும் இல்லாத ஒரு அன்பு என் குரலில் பீறிட்டுக் கொண்டு தொனித்தது என்றால் அவளுக்கு அது வியப்பாய்த்தானே யிருக்கும்? நான் புது மனிதனாக மாறி விட்டேன் என்பது அவளுக்கு எப்படித் தெரியும்?

"நீங்கள் வெளியே போனவர் வெகுநேரம் ஆகியும் வராமல் இருக்கவே எனக்குத் தூக்கம் வரவில்லை" என்றாள் சாந்தி. இதைச் சொல்லும்போது அவள் குரலில் ஒரு அமைதி இருந்தது. இதுவரையில் அவள் என் முகத்தைப் பார்த்து இவ்வளவு உற்சாகமாக ஒரு வார்த்தைகூடப் பேசியதில்லை. நான்தான் அவளைக் கண்டாலே எரிந்து விழுந்தேனே!

"சாந்தி! என் பால்ய நண்பன் ஒருவனைச் சந்தித்தேன். பேசிக் கொண்டிருந்து விட்டேன். நேரம் போனது தெரியவில்லை. நாளைய தினத்திலிருந்து நீயும் நானும் சேர்ந்துதான் வெளியே போக வேண்டும்! என்ன, தெரிந்ததா?" என்றேன், அவள் அழகிய கைகள் இரண்டையும் சேர்த்துப் பிடித்துக் கொண்டு.

"உம்!" என்றாள் சாந்தி. வியப்பினால் அவளது நயனங்கள் விரிந்தன. ஆமாம், சாந்தியினால் என் மனம் நிறைந்தது.




ரா. வீ.

மிகப் பயங்கரமாக விறிட்டு விட்டுக் காலிகோ தரையில் படுத்தான். அதுவோ அமைதியே உருவான காட்டுப் பிரதேசம். நல்ல பனி வேறு பெய்து கொண்டிருந்தது. தீயின் சூடு பட்டுச் சிவப்பேறிப்போன 'ஸ்டவ்' மீது தண்ணீரைத் தெளித்தால், அது 'உச்ச்' என்ற ஓசையுடன் அவிந்து போகும் அல்லவா! அதே போல, அமைதியே உருவான அந்தச் சூழ்நிலையைக் கிழித்துக் கொண்டு 'விர்' என்று வேகத்துடன் சீறியவாறே சென்ற குண்டு அவனைத் தாண்டிச் சென்று 'உச்ச்' என்று சத்தத்துடன் ஓய்ந்து அவிந்தது. அவியும் பொழுது அது சும்மா அவியவில்லை. காலிகோவுக்கு வழி காட்டியாக வந்தவனின் மார்பைத் துளைத்துச் சென்று காலிகோவின் எதிரே மரண தேவதையைக் கொண்டு வந்து நிறுத்திவிட்டுத் தான் மறைந்தது. காலிகோவின் கண்களுக் கெதிரிலேயே வழி காட்டி மீனைப்போலத் துடித்து மரித்து விட்டான்.

சில கணங்களுக்கெல்லாம் இன்னொரு குண்டு மலைப் பாறைகளில் மோதி எதிரொலித்தது. காலிகோ தூரதிருஷ்டிக் கண்ணாடியைக் கொண்டு கவனித்தான். ஆனால் அவனுக்கு அல்பேனியாவின் நீல வான வெளியையும் மலைப் பாறைகளையும் தவிர வேறு ஒன்றும் புலனாகவில்லை. ஆயிரம் கஜ தூரத்துக்கப்பாலிருந்து யாரோ சுட்டுக் கொண்டிருக்க வேண்டும் என்று அவன் ஊகித்தான். பக்கத்து மலைப் பிரதேசத்தில் ஒரு கழுகு பறந்து கொண்டிருப்பதையும் காலிகோ கண்டான். மரண பயம் அவன் உடலை ஒரு தடவை தூக்கிப் போட்டது.

இருட்டுவதற்கு இன்னும் மூன்று மணி நேரந் தான் பாக்கி இருந்தது. அத்தனை நேரம் அவன் அங்கேயேதான் காத்திருக்க வேண்டும். நட்சத்திரங்களின் வெளிச்சத்தைக் கொண்டுதான் அவன் முன்னேறியாக வேண்டும். ஆனால் வழி காட்டியே பகல் வேளையில் வழி மறந்து விடும் பொழுது, அவன் இரவு வேளையில், அந்தக் கும்மிருட்டில், அந்த அறியாப் பிரதேசத்தில் எப்படி முன்னேற முடியும்! பாறைகளுக் கிடையே மறைவில் படுத்தவாறு அவன் இதைப் பற்றித் தான் சிந்தித்துக் கொண்டிருந்தான். சிறிது நேரத்துக் கெல்லாம் அப்படியே ஊர்ந்தவாறே இறந்து கிடந்த வழிகாட்டியை நெருங்கினான். அவனை நெருங்கியதும் அவனது இடுப்புப் பட்டையை அவிழ்த்து ஆகாரப் பையைத் திறந்து பார்த்தான். சில ரொட்டிகளும் ஒரு வெங்காயமும் கிடைத்தன. அதைத் தின்னத் தொடங்கினான். அப்பொழுது திடீரென்று அவனுக்கு அந்த விஷயம் நினைவு வந்தது. துப்பாக்கியால் வழி காட்டியைச் சுட்டவன், அவனிடம் இருக்கும் ஆயுதங்களை எடுத்துச் செல்லும் நோக்கத்துடன் மலை வழியே இங்கே வரலாம் அல்லவா! அதை எண்ணியதும் அவன் அந்த வழி காட்டியின் சவத்தை இழுத்து வெகு தூரம் பாறைகளுக்குக் கீழே உருட்டி விட்டான். சவம் கீழே உருண்டு விழும் சத்தத்தைக் கேட்டு மனத்தைத் திருப்தி செய்து கொண்டு, அவன் முழங்காலின் பலத்தைக் கொண்டு ஊர்ந்தவாறு மறுபடியும் பாறைகளுக்கிடையே மறைவிலேபோய் மறைந்து கொண்டான்.

இருட்டியதும் அவன் நடக்கத் தொடங்கினான். நடந்தான், நடந்தான்; இரவு முழுவதும் நடந்தான். கால்கள் கடுத்து விட்டன. உடல் ஓய்ந்து விட்டது. ஆகவே, நிர்மானுஷ்யமான அந்தப் பிரதேசத்தில் அப்படியே படுத்து உறங்கி விட்டான். நன்றாகப் பொழுது விடிந்த பின்தான் அவன் விழித்துக் கொண்டான். மறுபடியும் ஊர்ந்தவாறே முன்னேறலானான். அன்று மாலைப் பொழுது வருவதற்குள் அவன் நிலைமை பித்தனைப் போன்றதாகி விட்டது. அவன் காரணமின்றியே கூச்சலிடவும் சிரிக்கவும் தொடங்கிவிட்டான். பன்னிரண்டு மணி நேரத்துக்கு முன் அவனுடைய கடிகாரம் உடைந்து போய்விட்டது. ஆகவே, அதில் அப்பொழுதும் மணி மூன்றுதான் ஆகியிருந்தது. அதே சமயம் அவனுக்குச் சற்றுத் தொலைவில் ஒரு கட்டடம் காணப்பட்டது. நம்பிக்கை

யும் பயமும் அவன் உள்ளத்திலே மாறி மாறி எழுந்து அவன் மனத்தைக் குழப்பலாயின.

களைத்துச் சலித்துப்போன, பித்தனைப் போலாகி விட்ட காலிகோவின் கண்களில் நீர் அரும்பிற்று. அவன் கண்டது வெறுங் கானல் நீர் அல்ல. அந்தப் பள்ளத்தாக்கில் உண்மையாகவே, செங்கல், கருங்கல், மண் ஆகியவற்றைக் கொண்டு அமைக்கப்பட்ட அழகிய வீடுதான். தட்டுத்தடுமாறி எப்படியாவது அந்த வீடுவரை போய்ச் சேரக் கூடிய சக்திதான் அவனிடம் எஞ்சியிருந்தது. அவன் மூச்சைப் பிடித்துக் கொண்டு அங்கே போய்க் கதவைத் தட்டினான். கதவு திறந்தது. மையிருளில் முன்னேறிய காலிகோ வாசற்படி தடுக்கி விழுந்து விட்டான். வெகு தூரத்திலிருந்து யாரோ கம்பீரமாக உரத்த குரலில், "வா, அப்பா! வா!" என்று அழைப்பது போல் அவன் காதுகளில் விழுந்தது. அதற்குமேல் காலிகோவினால் ஒன்றையும் பார்க்கவும் முடியவில்லை; கேட்கவும் முடியவில்லை.



வள்ளிசாக இருபத்திநாலு மணி நேரங் கழித்து அவன் கண் விழித்த பொழுது, தன்வாய் அருகில் ஒரு கிண்ணம் இருப்பதைக் கண்டான். வெற்றுமை வழிந்த விழிகளுடன் நாற்புறமும் ஒருமுறை கண்ணை ஓட்டினான்.

முதன் முதலாக அவன் பார்வை 'குப்' கோப்பையைப் பிடித்திருந்த கையின்மேல் விழுந்தது. அந்தக் கை எரிந்த கொள்ளிக் கட்டையைப் போலக் கறுப்பாக, ஆனால் நல்ல பலம் பொருந்தியதாக இருந்தது. நரம்புகள் பென்சில் அளவு கனம் புடைத்திருந்தன. கைகளைப் பார்த்துக்கொண்டே வந்தவன் அவர் அணிந்திருந்த கோட்டுத் துணியின் கைகளையும் பார்த்தான். அதில் பட்டினால் பலவிதச் சித்திர வேலைப்பாடுகள் செய்யப்பட்டிருந்தன. பிறகு அவன் தலையிலிருந்து கால்வரை ஒரு முறை ஏற இறங்கப் பார்த்து அவரை ஒரு விதமாக அளந்து கொண்டான். அவருடைய அழுத்தமான மோவாய், யானைத் தந்தத்தைப் போல வெண்மையாக வெளியே நீண்டிருக்கும் மீசை, கிளி போன்ற மூக்கு, கருமை தீட்டியிருக்கும் கண்கள், அவற்றுக்கு மேலே காணப்படும் அகன்ற நீண்ட நெற்றி, அந்த நெற்றியிலே காணப்படும் ஆழ்ந்த கோடுகள், தலையிலே கலைச் சிறப்புக் கொண்ட தொப்பி — காலிகோ கண் கொட்டாமல் அவரையே பார்த்துக் கொண்டிருந்தான்.

அச்சத்தினால் அவனுடைய உடல் ஒரு தடவை குலுங்கியது. ஏனெனில் அவர் அல்பேனியாவாசி. அவருடைய கூரிய பார்வையை அவனால் வெகு நேரம் வரை வைத்த கண் வைத்தபடி பார்த்துக் கொண்டிருக்க முடியவில்லை. பிறகு அவன் சட்டென்று எழுந்து நிற்க முயன்றான்.

"களைப்பாறுங்கள்!" என்றார் கிழவர். காலிகோ தட்டுத் தடுமாறியவாறே, "ஆனால்...ஆனால் நான் இத்தாலியன் ஆயிற்றே! நான் யார், தெரியுமா! லெப்டினென்ட் காலிகோ!" என்றான்.

"லெப்டினென்டாக இருந்தால் என்ன!" கிழவர் அவனைத் தேற்றியவாறே, "நீங்கள் என்னுடைய அதிதி. அதிதிகளுக்கு மரியாதை செய்வதை நாங்கள் எங்கள் முக்கிய கடமைகளில் ஒன்றாகக் கருதுகிறோம். தாங்கள் என் வீடு தேடி வந்திருக்கிறீர்கள். என் குடிசை நிழலுக்குக் கீழே அமர்ந்திருக்கிறீர்கள். நீங்கள் எவ்விதப் பயமுமின்றி இங்கே இருக்கலாம். இங்கேயே சாப்பிடுங்கள்!" என்றார்.

"ஆனால் நாங்கள் உங்கள் தேசத்தின் மீது படை அல்லவா எடுத்திருக்கிறோம்!"

"ஆமாம், அது எனக்குத் தெரியும்!"

"அப்படியானால் நான் உங்கள் கைதி என்றல்லவா ஆகிறது!" என்றான் காலிகோ சந்தேகத்துடன்.

"இல்லை. தாங்கள் கைதி இல்லை. நீங்கள் எங்கள் அதிதி, விருந்தாளி என்றுதான் நான் முன்பே சொல்லி விட்டேனே! இப்பொழுது நீங்கள் என் படுக்கையில் படுத்துத் தூங்கிக் கொண்டிருக்கிறீர்கள். என் மனைவி தான் தங்கள் கால்களில் கட்டுக் கட்டியிருக்கிறாள். இந்த வீட்டை நீங்கள் உங்கள் வீடாகவே கருதுங்கள். நீங்கள் எவ்வளவு நாட்கள் விரும்பினாலும் இங்கே ஆனந்தமாக இருக்கலாம். நீங்கள் இங்கே ஒரு நாள் இருக்க விரும்பினால் ஒரு நாள் இருக்கலாம். ஒரு வருஷம் இருக்க விரும்பினால் ஒரு வருஷமும் இருக்கலாம். நாங்கள் உங்களுக்கு எங்களால் இயன்ற விருந்து உபசாரம் செய்யச் சித்தமா யிருக்கிறோம். நீங்கள் எங்கேயாவது போக விரும்பினால் என் குதிரையைத் தங்கள் குதிரையாகக் கருதி எடுத்துச் செல்லலாம். என் குடிசையின் நிழலில் இருக்கும் வரை, என் உயிரைக் கொடுத்தாவது உங்கள் உயிரைக் காக்க முயலுவேன். இது சத்தியம்" என்றார் கிழவர்.

காலிகோ தன் அக்கம் பக்கத்தை ஒரு முறை சுற்றிப் பார்த்தான். விசாலமான அறையில் பெரிய பூப்போன்ற மிருதுவான மெத்தையில் அவன் அப்பொழுது படுத்திருந்தான். தரையில் விரிப்பு விரிக்கப்பட்டிருந்தது. சில பித்தளை மேஜைகள் போடப்பட்டிருந்தன. ஒரு பித்தளை விளக்கின் மங்கலான ஒளி அறைச் சுவர்களின் மீது விழுந்திருந்தது. நான்கைந்து அகல் விளக்கு

களும் இருந்தன. எண்ணெய் விட்டுத் திரிபோடப்பட்டு அவையும் எரிந்து கொண்டிருந்தன. பக்கத்திலே ஒரு ரேடியோ கிராம் இருந்தது. அதன் மேல் நீர் நிறைந்த துருக்கிஸ்தானத்துக் கூஜா ஒன்று வைக்கப்பட்டிருந்தது.

“தாங்கள் இப்பொழுதே சாப்பிடுகிறீர்களா, இன்னும் சிறிது நேரம் போகட்டுமா!” என்று கேட்ட கிழவர், “நீங்கள் கிறிஸ்தவர்தானே! சாராயமும் அருந்துவீர்கள் என்று எண்ணுகிறேன். நாங்கள் முகம்மதியர்கள். சாராயத்தைத் தொடுவதில்லை. நாங்கள் ஆகாரத்துடன் உங்களுக்குச் சாராயம் கொடுக்க இயலாத நிலையில் இருக்கிறோம். அதற்காகத் தயவுசெய்து மன்னிக்க வேண்டும். இருந்தாலும் நான் பிராந்தியும் சிகரெட்டும் வாங்கிவர என் வேலைக்காரனை அனுப்பியிருக்கிறேன். நாங்கள் ஹுக்கா தான் குடிப்பது வழக்கம். ஆகவே, சிகரெட் வரும் வரையில் நீங்கள் என் ஹுக்காவையே உபயோகப்படுத்தினால் அது தங்கள் கருணை ஆகும். என் பெண்கள் தங்கள் கோட்டைப் பழுது பார்த்துவைத்திருக்கிறார்கள். தங்கள் செருப்புகளும் வீணாகி விட்டன. ஆகவே, நாங்கள் அதை விட்டெறிந்து விட்டோம். நீங்கள் என் பாதரட்சையைப்போட்டுக் கொள்ளுங்கள். அது மொராக்கோத் தோலினால் ஆனது. மிகவும் மிருதுவாயிருக்கும். என் பெண்கள் இன்றைக்கே தங்களுக்குச் சட்டை தைத்து விடுவார்கள். காலையில் இருந்தே அவர்கள் தையல் வேலையில் ஈடுபட்டிருக்கிறார்கள்!” என்று இவ்வளவையும் மூச்சுவிடாமல் ஒரு மூச்சில் சொல்லி முடித்தார் கிழவர்.

“நான் போக வேண்டும். நான் என் படையில் போய்க் கலந்து கொள்ள விரும்புகிறேன்!” என்றான் காஸிகோ.

“உங்கள் இஷ்டத்துக்கு விரோதமாக ஒன்றும் நடக்காது. தயவு செய்து முதலில் சாப்பிடுங்கள்!” என்றார் கிழவர் மிகவும் மரியாதையாக.

இதைச் சொன்னதும் கிழவர் கையைத் தட்டினார். ஆகாரத் தட்டைத் தூக்கியவாறு பெண்கள் அறைக்குள் நுழைந்தார்கள். காஸிகோ வயிறு நிரம்பச் சாப்பிட்டான். அவன் இழந்து விட்ட சக்தியும் உற்சாகமும் மீண்டும் திரும்பி வந்தன.

“இன்றைக்கு ஏதாவது புதிய செய்தி உண்டா!” என்று கேட்டான் காஸிகோ.

“சக்கரவர்த்தி ஜோக் நாட்டை விட்டு ஓடி விட்டார். அல்பேனியாவின் மீது இத்தாலிய ஆட்சி ஏற்பட்டுவிட்டது” என்றார் கிழவர்.



ஆனந்தம் தாளாமல் காஸிகோ ஒரு குதி குதித்தான். ‘இந்தக் கிழவன் எனக்கு மரியாதை செய்வதற்கு இதுதான் காரணம்!’ என்று தன் மனத்துள் சொல்லிக் கொண்டான்.

பிறகு அவன் கருணை நிறைந்த பார்வையில் கிழவரைப் பார்த்து அதிகாரம் தொனிக்கும் குரலில், “நீ எனக்குச் செய்த இந்த மரியாதைகளை நான் என்றென்றும் மறக்கமாட்டேன் என்று உனக்கு உறுதி அளிக்கிறேன்” என்றான்.

“நான் சொல்வதன் பொருளை நீங்கள் சரியாகப் புரிந்து கொள்ளவில்லை என்று எண்ணுகிறேன். தாங்கள் என் விருந்தாளி, தங்களுக்குச் சௌகரியம் செய்து கொடுக்க வேண்டியது என் கடமை. இதைத்தான் நான் தங்களுக்குச் சொல்ல விரும்புகிறேன். ஆனால் எனக்கு ஒரே ஒரு வருத்தம் என்னவென்றால் தாங்கள் இத்தாலியனாகப் பிறந்து விட்டீர்கள். அது தங்கள் துர்ப்பாக்கியமே தவிர என்னுடைய குற்றமல்ல!” என்றார் கிழவர்.

“துர்ப்பாக்கியமா! எது துர்ப்பாக்கியம்! நாக்கை அடக்கிப் பேசு!” என்று சீறினான் காஸிகோ.

“ஆமாம், அது தங்கள் துர்ப்பாக்கியம்தான். ஏனெனில் தாங்கள் என்னுடைய வீட்டில் அதிதியாக இருந்த பொழுதிலும், யுத்த களத்தில் எங்களுக்குச் சத்துருதானே! தாங்கள் என் வீடு தேடி வந்துவிட்டீர்கள். அதிதிகளுக்கு மரியாதைசெய்வது எங்களுடைய சம்பிரதாயம் மட்டும் அல்ல. எங்களுடைய மிக மிக முக்கியமான தர்மங்களில் ஒன்று. இத்தாலி வெற்றி பெற்று விட்டது என்பதற்காக நான் உங்களுக்கு மரியாதையோ பெருமையோ கொடுக்கவில்லை; உங்களை முகஸ்துதி செய்யவோ ஸ்தோத்திரம் செய்யவோ இல்லை. ஒரு உண்மைக் கிருஹஸ்தன் அநுஷ்டிக்க வேண்டிய தர்மத்தை அநுஷ்டிக்கிறேனே ஒழிய, வேறு ஒன்றும் இல்லை. தெரிந்து கொள்ளுங்கள்!” என்றார் கிழவர்.

காஸிகோ பதில் பேசவில்லை.

“தயவு செய்து இந்த இனிப்புப் பட்சணத்தையும் சாப்பிட்டுப் பாருங்கள்!” என்றார் கிழவர்.

“நல்ல ருசியான சமையல் செய்கிறீர்கள் நீங்கள். சண்டை என்ன! வெறும் வேடிக்கையாகப் போயிற்று! நீங்கள் எதிர்த்துச் சண்டை போட்டால் அல்லவா! இந்த மலைப் பிராந்தியத்தில் இருக்கும் நீங்கள் குறி வைத்துச் சுடுவதில் கைதேர்ந்தவர்கள்தான் என்பதை நான் ஒப்புக் கொண்டுதான் ஆகவேண்டும். மலை வழியாக நான் வந்து கொண்டிருந்த பொழுது, ஆயிரம் கஜத்துக்கு அப்பாலிருந்து யாரோ மலைப் பிராந்தி

யத்து ஆசாமி ஒருவன், எனக்கு வழி காட்டியாக வந்தவனை கொன்று போட்டுவிட்டான்......"

காலிகோ சட்டென்று பேச்சை நிறுத்தி எதையோ காது கொடுத்துக் கவனமாகக் கேட்க லானான். வெளியே சில ஸ்திரீகள் அடித்துக் கொண்டும் அழுதுகொண்டும் இருந்தார்கள்.

காலிகோ கலங்கிப்போய், "அழுவது யார் !" என்று கேட்டான்.

அப்பொழுது ஒரு கிழவி அங்கே வந்து, "நம் குழந்தைகள் வீட்டுக்கு வந்து கொண்டிருக் கிறார்கள் !" என்றாள்.

அந்தக் கிழவியின் முகம் கருத்துக் கலை இழந்திருந்ததையும், வாயைத் திறக்காமல் பல்லைக் கடித்துக்கொண்டு பேசியதையும் காலிகோ கவனித்தான். கிழவி சொன்னதைக் கேட்டதும் கிழவர் உணர்ச்சியற்ற பிண்டம் போல நின்றார்.

கதவு திறந்தது. இரண்டு ஆசாமிகள் ஒரு சவத்தைப் பலகை ஒன்றில் போட்டுத் தூக்கியவாறு உள்ளே நுழைந்தார்கள்.

"இவன்தான் என் மூத்த பையன் !" என்று சவத்தைச் சுட்டிக் காட்டிச் சொன்ன கிழவர், "மன்னிக்க வேண்டும். தங்கள் அமைதிக்கு இடையூறு ஏற்பட்டு விட்டது. இன்னும் என்னுடைய நான்கு பையன்களின் பிணத்தைக் கொண்டு வந்து கொண்டிருக்கிறார்கள்" என்றார்.

கிழவரின் முகம் பனிக்கட்டியைப் போல உருகுவதைக் கண்டான் காலிகோ. பெரிய பெரிய கண்ணீர்த் துளிகள் கன்னங்கள் வழியே வழிவதையும் பார்த்தான். அதைப் பார்த்த அவனுடைய பருத்த கட்டமைந்த உடல் நடுங்கத் தொடங்கியது. கிழவர் கம்பீரமான குரலில், "பேசாதே, ரூபி ! நம் வீட்டில் விருந்தாளி தங்கியிருக்கிறார். நிலைவிருக்கட்டும் !" என்று அதட்டினார்.



"என்ன அப்பா, உங்கள் கம்பெனியைப் பற்றிய விளம்பரத்தைப் பத்திரிகையிலே பார்த்தேன். 'முற்றிலும் புதிய நிர்வாகத்தின் கீழ் நடந்து வருகிறது' என்று அதில் போட்டிருந்தது. ஆனால் உன் ஆபீஸில் பழைய மானேஜர்தானே இருக்கிறார் ?"

"ஆமாம். பழைய மானேஜர்தான். ஆனால் அவருக்கு இப்பொழுதுதான் இரண்டாம் விவாகம் நடந்து மனைவி வீட்டுக்கு வந்திருக்கிறாள் !"

அவருடைய கடைசிப் பிள்ளையும் மேஜை விரித்திருந்த கம்பளத்தில் சவமாகக் கிடந்தான். அவனுடைய உயிரற்ற கை ஒரு புறம் தொங்கிக் கொண்டிருந்தது. கிழவி குனிந்து அந்தக் கையைத் தூக்கி மார்புடன் ஒட்டி வைத்தாள். பிறகு முந்தானையினால் கண்களைத் துடைத்துக் கொண்டு பக்கத்து அறைக்குப் போய் விட்டாள்.

"ரூபியை மன்னித்து விடுங்கள் !" என்றார் கிழவர் காலிகோவைப் பார்த்து.

"அதற்கென்ன, பரவாயில்லை ! தாயின் உள்ளத்துக்கு அதிர்ச்சி ஏற்படுவது இயல்புதானே !" என்றான் காலிகோ.

"நானும் யுத்த களத்துக்குப் போயிருக்கேன். ஆனால் இறக்கவில்லை !" என்றார் கிழவர்.

அதைக் கேட்ட காலிகோவின் மனத்தைத் துயரம் வாட்டியது. அவனுக்கு அவர்மீது மிகுந்த அனுதாபம் ஏற்பட்டது.

"அட, கடவுளே ! உன் பிள்ளைகளில் நான் யாரையும் கொல்லாமல் இருக்க வேண்டுமே ! சண்டையல்லவா ! நான் யாரை யெல்லாம் சுட்டுக் கொன்றேனோ, தெரியவில்லையே !" என்றான்.

"ஸ்வாமி ! தாங்கள் கவலைப்படுகிறீர்கள். நீங்கள் எங்களுடைய விருந்தாளி. என் வீட்டில் உங்களுடன் ஒருவரும் தப்புத் தண்டாவாக நடந்து கொள்ள மாட்டார்கள்" என்றார் கிழவர் மிகவும் மரியாதை தோய்ந்த குரலில் தலை குனிந்தவாறே.

"இல்லை. எனக்கு உன்னிடம் என்றும் பயம் இல்லை. பழைய சௌஜன்யத்துக்காக......"

"நான் புரிந்து கொண்டு விட்டேன். நீங்கள் உங்கள் நிலைமையை விளக்க விரும்புகிறீர்கள். அதற்காக என் நன்றி. இந்தாருங்கள், உங்களுக் காகப் பிராந்தி வந்து விட்டது" என்று காலிகோ விடம் மரியாதையுடன் பிராந்திப் புட்டியை நீட்டியவாறே கிழவர் சொன்னார்.

"விருந்தினர்களை உபசரிக்கும் உங்கள் பழைய முறை எனக்கு ரொம்பவும் பிடித்திருக்கிறது. இவ்வளவு சௌஜன்யமாக நீ பழகுவதை உத்தேசித்து எங்கள் அரசாங்கம் உனக்குக் கட்டாயம் பரி சளிக்கும். இது நிச்சயம் !" என்றான் காலிகோ.

கிழவர் மிகவும் அமைதியாகவும் எளிமையுடனும், "என் வீடு ஒரு உயர்ந்த மலைச்சிகரத்தில் இருக்கிறது என்னும் விஷயம் உங்களுக்குத் தெரிந்ததே. ஆகவே, இத்தாலியர்களிடம் எனக்குப் பயமும் இல்லை, அவர்களால் எனக்கு எவ்வித மான ஆபத்தும் இல்லை. இங்கே வரும் வழி எனக்குத் தெரியும். என் வேலைக்காரனுக்குத் தெரியும். அவ்வளவுதான். மூன்றாமவர் யாருக்கும் இதற்கு வர வழி தெரியாது. இந்தக் கோட்டையைக் கைப்பிடிக்க வேண்டு மென்றால், உங்கள் முஸோலினி ஒரு பெரிய படையை அனுப்பியாக வேண்டும். ஆனால் அத்துடன் விருந்தினர்களை உபசரிக்கும் விஷயத்தைப் பற்றியும் என் ஒரு வார்த்தையைக் கேட்டுத் தெரிந்து கொள்ளுங்கள். இந்தப் பக்கத்து ஆசாமி ஒருவன் தன் பக்கத்து வீட்டுக்காரனின் மனைவியைக் கொலை செய்து விட்டான். கணவன் கொலையாளியைக் கொன்றுவிட்டுத் தான் மறு காரியம் என்று பிரதிக்ஞை செய்திருந்தான். கொலையாளி என்ன செய்திருப்பான் ! நீங்களே சற்று யோசித்துச் சொல்லுங்களேன் !" என்றார்.

"என்ன செய்திருப்பான் ! காட்டை விட்டு ஓடிப் போயிருப்பான் !" என்றான் காலிகோ.

"இல்லை, அதுதான் இல்லை. மனைவியை இழந்த அவனுடைய வீட்டுக்கே விருந்தினனாகச் சென்று

விட்டான். ஏறக்குறைய இருபது வருஷங்கள் அங்கேயே தங்கியிருந்தான். யாரும் அவனை ஒன்றும் செய்யவில்லை."

"பாவம், விரோதிக்கு வீட்டிலே தஞ்சம் அளித்த அந்த வீட்டுக்காரனின் நிலைமையை நினைத்தாலே பரிதாபமாக இருக்கிறது!" என்று சொல்லிக் காலிகோ ஒரு நீண்ட பெருமூச்சு விட்டான்.

"சுருட்டு எப்படி இருக்கிறது, சொல்லுங்கள்!"

"பரவாயில்லை. எங்கள் பக்கத்து நிபுணர்கள் இதனால்தான் நேர்த்தியான சிகரெட் செய்கிறார்கள். ...... இன்று நான் க்ஷவரம் செய்து கொண்டு என் இஷ்டப்படிக் குளித்தால் எவ்வளவு நன்றாயிருக்கும், தெரியுமா? ...... அதற்கப்புறம் திரும்பிப் போய்விடலாமா என்று கூடச் சிந்தித்துக் கொண்டிருக்கிறேன்!" என்றான் காலிகோ.

"உங்கள் இஷ்டம். நீங்கள் எவ்வளவு நாட்கள் வேண்டுமானாலும் ஆனந்தமாக இங்கே இருக்கலாம். என் படுக்கை உங்களைச் சேர்ந்தது. என் வீட்டில் உள்ளவர்களும் வேலைக்காரர்களும் உங்களுக்கு வேண்டிய சௌகரியங்களைக் கவனித்துக் கொள்ளுவார்கள். என்னையும் உங்கள் ஊழியனாகவே கருதுங்கள். நீங்கள் போகத்தான் வேண்டுமென்று சொன்னால் அதற்கான ஏற்பாட்டையும் இதோ செய்து விடுகிறேன்" என்று சொன்னவர், "இஸ்மேல்!" என்று யாரையோ கூப்பிட்டார்.

உடனே ஒரு வேலையாள் உள்ளே நுழைந்தான். "பாசாக் குதிரையின்மீது வெள்ளிச் சேணத்தைக் கட்டு. இரண்டு நாட்களுக்கு வேண்டிய உணவுப் பொருள்களையும் எடுத்து வைத்துக் கொள். வெந்நீர் போட்டுவிட்டு விருந்தாளிக்கு க்ஷவரம் செய்யச் சொல்லு, அலியைக் கூப்பிட்டு!" என்று உத்தரவிட்டார் கிழவர்.

குளித்த பிறகு காலிகோவுக்கு ஒரு புத்துணர்ச்சியும் ஒரு புதிய சக்தியும் வந்ததுபோலிருந்தது. ராணுவ உடையில் ஆஜானுபாகுவான அவன் உடல் கம்பீரமாகவும் அழகாகவும் தோற்றமளித்தது. காலிகோ இடுப்பில் ரிவால்வரைக் கட்டிக் கொண்டான். பிறகு, "உங்களைச் சந்திக்க வரும்பொழுது அலியையும் கூட அழைத்து வருகிறேன். அலி ரொம்ப நன்றாக க்ஷவரம் செய்கிறானே!" என்றான்.

"ஐயா, என்னுடைய குதிரைகளில் எல்லாவற்றையும் விட நல்ல குதிரை நல்ல சேணம் கட்டப்பட்டுத் தங்களுக்காகக் காத்து நிற்கிறது" என்றார் கிழவர் மிகவும் மரியாதையுடன் காலிகோவைப் பார்த்து.

"சரி, அப்படியானால் நான் புறப்படட்டுமா!" என்று கூறிப் புறப்படத் தயாரானான் காலிகோ.

"வாருங்கள். நானே உங்களை அடிவாரம் வரை கொண்டு விட்டு வருகிறேன்" என்றார் கிழவர்.

இரண்டு பேரும் குதிரையில் ஏறிச் சேர்ந்தாற்போலவே போய்க்கொண்டிருந்தார்கள். அவர்கள் பாறைகளைத் தாண்டி வெகுதூரம் முன்னேறி விட்டார்கள். அப்பொழுது சூரியன் மேலைக் கடலில் மூழ்கிக் கொண்டிருந்தான்.

"என் பூமியின் எல்லை இவ்வளவுதான்!" என்று சொல்லிக் கிழவர் காலிகோவை நிறுத்தினார்.

இதென்ன கூத்து! திடீர்ப் பயத்தினால் காலிகோ கத்திவிட்டான். கிழவர் ரிவால்வரைத் தூக்கி அவன் மார்பைக் குறி வைத்துச் சுடத் தயாரானார். அதைக் கண்ணுற்ற காலிகோ நடுநடுங்கித் தடுமாறிப் போய்விட்டான். இது அவன் இது வரை எதிர் பாராத சம்பவம் அல்லவா!



மானேஜர் :—உமக்கு இது நல்லது இல்லை! பஸ் ஸ்டாண்டிலே என்னை நன்றாய்த் தெரிந்து கொண்டு வேண்டுமென்று இடித்துத் தள்ளிக் கொண்டு முன்னால் ஏறி விட்டீரே!

குமாஸ்தா :—மன்னிக்க வேண்டும். வேறே என்ன பண்ணுவது ஸார்? உங்களை முதலிலே ஏற விட்டு நான் அடுத்த பஸ்ஸில் வந்தால், 'ஏன் நேரங்கழித்து வந்தாய்?' என்று அப்பொழுதும் என்னைத்தானே கோபித்துக் கொள்ளப் போகிறீர்கள்?

---

"அந்தக் கொலைகாரன் இருபது வருஷங்கள் வரை மனைவியை இழந்த அதே ஆசாமியின் வீட்டில் இருந்து வந்தான். ஒரு நாள் அவன் வீட்டைத் தாண்டித் தோட்டத்தைக் கடந்து சென்றான். அதே நிமிஷம் வீட்டுக்காரன் அவனைத் தன் குண்டுக்குக் குறியாக்கிவிட்டான். ஏனெனில் வீட்டை விட்டு வெளியே போன பிறகு, அவன் அவனுக்கு விருந்தாளியாக இல்லாமற் போய் விட்டான் அல்லவா! அதேபோல நீங்களும் இப்பொழுது என்னுடைய விருந்தாளியல்ல. மரிப்பதற்கு முன்னால் ஏதாவது பிரார்த்தனை செய்ய விரும்புகிறீர்களா!" என்று கேட்டார் கிழவர்.

காலிகோ தலையை அசைத்தான்.

"என் ஐந்து பிள்ளைகளின் உடலிலிருந்தும் உங்கள் துப்பாக்கியின் ரவைகள்தான் கிடைத்திருக்கின்றன. என் ஐந்து குமாரர்களையும் நீங்கள்தான் கொன்றிருக்கிறீர்கள். ஒவ்வொரு பையனையும் கொன்ற பழியைத் தீர்த்துக் கொள்வதற்காக நான் உங்கள்மீது ஒவ்வொரு தடவையாக ஐந்து தடவை சுடப்போகிறேன்" என்றார் கிழவர்.

இதைச் சொல்லி முடித்ததும் கிழவர் ஐந்து தடவை சுட்டார். காலிகோ குதிரையிலிருந்து கீழே உருண்டுவிட்டான். கிழவர் வெறுப்புடன் அவன் பிணத்தை ஓங்கி ஒரு உதை கொடுத்துக் கால்களாலேயே பாறைகளுக்குக் கீழே தள்ளி விட்டார். பிறகு வெறுங் குதிரையை ஓட்டிக் கொண்டு வீடு திரும்பினார். வீட்டில் உள்ள பெண்மணிகள் அனைவரும் தலையில் அடித்துக் கொண்டு அழுது கொண்டிருந்தனர். அவர்களுடைய புலம்பலைக் கேட்டுக் காட்டுப் பிரதேசமே விசிக்கத் தொடங்கிவிட்டது. கிழவர் வீட்டுக்குள் நுழைந்ததும் கம்பளத்தில் கிடத்தப்பட்டிருந்த பிள்ளையின் சவத்தைக் கட்டிக் கொண்டு அழுது புலம்பத் தொடங்கினார். —ஒரு மேல்நாட்டுக் கதை




அக்ஷயம்

"ஏன் அக்ஷயம், வஸந்த மண்டபத்துக்கு வருகிறாயா?" என்று கேட்டுக் கொண்டே வந்தான் என் நண்பன் நாகராஜன்.

அப்போது இரவு எட்டு மணி இருக்கும். நல்ல குளிர் வேறு உடலைச் சல்லடையாகத் துளைத்துக் கொண்டிருந்தது. நான் கண்கள் மட்டும் வெளியில் தெரியும்படி கம்பளிப் போர்வையை இழுத்துப் போர்த்திக் கொண்டு ஏதோ ஒரு புஸ்தகத்தைப் படிப்பதில் ஈடுபட்டிருந்தேன். நாகராஜன் கம்பளி ஸ்வெட்டர், கம்பளி மப்ளர், கையில் கம்பளிப் போர்வை ஆகியவை சகிதம் பரிபூரண தற்காப்பு நடவடிக்கையுடன் என்னை அழைக்க வந்திருந்தான். வஸந்த மண்டபத்தில் மிக மிக முக்கிய விசேஷம் இல்லை என்றால் இந்தக் கடுங் குளிரில் நாகராஜன் வீட்டை விட்டு ஏன் புறப்பட்டிருக்கப் போகிறான்?

இதை எண்ணிய நான், "இன்று வஸந்த மண்டபத்தில் என்ன விசேஷம்?" என்றேன்.

"உனக்குத் தெரியாதா? நம் ராமமூர்த்தி சர்மா இன்று 'பிரஹலாத சரித்திரம்' உபன்னியாசம் செய்கிறார்!" என்றான்.

ராமமூர்த்தி சர்மா கதை சொல்லும் பாணியே கன ஜோர்தான். எனினும் எடுத்ததற்கெல்லாம் இறைவனுக்கு வணக்கம் செலுத்தாமல் அவருக்குக் கதை சொல்ல ஓடாது. அளவுக்கு மிஞ்சினால் அமிர்தமும் விஷந்தானே? அவர் எடுத்ததற்கெல்லாம் இப்படி இறை வணக்கம் செலுத்திக் காதைப் புளிக்க வைத்து வருவதாகவே எனக்குத் தோன்றியது. எனக்கு மட்டும் என்ன? அவருடைய கதையைக் கேட்கும் யாருக்குமே அப்படித் தோன்றுவது இயல்புதான்.

ஆகவே, "என்ன அப்பா, கதை வேண்டியிருக்கிறது இந்தக் குளிரில்?" என்றேன்.

"குளிராயிருந்தால் என்ன, அப்பா! ராமமூர்த்தி சர்மாவின் கதை அப்புறம் கிடைக்காதப்பா!" என்றான் நாகராஜன்.

"ஆமாம். இல்லாததற்கெல்லாம் இறை வணக்கம் செலுத்தும் இவருடைய கதைக்குப் போகாவிட்டால் என்ன குடியா முழுகிப் போய் விடும்?" என்று கேட்டேன்.

"அதனால்தான் இன்றைக்குக் கட்டாயம் போக வேண்டும் என்று உன்னைக் கூப்பிடுகிறேன். ஊசி கொண்டு துளைக்கும் இந்தக் குளிரில் இவர் இறைவனுக்கு எப்படி வந்தனம் செலுத்துகிறார் என்று பார்த்துவிட வேண்டும். அவரால் இன்றைக்கு இறைவனுக்கு வந்தனம் செலுத்த முடியாது. கடவுளைக் கடிந்து கொள்வார்; நிந்திப்பார். அப்படி நிந்தித்தால் நாம் அவரைக் குத்திக் காட்டலாம் அல்லவா? அதற்காகத்தான் கூப்பிடுகிறேன்!" என்றான் நாகராஜன்.

அவன் சொன்னது எனக்குச் சரியாகவே பட்டது. இந்தக் குளிரில் சர்மாவின் பிரதிக்ஞை கட்டாயம் பங்கம் அடைந்து விடும் என்று தோன்றவே, நானும் கனத்த கம்பளிப் போர்வையை எடுத்துப் போட்டுக்கொண்டு கதை கேட்கப் புறப்பட்டேன்.

சர்மா கதைக்கு வந்தார். குளிர் காரணமாக எல்லோருமே முழங்காலைக் கட்டிக் கொண்டு கம்பளிப் போர்வையை இழுத்துப் போர்த்திக் கொண்டு உட்கார்ந்திருந்தோம். சர்மாவுக்கும் 'வெடவெட' என்று குளிர் நடுங்கிக் கொண்டிருந்தது. பற்கள் தந்தி பேசிக் கொண்டிருந்தன.

அவருடைய அந்தப் பரிதாப நிலைமையைக் கண்ட நான் 'இன்று ஆசாமி வகையாக மாட்டிக் கொண்டார். இவர் இன்றைக்கு எப்படி இறைவனுக்கு வணக்கம் செலுத்துகிறார். பார்த்து விடுவோம்' என்று எண்ணிக் கொண்டேன்.

அப்பொழுது கூட்டத்திலிருந்த ஒருவர் "இந்தச் சனியன் பிடித்த குளிர் காரணமாக இன்று கொஞ்சம் கூட்டம் குறைச்சல்" என்றார்.

கதைக்கு மேடையில் உட்கார்ந்த சர்மா குரலில் நடுக்கத்துடன், "ஆமாம்......" என்றார். சர்மா கடவுளை நிந்திக்க ஆரம்பித்து விட்டதாகவே எனக்குத் தோன்றியது. நான் நாகராஜனை முழங்காலால் இடிக்க, நாகராஜன் என்னைத் தன் முழங்காலால் இடிக்க, இருவரும் ஒருவரையொருவர் பார்த்து அர்த்த புஷ்டியுடன் குறுநகை புரிந்து கொண்டோம்.

"......ஆமாம். கடுங் குளிரின் காரணமாகத் தானே நமக்குக் கோடையின் அருமை தெரிகிறது! அதே போல நாஸ்திகம் அதிகரிக்க அதிகரிக்கத் தானே ஆஸ்திகத்தின் பெருமையும் உயருகிறது. அதற்காக நாம் நம்மைப் படைத்த கடவுளுக்கு வந்தனம் செலுத்த வேண்டாமா? அப்பேர்ப் பட்ட பரந்தாமனுக்கு வணக்கம்" என்று சொல்லி விட்டுக் கதையை ஆரம்பித்தார்.

எங்கள் எண்ணத்தில் மண் விழுந்தது. இருந்தாலும் ராமமூர்த்தி சர்மாவுக்குச் சமயோசித புத்தியை அளித்த அந்தப் பகவானுக்கு நாங்களும் வணக்கம் செலுத்தி விட்டுக் கதையைக் கேட்கக் காதைத் தீட்டிக்கொண்டு உட்கார்ந்தோம்.




நீங்களும் பெறுக

# வாட்டர்பரீஸ் காம்பவுண்ட்

தினசரி போஜனத்திற்குப் பிறகு ருசிகரமான வாட்டர்பரீஸ் காம்பவுண்டும் சாப்பிட்டு வந்தால் சொற்பகாலத்திலேயே தென்பும் திடமும் அதிகரிப்பதை காண்பீர்கள். தேக உறுப்புகளுக்கு வலுவூட்ட அவசியமான பொருள்கள் நிறைந்த வாட்டர்பரீஸ் காம்பவுண்ட் உங்களுடம்பில் திராணி அதிகரிக்கச் செய்யும். களைப்பேற்படாமல் தென்பூட்டி ஜலதோஷம், இருமல் வராமலிருக்க அதிக எதிர்ப்பு சக்தியும் பெற உதவுகிறது. இளையோர், முதியோர் யாவருக்கும் சிறந்த ஆரோக்கிய டானிக்.

# WATERBURY'S
## COMPOUND

வாட்டர்பரீஸ் காம்பவுண்ட்

உங்களைத் தென்புடன் வைத்திருக்கும்




NAS 737




## 17. நள்ளிரவில் கோரக் கொலை!

யோசனையில் ஆழ்ந்த கோவிந்தனுக்குச் சிங்காரத்தை வேறு வகையில் எப்படியாவது சிக்க வைத்துப் பழி சுமத்திக் குற்றவாளி யாக்கி விட்டால் மாதவிக்கு அவன் மீது உள்ள நம்பிக்கை தளர்ந்து விடும். அவன் மீது உள்ள மோகம் குறைந்து விடும். அப்புறம் அவள் நம்மைத் தானாகவே நாடி வருவாள் என்று தோன்றியது.

இது புத்திசாலித்தனமான யுக்தியோ, அசட்டுத் தனமான யோசனையோ! ஆனால் இந்த யோசனை எழுந்ததும் எங்காவது சிங்காரத்தைச் சந்தித்து அவனைச் சண்டைக்கு இழுக்க எத்தனித்தான். சிங்காரத்தை வழி மறித்துத் தானே சண்டை செய்து கடைசியில் அவன் தன்னை வழிமறித்துக் கொள்ளையடிக்க எண்ணினான் என்ற பழியை அவன் மீது சுமத்தத் திட்டமிட்டான். சிங்காரத்தை வம்புக்கு இழுத்துச் சண்டை செய்வது என்று தீர்மானித்தானே தவிர, அது எவ்வளவு அபாயகரமான விஷயம் என்பதை அவன் உணரவே இல்லை. பலருடைய முன்னிலையில் தக்க சாட்சிகளோடு சிங்காரத்தை ஒரு வழிப்பறிக் கொள்ளைக்காரனாக்கி விட வேண்டும் என்று அவன் யோசித்தான்.

அன்று செவ்வாய்க் கிழமை. வாரச் சந்தை கூடும் நாள். சிங்காரம் ஏதோ வாங்குவதற்காகச் சந்தைக்கு வந்திருந்தான். கோவிந்தனும் சந்தைக்கு வந்திருந்தான். சிங்காரத்தைப் பார்த்ததும் வம்புக்கு இழுக்க அது சரியான சந்தர்ப்பமாகக் கோவிந்தனுக்குப் பட்டது.

சிங்காரம் தன்னுடைய காரியத்தைப் பார்த்துக்கொண்டு சந்தையைவிட்டு வெளியே வந்தான். கோவிந்தன் அவனைத் தொடர்ந்து வந்து அதிகாரத் தொனியில், "ஏய்! கூத்தாடிப் பயலே! இங்கே வா" என்றான். 'கூத்தாடிப் பயலே' என்று அவன் கூப்பிட்டது சிங்காரத்திற்கு ஆத்திரத்தை உண்டாக்கியது. இருப்பினும் தன் ஆத்திரத்தை அடக்கிக்கொண்டு பணிவோடு அவனுக்குச் சமீபமாகப் போய் நின்றான். இதை அங்கு நின்ற பலரும் பார்த்துக்கொண்டுதா னிருந்தனர்.

கோவிந்தன் சிங்காரத்தின் தோள் மீது அலட்சியமாகக் கையை வைத்துக் கொண்டே, "நான் சொல்வதைக் கேள்! நீ இன்னும் பட்டக்காரர் பேத்தி மாதவியிடம் உன் சின்னத்தனமான விளையாட்டையெல்லாம் காட்டிக் கொண்டிருக்கிறாய் என்று தெரிகிறது. நீ அவளை இரவு வேளையில் சந்திக்கிறாய். இது ரொம்பக் கெடுதல். அன்று உன் ஜனங்கள் ஏதோ சடங்கெல்லாம் நடத்திக் காட்டுமிராண்டித் தனமாகக் கொம்மாளம் அடித்தபொழுது நீ மாதவியை ஏதோ ஏமாற்று வித்தையெல்லாம் காட்டி மயக்கி நடு நிசியில் வீட்டை விட்டு வந்து உன்னைச் சந்திக்கும்படி செய்து விட்டாய். எல்லாம் எனக்குத் தெரியும். அந்தப் பேதைப் பெண் உன் வார்த்தையில் மயங்கி வீணாகக் கெட்டுப் போவதை நான் பார்த்துக் கொண்டிருக்க முடியாது. தெரிந்ததா! இனிமேல் அப்படிப்பட்ட வழக்கத்தை மரியாதையோடு நிறுத்திக் கொண்டுவிடு. இல்லாவிட்டால் என்ன நடக்கும் என்று உனக்கு இப்பொழுது தெரியாது. ஜாக்கிரதை!" என்றான்.

சிங்காரம் அலட்சியமாகவும் கேலியாகவும் சிரித்துக் கொண்டே, "எனக்கும் தெரியும். அவளுக்கும் தெரியும். அவளுக்கு உங்களை எல்லாம் விட என்னிடத்தான் பிரியம் அதிகமாக இருக்கிறது, தெரியுமா!" என்றான்.

"அப்படியா! நீ ஒரு திருட்டுப் போக்கிரி!" என்றான் கோவிந்தன் அழுத்தமான குரலில்.

"இந்தமாதிரி வார்த்தையை இன்னொரு தடவை நீ சொன்னால் நான் பொறுக்க மாட்டேன்!" என்று ஆத்திரத்தோடு உறுமினான் சிங்காரம். "...ஆமாம், உனக்கும் மாதவிக்கும் என்ன சம்பந்தம்! அவள் தனக்காகப் பேசும்படி உன்னைக் கேட்டுக் கொண்டாளா!" என்று அதைத் தொடர்ந்தாற்போலக் குத்தலாகக் கேட்டான் சிங்காரம்.

"நான் அவளுடைய உறவினன். அவள் என்னுடைய மாமாவின் பேத்தி. அவள் தவறான வழியில் போகாமல் பாது காப்பது என்னுடைய

கடமை. நான் உனக்குக் கண்டிப்பாகச் சொல்லுகிறேன். மறுபடியும் இப்படி ஏதாவது நடந்தால் ரொம்ப விபரீதமாக முடியும்!" என்றான் கோவிந்தன் கண்டிப்பான குரலில்.

"நீ அவனுக்குச் சொந்தக்காரனாக இருக்கலாம். ஆனால் அவனுக்கு உன்னைக் கண்டாலே பிடிக்கவில்லை. உன் முகத்தைப் பார்க்கவே அவனுக்கு வெறுப்பாக இருக்கிறது என்பதும் எனக்குத் தெரியும்!" என்றான் சிங்காரம் கோவிந்தனை அலட்சியமாகப் பார்த்துக் கொண்டே.

கோவிந்தன் அதற்கு மேல் அவனோடு தர்க்கம் செய்து கொண்டிருக்க இஷ்டப்படவில்லை. திட்டப்படி அடுத்தாற் போல் செய்ய நினைத்த காரியத்தைச் செய்தான். அதாவது, கோபத்தினால் கண்கள் சிவக்கப் புலிபோல் பாய்ந்து சிங்காரத்தின் முகத்தில் குத்தினான்.

ஒரு நாள் தன்னிடம் வாங்கிய அடிக்குப் பிறகும் கோவிந்தனுக்கு இவ்வளவு துணிச்சல் வருமென்று சிங்காரம் நினைக்கவில்லை. அவன் முகத்தில் சட்டென்று ஒரு மாறுதல் ஏற்பட்டது. அவன் வெறி பிடித்த புலிபோலாகி விட்டான். "ஹும், இந்தச் சந்தையிலே வந்து உயிரை விடணும் என்று உனக்கு ஆசை போலிருக்கிறது!" என்று சொல்லித் தன் முரட்டுக் கைகளை கோவிந்தன்மீது பிரயோகித்தான். அவ்வளவுதான், அடுத்த கணம் கோவிந்தன் தரையில் உருண்டான். சிங்காரம் அவனைப் புரட்டிப் புரட்டி அடித்தான்.

இந்தக் கோரமான சண்டையைப் பார்த்து அந்தப் பாதையில் நடந்து கொண்டிருந்த ஜனங்களெல்லாம் பிரமித்து நின்று விட்டனர். இன்னும் சிறிது நேரம் அப்படியே விட்டு வைத்தால் கோவிந்தனின் பிராணனுக்கு ஆபத்து நேரும் என்பதை ஒவ்வொருவரும் உணர்ந்தார்கள். அவர்களில் பலர் சிங்காரத்தைப் பிடித்து இழுத்து அடக்க முற்பட்டனர். அவனைக் கோவிந்தனிடமிருந்து விலக்குவது மிகவும் கடினமாகப் பட்டது. எப்படியோ ஒரு விதமாக அவனை விலக்கி ஐந்தாறு பேர்கள் சேர்ந்து அவனைக் கெட்டியாகப் பிடித்துக் கொண்டனர்.

கோவிந்தன் தள்ளாடிக் கொண்டே எழுந்து உடம்பில் ஒட்டிய புழுதியை உதறிக்கொண்டான்.

அப்பொழுது அந்தக் கூட்டத்தை விலக்கிக் கொண்டு ஒரு போலீஸ்காரன் உள்ளே நுழைந்தான். என்ன நடந்தது என்பதைத் தன் பார்வையாலேயே தெரிந்து கொள்கிறவன் போல் அடிபட்டதினால் மேல் மூச்சுக் கீழ் மூச்சு வாங்க நிற்கும் கோவிந்தனையும், பல மனிதர்களால் பிடித்துக் கொள்ளப் பட்டிருக்கும் அலட்சியத்தோடு நிற்கும் முரட்டுக் காளை போன்ற சிங்காரத்



தையும் பார்த்துவிட்டு, "இங்கே என்ன நடந்தது! எதற்காக இந்தக் கலாட்டா!" என்று கோவிந்தனைப் பார்த்துக் கேட்டான்.

தன்னை வழி மறித்துச் சந்தைக்குக் கொண்டு வந்த பணத்தைச் சிங்காரம் கொள்ளை யடிக்க நினைத்தானென்று சொல்லக் கோவிந்தன் திட்டமிட்டிருந்தான். ஆனால் அடிபட்ட சிரமத்தில் அவன் தன்னைச் சமாளித்துப் பேச வேண்டியிருந்தது. அதற்குள் கூட்டத்திலிருந்த ஒருவன், "இவன் அவரை அடித்துக் கொல்ல நினைத்தான்" என்றான்.

"ஆமாம்! இன்னும் கொஞ்ச நேரமிருந்தால் அவருடைய உயிரே போயிருக்கும்" என்றது கூட்டத்திலிருந்து இன்னொரு குரல்.



"இல்லை. முதலில் அவர் தான் வழியோடு போனவனைக் கூப்பிட்டு முகத்தில் குத்தினர். அவன் சும்மா இருப்பானு! பதிலுக்கு வேண்டிய மட்டும் கொடுத்தான்" என்றது அந்தக் கூட்டத்திலிருந்தே வேறொரு குரல்.

"ஆமாம்! அதுதான் நடந்த கதை. நான் கூடப் பார்த்துக் கொண்டிருந்தேன்!" என்றது அதை ஆமோதிப்பது போல் இன்னொரு குரல்.

"நீ என்ன சொல்கிறாய், அப்பா...!" என்றான் போலீஸ்காரன் சிங்காரத்தைப் பார்த்து.

"எத்தனையோ சொல்ல இருக்குது. இவங்களெல்லாம் என்னைப் பிடிச்சு விலக்காட்டி அவனை உண்டு இல்லைன்னு பார்த்திருப்பேன். எங்களைப் போல ஏழைகளுக்கும் ரோசம், மானம் எல்லாம் உண்டு என்று அவன் தெரிஞ்சுக்கல்லே. அவன் தன்னை ஏதோ பெரிசா நினைச்சுக்கிட்டிருக்கிறான். என்னை ஏதோ நாடோடிதானே, எது வேணுமின்னாலும் செய்து விடலாம் என்று நினைக்கிறான்" என்றான் படபடத்தோடு சிங்காரம்.

போலீஸ்காரன் இதைக் கேட்டதும் தன் கடமையைப் பொதுவாகச் செய்கிறவன் போல், "சரி, இரண்டு பேரும் போலீஸ் ஸ்டேஷனுக்கு வாருங்கள். அங்கே விசாரிப்பார்கள்" என்றான்.

கோவிந்தன், தான் ஒன்று நினைக்க அது வேறு விதமாக முடிந்ததை எண்ணி யோசித்தான். அப்பொழுது சிங்காரத்தை மாத்திரம் குற்றவாளியாக்கித் தான் தப்பிக்க முடியாது என்று அவனுக்குத் தோன்றியது. ஏனெனில் முதலில் வழியோடு போன சிங்காரத்தை வம்புக்கு இழுத்துச் சண்டை செய்தது அவன்தான் என்று சாட்சி சொல்ல அந்தக் கூட்டத்தில் சிலர் இருப்பதை அவன் தெரிந்து கொண்டான். அதையும் தவிர, போலீஸ்காரனைத் தொடர்ந்து போலீஸ் ஸ்டேஷனுக்குப் போவது தன்னைப் போன்ற கௌரவமான குடும்பத்தில் உதித்தவர்களுக்கு மதிப்புக் குறைவாகும் என்றும் அவனுக்குத் தோன்றியது. அங்கு போனால் விசாரணையின் போது வேறு சில ரகசியங்களும் வெளியாகலாம். இதனால் பட்டக்காரர் குடும்பத்திற்குக்கூட ஊரில் ஒரு கெட்ட பெயர் ஏற்படலாம். அதுமட்டும் அல்ல; அவன் சந்தையில் ஒரு நாடோடியிடம் அடி வாங்கிய விஷயமும் ஊர் முழுவதும் தெரிந்துவிடும். மாதவி இதைக் கேள்விப்பட்டால், சிங்காரத்தின் பேரில் தனக்கு இருக்கும் காதலினால், அவனுக்குச் சாதகமாக ஏதேனும் செய்தாலும் செய்வாள். அப்படிச் செய்யாவிட்டாலும் தன்மீது அவளுக்கு உள்ள வெறுப்பு இன்னும் அதிகமாகக் கூடும். இவைகளெல்லாம் பலவிதத்திலும் இடையூறை உண்டாக்கி அவனுடைய இரகசிய முயற்சிகளை வெல்

லாம் குலைத்து விடலாம் அல்லவா! இதை யெல்லாம் யோசிக்கும்போது போலீஸ் ஸ்டேஷன் வரை போவது அவனுக்குச் சரியானதாகப் படவில்லை. அவன் போலீஸ்காரன் முகத்தைக் கெஞ்சுவது போல் பார்த்துக் கொண்டு, "இதற் கெல்லாம் போலீஸ் ஸ்டேஷன் வரையிலே போக நான் விரும்ப வில்லை. போனால் போகட்டும். அவனை விட்டு விடுங்கள்" என்றான் பெருந்தன்மையாகப் பேசுவதுபோல்.

"அது எப்படி முடியும்! இந்தமாதிரி முரட்டுத் தனமான மனிதனை நாங்கள் வெளியே விட்டு வைத்தால் நாளைக்கு உங்களைப் போன்ற பெரிய குடும்பத்துப் பிள்ளைகளை நடு ரோட்டிலே அடித்துக் கொன்றுபோட்டு விடுவான்கள். இவன்களுக் கெல்லாம் நல்ல புத்தி வரும்படி செய்கிறது தான் நியாயம். இவனைத் தண்டிக்கா விட்டாலும் இந்த ஊரை விட்டாவது துரத்திவிட ஏற்பாடு செய்யணும்......" என்றான் போலீஸ்காரன்.

"அதுதான் என்னுடைய அபிப்பிராயமும். அதற்காக இவனோடு போலீஸ் ஸ்டேஷன் வரையில் நானும் வருவது நன்றாயிருக்காது. நான் பட்டக்காரரின் மருமகன். இவர்களை இந்த ஊரை விட்டுத் துரத்தனும் என்றால் ஒரு வினாடி கூட ஆகாது. இந்தச் சின்ன விஷயத்துக்காக நான் போலீஸ் ஸ்டேஷன் வரையில் வந்து நிற்கிற தென்றால் எங்கள் குடும்பத்துக்கே மதிப்புக் குறைச்சல் ஆகும். உண்மையாக நான்தான் இவனை முதலில் அடித்தேன். அதற்குக் காரணம் அந்த நாடோடிக் கூட்டத்திலேயே இவன் கொஞ்சம் திமிர் உள்ளவனா யிருக்கிறான்......" என்றான்.

போலீஸ்காரன் சிறிது நேரம் யோசித்தான். கோவிந்தன் பட்டக்காரரின் மருமகன் என்ற



"இரண்டு மூன்று நாளாகத் தூக்கமே கிடையாது, ஸார்! வீட்டைக் காலி பண்ணச் சொல்லி வீட்டுக்காரன் நோட்டீஸ் கொடுத்து விட்டான்!"

"அடாடா! இதற்காகவா இப்படிக் கஷ்டப் படுகிறீர்கள்? முன்னமே என்னிடம் ஒரு வார்த்தை சொல்லி யிருக்கப் படாதோ?"

"ஏன், உங்களுக்குத் தெரிந்த வீடு ஏதாவது காலியா யிருக்கிறதா?"

"இல்லை, இல்லை. தூக்கத்துக்கு நல்ல மருந்து வைத்திருக்கிறேன்!"

வுடன் அவன் கொஞ்சம் யோசிக்க வேண்டி யிருந்தது. பெரிய இடத்துக் கௌரவத்தைக் காப்பாற்றும் நோக்கையில் அதை அப்படியே விட்டு விடுவதுதான் அவனுக்கும் சரியென்று பட்டது. கோவிந்தனின் அபிப்பிராயப்படி சிங்காரத்தைக் கண்டித்து எச்சரிக்கை செய்கிறவன் போல் இரண்டு வார்த்தைகள் சொல்லி விட்டு அந்த இடத்தை விட்டுக் கோவிந்தனோடு சென்றான்.

சிங்காரம் போலீஸ்காரனுக்கு எவ்வித பதிலும் சொல்ல வில்லை. அலட்சியமாகச் சிரித்துக் கொண்டே அந்த இடத்தை விட்டுச் சென்றான்.

* * *

அன்று இரவு ஆனந்தன் தங்கத்தை ஏரிக் கரையில் சந்தித்தான். அவர்களிருவரும் அந்த வேளையில் அந்த இடத்தில் சந்திக்க வேண்டுமென்று முன் ஏற்பாடுகள் எதுவும் செய்து கொள்ளவில்லை. இருப்பினும் ஆனந்தனுக்கு அவளைப் பார்க்க வேண்டுமென்று ஆவல் ஏற்பட்டது. தங்கமும் அவனை அன்று அந்த இடத்தில் சந்திப்போ மென்று நினைக்கவே இல்லை. தெய்வாதீனமாகத்தான் அந்தச் சந்திப்பு ஏற்பட்டது. எதிர்பாராத வண்ணம் ஆனந்தனைச் சந்தித்ததில் அவளுக்கு ஆச்சரியமும் சந்தோஷமும் ஏற்பட்டன.

ஆனந்தன் மெதுவாக அவளுடைய மெல்லிய கரங்களைப் பற்றிக்கொண்டு, "தங்கம்!" என்றான் உணர்ச்சியோடும் உவகையோடும்.

அவள் ஒரு பெரு மூச்சு விட்டுக் கொண்டே வெட்கத்தால் தலை குனிந்தாள். அப்போது அவள் முகத்தில் ஒரு புன்முறுவல் தவழ்ந்தது.

"நான் இந்த இடத்தில் உன்னைச் சந்திக்கலாம் என்ற நம்பிக்கையில் காத்திருந்தேன், தங்கம்! என் நம்பிக்கை சிறிதும் வீண் போகவில்லை!" என்றான் ஆனந்தன்.

"என்னை எதிர் பார்த்துக் கொண்டா இருந்தீர்கள்!" என்றாள் தங்கம், விஷமமான புன்முறுவலுடன். அவனைச் சந்திக்கலாம் என்ற நம்பிக்கையில்தான் அவளும் அங்கு வந்திருந்தாள். ஆனால் வெட்கம் வந்து குறுக்கிட்டதால் அவள் அவனிடம் அதைச் சொல்லவில்லை.

"நான் உன் மீது எவ்வளவு அன்பு வைத்திருக்கிறேன் என்று உனக்குத் தெரியாதா, தங்கம்! உனக்கு இந்த நாடோடி வாழ்க்கையே பிடிக்க வில்லை என்று எனக்குத் தெரியும். இவர்களை யெல்லாம் விட்டுப் பிரிந்து எங்கோ ஒரு இடத்தில் நிரந்தரமாகவும் சந்தோஷமாகவும் குடித்தனம் செய்து வாழ வேண்டு மென்பதுதானே உன் எண்ணம்?" என்று கேட்டான் ஆனந்தன்.

"ஆமாம்!...மனத்தில் எத்தனையோ ஆசைகள் இருக்கலாம். ஆனால் எல்லாம் நினைத்தபடி நடக்க வேண்டாமா!" என்றாள் தங்கம் குனிந்த தலை நிமிராமலேயே. அப்பொழுது அவள் முகத்தில் ஒரு கவலை படர்ந்தது.

"ஏன் நினைத்தது நடக்காது! நான் இருக்கும் போது கவலைப் படாதே. உனக்கு என்னைக் கல்யாணம் செய்துகொள்ள இஷ்டம்தானே!" என்று கேட்டான் ஆனந்தன்.

தங்கம் மெதுவாகத் தலை நிமிர்ந்து அவன் முகத்தை ஆர்வத்தோடு பார்த்தாள். அப்போது அவளுக்கு மனப்பூர்வமாக இஷ்டம்தான் என் பதை அவளுடைய கண்களே சொல்லின.

"நான் அதற்கு வேண்டிய ஏற்பாடுகளெல்லாம் செய்திருக்கிறேன். அந்தக் கிழவன் பெத்தண்ணன் உன்னை உன் இஷ்டம்போல் என்னைக் கல்யாணம்

## முதன்மை ஸ்தானம் — நம் புராதன கௌரவம்

பல நூற்றாண்டுகளின் இடைவிடா முயற்சியின் பயனாக இந்தியக்கொல்லர்கள் உயர்ந்த ரக எஃகு தயாரிப்பதின் நுணுக்கத்தை அறிந்து கொண்டார்கள். இதனுடன் சேர்ந்து கொண்டன, இத்திறமை மிக்க தொழிலாளிகளின் பிரபலமான அற்புத வேலைப்பாடுகள். அறிவு மிகுந்து திறன்படைத்த இவ்விந்தியத் தொழிலாளிகளால் உருவாக்கப்பட்ட உறுதியானதும், அழகின் சிகரமானதுமான பொருள்கள் இந்தியக்கப்பல்களில் நாகரீகம் படைத்த பல வெளிநாட்டு வியாபாரஸ்தலங்களுக்கு எடுத்துச் செல்லப்பட்டன

உலகத்தின் மற்ற எந்த பாகங்களிலும் 19ம் நூற்றாண்டு வரையிலும் செய்யப்படாத ஓர் உருவாக்கப்பட்ட இரும்புத் தூண் இந்தியாவில் கி.பி. 415ம் ஆண்டிலேயே செய்யப்படும் அளவிற்கு இந்திய எஃகுத்தொழில் அபிவிருத்தியும் மேன்மையும் அடைந்திருந்தது. இக்காலத்திய விஞ்ஞான சாஸ்திரிகளும், இயந்திர நிபுணர்களும் திகைக்கும்படியாக தொழில் உலகத்தில் மிக்க மேம்பாட்டுடனும், தயாரிக்கப்பட்ட இந்த ஸ்தம்பம் குமாரகுப்தனால் எழுப்பப்பட்டது. 23 அடி உயரமுள்ள இதன் எடை 6 நிறைகள்.



புத்தி கூர்மையாலும், விடா முயற்சியாலும் தூண்டப்பட்ட இவ்விந்தியத் தொழிலானது மேன்மேலும் வளர்ந்தோங்கி வருகிறது. இவ்விந்திய மறுமலர்ச்சியில் டாடாஎஃகு ஓர் இன்றியமையாத வஸ்து

**டாடா அயரன் & ஸ்டீல் கம்பனி லிமிடெட்**

TN. 3014



" என்ன ஸார், இலக்கியச் சங்கத்தின் ஆண்டு விழா அமர்க்களமாக நடந்ததாமே! நிறையப் பேர்கள் சொற்பொழி வாற்றினார்களாமே! நல்ல விருந்துபோல் இருக்கிறது, அங்கே!"

" அப்படி ஒன்றும் இல்லை! ஒரு 'கப் டீ' கூடக் கொடுக்கவில்லை!"

செய்து கொள்ள அனுமதிப்பானல்லவா! நீதான் சொன்னாயே, அவன் உனக்கு வேண்டிய உதவிகளைச் செய்வானென்று! உனக்குப் பதிலாக அவர்கள் வேறு ராணியை ஏற்பாடு செய்து கொள்ளட்டும். நீ எனக்கு ராணியாக வந்துவிடு" என்றான் ஆனந்தன் ஆர்வத்தோடு.

" சரி! நான் எப்படியாவது அதற்கு வேண்டிய ஏற்பாடுகளெல்லாம் செய்கிறேன். நீங்கள் என்ன ஏற்பாடு செய்திருக்கீங்க, சொல்லுங்க!" என்று கேட்டாள் தங்கம்.

" என் ஏற்பாடு உன் மனசுக்குப் பிடித்தமாயிருக்குமோ, இருக்காதோ, எனக்குத் தெரியாது. ஆனால் கொஞ்ச நாளைக்கு அப்படித்தா னிருக்க வேண்டும். கும்பகோணத்துக்குப் பக்கத்திலே ஒரு கிராமத்திலே எனக்கு ஒரு அத்தை இருக்கிறாள். அவளுக்கு என்மேலே ரொம்பப் பிரியம். வயது காலத்திலே அவளுக்கு ஒரு பெண் துணைக்கு வேண்டியிருக்கிறது. அவள் உன்னைத் தன் பெண் போல வைத்துக் காப்பாற்றுவாள். கொஞ்ச நாள் நீ அங்கு இருந்தால் அப்புறம் நாம் சுலபமாகக் கல்யாணம் செய்து கொள்ளலாம். இந்த யோசனை உன் மனசுக்குப் பிடிக்கிறதா!" என்று கேட்டான் ஆனந்தன்.

" எனக்கு இது ரொம்பப் பிடித்தமாயிருக்குது. அப்படியே செய்துடுங்க. ஆனால் அவள் என் மேலே பிரியமாய் இருப்பாளா......!"

" உன்னைப் பார்த்தாலே அவளுக்கு உன்மேலே பிரியம் ஏற்பட்டுவிடும். அவள் உன்னை ஒழுங்காகவும், அன்போடும் பாதுகாப்பாள். நம்முடைய இஷ்டத்திற்கு இடையூறாக அவள் இருக்க மாட்டாள். நான் அதற்கு வேண்டிய ஏற்பாடெல்லாம் செய்கிறேன். உனக்கு இவர்களை யெல்லாம் விட்டுப் பிரியக் கஷ்டம் ஏற்படாதே! அவர்கள் உன்னை விடாமல் தடுப்பார்களா!"

" அப்படி அவங்க தடுத்தால் உங்களால் என்ன செய்ய முடியும்!" என்றாள் தங்கம் சம்சயமும் சந்தேகமும் நிறைந்தவள் போல்.

" அவர்கள் உன்னைத் தடுக்கிறார்கள் என்று எனக்குத் தெரிந்தால் போதும். அவர்களைச் சேர்ந்தவர்கள் பட்டாளம் பட்டாளமாக வந்தாலும் எனக்கு எதிர்க்கச் சக்தி இருக்கிறது. என் உயிர் போகும் வரையில் உன்னை அவர்களிடமிருந்து மீட்கப் போராடுவேன்" என்றான் ஆனந்தன் திடமான குரலில்.

" உங்களுக்கு ஏன் இவ்வளவு கஷ்டம்! நீங்கள் எதற்காக இவ்வளவு கஷ்டங்களை யெல்லாம் ஏற்றுக் கொள்ளணும்!"

" உனக்காகத்தான்......அதை நான் எப்படி விளக்கிச் சொல்ல முடியும், தங்கம்!"

அவளுக்கு அவனுடைய இருதயம் விளங்காமலில்லை. ஆனால் உயர்ந்த குடும்பத்தில் உதித்த அவனுக்குத் தன்மீது இவ்வளவு காதல் ஏற்பட்டது தான் அவளுக்கு வியப்பாக இருந்தது. " என்னை நீங்கள் முதன் முதலாகப் பார்த்தபோதே இதை நான் தெரிஞ்சுக்கிட்டேன். ஆனால் என்னைப் போல ஒரு நாடோடிப் பெண் உங்களைப் போன்ற வங்களை எப்படி நேசிக்க முடியும்! உங்களைப் போன்றவங்களைக் கல்யாணம் செய்து கொண்டு எப்படி வாழ முடியும் என்றுதான் தெரியாமல் குழம்பினேன். உங்களோடு வந்து வாழ்வதில் எனக்கு ஆசைதான். ஆனால் எப்படி உங்களைச் சேர்ந்தவங்களோடு பழகிச் சந்தோஷமாக இருக்க முடியும் என்றுதான் தெரியவில்லை!" என்றாள் ஆயாசத்துடன் தங்கம்.

நேரம் செல்லச் செல்ல இருள் அதிகமாகிக் கொண்டிருந்தது. மூன் நிலவு காலம். இன்னும் சிறிது நேரத்தில் எங்கும் பூரணமாக இருள் மண்டிவிடும். ஆனால் காதலர்கள் இருவரும் அதை லட்சியம் செய்யவே இல்லை. அவர்கள் மெய் மறந்து தங்கள் எதிர்கால வாழ்க்கையைப் பற்றித் திட்டமிடுவதில் ஈடுபட்டிருந்தனர். ஆனால் அது அவர்களுக்குக் குழப்பமும் அபாயமும் நிறைந்த கனவாகத்தான் இருந்தது. அந்த நாடோடிகள் தங்கள் ராணியாகிய தங்கத்தை ஆனந்தனோடு அனுப்புவார்களா! அவர்களுக்கும் காதல் எப்படிப்பட்டதென்று தெரியும். ஆனால் அந்தக் காதல் தங்கள் சமூக வரம்பிற்கு அப்பாற் பட்டதாக இருந்தால் அவர்கள் எப்படி அனுமதிக்க முடியும்!

தூரத்திலிருந்து யாரோ ஏதோ சமிக்ஞை செய்வதுபோல் சீட்டி யடிக்கும் சப்தம் கேட்டது. இதைக் கேட்டதும் தங்கம் சுய நினைவு ஏற்பட்டவள்போல் துள்ளி எழுந்து, " இனிமேல் இங்கே இருக்கக் கூடாது. நான் போக வேண்டும்!" என்றாள் துடிப்போடு.

" அவர்களெல்லாம் உன்னைக் காணாததால் சந்தேகப் படுவார்களா!" என்றான் ஆனந்தன்.

" இல்லை! எனக்காகச் சிங்காரம் காத்திருப்பான். அதோ, அந்த மரத்தடியில். நாங்கள் இரண்டு பேரும் சேர்ந்துதான் போக வேண்டும்" என்றாள் தங்கம் தயக்கத்தோடு.

" சிங்காரமா! அவனைத்தானே உனக்குக் கல்யாணம் செய்து வைக்க ஏற்பாடு செய்திருந்தார்கள்! அவனோடு உனக்கு என்ன தொடர்பு! நீ ஏன் அவனைத் தனியாக சந்திக்க வேண்டும்!" என்றான் சம்சயத்தோடு ஆனந்தன்.

" அவன் என்னுடைய சிநேகிதன், நான் இப்பொழுதே அவனைப் பார்க்க வேண்டும்.

அவன் என்னை விட்டுவிட்டுத் தனியாகப போனல் அப்புறம் எல்லோருக்கும் எங்கள் இரண்டுபேர் மேலும் சந்தேகம் விழும். நீங்கள் எதுவும் வித்தியாசமாக நினைக்க வேண்டாம். நான் போகிறேன். அவனை அதிக நேரம் காக்க வைக்கக் கூடாது" என்று சொல்லி ஆனந்தனை ஆர்வத்தோடு பார்த்தவாறே தங்கம் அதிவேகமாக நடந்து இருளில் சென்று மறைந்தாள்.

* * *

**வா**னத்திலும் சந்திரன் மறைந்து விட்டான். ஆனந்தனின் மனத்தில் ஏதோ இருள் கவிந்தது போலிருந்தது. அவன் மனக் குழப்பத்தோடு மெதுவாக நடந்து ஏரிக் கரையைத் தாண்டி ரஸ்தாவை அடைந்து தன் வீட்டை நோக்கி நடந்தான். அவனுடைய வீட்டிற்கும் பட்டக்காரரின் வீட்டிற்கும் இடையே உள்ள பாதையில் அவன் ஏதோ நினைவோடு நடந்து வந்துகொண்டிருக்கும்போது மங்கிய விளக்கின் ஒளியில் ஏதோ ஒரு பொருள் ரஸ்தாவின் நடுவில் கிடப்பதைக் கண்டான். தூரத்திலிருந்து பார்த்தபொழுது அது ஒரு பெரிய துணி மூட்டையைப் போலக் காணப்பட்டது. சமீபத்தில் நெருங்கி வந்து பார்த்தபொழுது அது ஒரு மனிதனின் உடல் என்பதை அறிந்து திகைப்படைந்து நின்றான். அலங்கோலமாக நடு ரஸ்தாவில் விழுந்து கிடக்கும் அந்த உருவத்தைப் பார்த்தவுடனே ஏதோ ஒரு கோர சம்பவம் நடந்திருப்பதாக ஆனந்தனின் மனத்தில் பட்டது. அவன் பரபரப்போடும் திகிலோடும் அந்த உருவத்திற்குச் சமீபமாகச் சென்று தலை குனிந்து உற்றுப் பார்த்தபொழுது அப்படியே பேயறைந்தவன்போல் நின்றுவிட்டான். அது அவனுடைய ஒன்றுவிட்ட சகோதரன் கோவிந்தன். மிகவும் அலங்கோலமாக அவன் விழுந்து கிடக்கும் நிலையிலிருந்து அவன் இறந்து விட்டான் என்பதை அறிந்து கொண்டான். அவன் விழுந்து கிடந்த இடத்திற்குச் சமீபமாக ரத்தம் தோய்ந்த கத்தி ஒன்று கிடந்தது. கோவிந்தனின் மார்பிலிருந்து ரத்தம் கசிந்து அவன் அணிந்திருந்த வெண்மையான சட்டையில் திட்டுப்போல் செக்கிறமாகக் காணப்பட்டது. இதைப் பார்த்ததும் ஆனந்தனின் உடல் நடுங்கியது. என்ன கோரம்! எத்தகைய கொடுமை! இந்தச் சமயத்தில் என்ன செய்வதென்றே ஆனந்தனுக்குப் புரியவில்லை.

கொஞ்சம் கொஞ்சமாக மனத்தில் ஒரு அமைதியை ஏற்படுத்திக் கொண்டு அவன் சிந்திக்கலானான். முதல் நாள் இரவு நடந்த நிகழ்ச்சிகள் அவன் நினைவிற்கு வந்தன. முதல் நாள் இரவு மாதவியின் கையிலிருந்த கத்தி, அப்பொழுது கோவிந்தனுக்கு அருகில் கிடந்த ரத்தம் தோய்ந்த கத்தி போல்தானிருந்தது. கீழே கிடந்த கத்தியை எடுத்து இரு புறமும் திருப்பித் திருப்பிப் பார்த்தான். அது மாதவியின் கத்தியாகத் தோன்றவே, அவள்தான் கோவிந்தனைக் கொன்றிருக்க வேண்டும் என்று அவனுக்குத் தோன்றியது. முதல் நாள் இரவு மாதவி கோவிந்தனைக் கத்தியால் குத்த வந்ததும் அந்தச் சமயம் அவன் வந்து தடுத்ததும் அப்படியே அழியாத சித்திரமாக அவன் மனத்தில் பதிந்திருந்தது. அவன் மனம் குழம்பியது. மாதவி இப்படிச் செய்திருப்பாளா! அவனால் திடமாக முடிவு செய்ய முடியவில்லை. 'பாவம் தாயம். மாதவி இப்படி செய்திருக்கவே மாட்டாள்' என்று தனக்குத்தானே சொல்லிக் கொண்டான். ஆனால் அவனது மனம் ஆறுதலடையவில்லை. ஏனெனில் முதல் நாள் இரவு மாதவி கோவிந்தனிடம் நடந்து கொண்ட கடுமையான நிலை அவன் மனத்தில் சந்தேகத்தையும் கலக்கத்தையும் ஊன்றி விட்டது.

இப்பொழுது கோவிந்தன் கொலை செய்யப்பட்டுக் கிடக்கிறான். அவன் உடலிருந்து ரத்தம் பீறிட்டுத் தரையில் கறையை உண்டாக்கி யிருக்கிறது. இந்தக் கத்தி மாதவியின் கத்தியாக இருக்க வேண்டும். அல்லது அதைப் போன்ற வேறொரு கத்தியாக இருக்க வேண்டும். எப்படி இருந்தால் என்ன! இந்தக் கோரக் கொலையை மாதவி செய்திருக்கலா மென்பதற்கு ஆதாரமிருக்கிறது. மறுபடியும் கோவிந்தன் காதல் வெறி தலைக்கேறி அவளிடம் ஏதாவது விஷமத்தனம் செய்திருப்பான். இந்தத் தடவை அவள் தன் பழியைத் தீர்த்துக் கொண்டிருப்பாள்......!

அவன் யோசித்துப் பார்த்த வரையில் மாதவி தான் இக்கொலைக்குக் காரணமாய் இருக்கவேண்டுமென்று பட்டதே தவிர வேறு விதமாக முடிவு கட்டத் தோன்றவில்லை. அப்படி யென்றால் மாதவிதான் குற்றவாளியாவாளா!.........இதை நினைத்தபோது அவனுக்கு அவள்மீது பச்சாத்தாபம் ஏற்பட்டது. மாதவிமீது இந்தப் பயங்கரமான பழி சுமத்தப்படாமல் பார்த்துக் கொள்ள வேண்டும் என்று கருதினான்.

ஆகவே, அவன் சற்று தூரத்திலிருந்த புதரில் அந்தக் கத்தியை மறைவாகப் புதைத்து வைத்துவிட்டு நேராக வீட்டிற்கு வந்து பேசாமல் படுத்துக் கொண்டான். (தொடரும்)

# கண் இழந்தவன்!

எம். பி. சுப்பிரமணியம்

அன்று நதிக் கரையில் ஏனோ தெரியவில்லை ஒரே கூட்டம். வழக்கம் போல் அங்கு போனேன். தினம் நான் போய்க் கொண்டு தான் இருப்பேன், என் கேள்விக்கு பதில் கிடைக்கும் வரை. அன்றும் அதற்காகத்தான் போனேன். கும்பலில் கீழே விளையாடிக் கொண்டிருந்த குழந்தையைக் கவனிக்கவில்லை! என் கால் பட்டுவிட்டது போலும், 'வீல்' என்று கத்தியது குழந்தை. குழந்தையை எடுத்து ஆறுதல் கூறக் குனிந்தேன்.

"ஏண்டா, கண் இல்லையா உனக்கு?" என்று அலறினாள் ஒரு மங்கை.

குழந்தையை நான் எடுக்கப் போவதைப் பார்த்த வேறு யாரோ ஒருவர், "அடே! அவன் பைத்தியம். குழந்தையை ஏதாவது செய்துவிடப் போகிறான்" என்று கத்தினார். குழந்தையை வாரி எடுத்து அணைத்துக் கொண்டாள் அந்த மங்கை, ஏதோ பயங்கரப் பேயிடமிருந்து காப்பது போல.

நான் கண்ணில்லாதவனாம்! இரண்டு கண்கள்தானே இருக்கிறது எனக்கும். காலிலுமா கண் இருக்கிறது? நான் கண்ணில்லாதவன்! அவன்? உலகத்தையெல்லாம் ஆள்பவன், எங்கும் வியாபித்திருப்பவன், சகல ஜீவராசிகளுக்கும் கர்த்தா, அவனுக்கு மட்டும் கண் இருக்கிறதா? கண் உள்ளவன் செய்யும் செய்கையா அவன் செய்தான்?

நான் பயித்தியமாம்! நான் கேட்கும் கேள்விகளுக்குப் பதில் சொல்ல முடியவில்லையென்றால் ஏதோ சாக்குப்போக்கு சொல்லுகிறார்கள். அர்த்தமற்ற கேள்விகள், மூளை குழம்பி விட்டது என்கிறார்கள். நான் கேட்பதா அர்த்தமற்ற கேள்விகள்? மனச்சாட்சி யுள்ளவன் சொல்லட்டும். நியாயம், நீதி என்கிறார்களே, அது ஏன் மானிடருக்குத் தானா? தெய்வத்துக்கு மட்டும் கிடையாதா? நான் என்ன இங்கு செய்தேன்? என்ன பாவம் செய்தேன்? என் அருமை ராதைதான் என்ன பாவம் செய்தாள்? மானிட வாழ்க்கையில் இன்பமான காலத்தில் ஏன் தெய்வம் இவ்வாறு எங்கள் வாழ்க்கையில் சதி செய்தது? அவள் பூத்துக் குலுங்கி மலராக மலர்ந்து நிற்கும்பொழுது வெட்டி வீழ்த்தி விட்டானே! என் எண்ணங்கள், நான் கட்டிய கோட்டைகள், என்ன ஆவது?

ராதை எனக்காகவேதான் பிறந்தவள். நானும் அவளுக்காகவே பிறந்தவன் தான் என்று எண்ணி இறுமாந்திருந்தேன். எல்லோருமே, எங்கள் பெற்றோர்களும், ஊராரும் கூட அப்படித்தான் எண்ணியிருந்தனர்.

"அத்தான்" என்று அவள் என்னை ஆசையுடன் கூப்பிட்டாலே போதும் எனக்கு. இளம் வயதிலே கூடி ஆடி விளையாடினோம். கல்லூரிப் படிப்புக்காகச் சென்னைக்குப் போன பிறகு அவளை நான் நான்கு வருடங்களுக்குப் பார்க்க முடியவில்லை. மாமாவும் மாற்றலாகிக் குடும்பத்தோடு வடக்கே எங்கோ போய் விட்டார். அதுவும் சேர்ந்து கொண்டது.

அந்த வருடம்தான் நான் பி. ஏ. பரீட்சை எழுதி யிருந்தேன்.

"இந்த வருஷம் ராதைக்கும் உனக்கும் முடிச்சுப் போட்டுவிட வேண்டும்" என்று சொல்லிக் கொண்டிருந்தார் அப்பா.

"படிப்பு முடிந்து வேலை கிடைக்கட்டும், அப்பா!" என்றேன். இனைற்று வெள்ளத்தை யார் கொண்டு போய்விடப் போகிறார்கள்? ராதை என்னுடையவள்தானே!

மாமா குடும்பத்தோடு எங்கள் கிராமத்துக்கு வருவதாக எழுதியிருந்தார். நானும் பரீட்சை முடிந்ததும் ஊருக்குப் போய்ச் சேர்ந்தேன். மாமா குடும்பத்தோடு வரும் நாளன்று ஆவலோடு ஸ்டேஷனுக்குப் போனேன். என் மனம் ராதையைக் காணத் துடிதுடித்தது.



அவள் வாயைக் கிளற வேண்டும் என்று திட்டம் போட்டிருந்தேன். ஆனால் வண்டி வந்து என் மாமா மாமியுடன் இறங்கிய மோகன உருவத்தைக் கண்டதும் நான் மெய் மறந்து விட்டேன். நான்கு வருஷங்களில் என்ன மாறுதல் அடைந்து விட்டாள் ராதை! மோகனப் புன்னகை புரிந்து கடைக்கண்ணால் என்னைப் பார்த்தாள். என் ராதையா

இது? அல்லது கோகுலத்தில் கிருஷ்ணனுடன் ஆடிப் பாடிய அந்த தெய்விகப் பெண்ணா என்று அச்சமுற்றது என் நெஞ்சம். பருவம்தான் அவளை என்ன அழகு படுத்திவிட்டது. இந்தச் சித்திரப் பாவை என் காதலி என்று எண்ணியதும் என் உடம்பு சிலிர்த்தது.

"என்னடா, உன் ராதையைக் கண்டதும் எங்கள் ஞாபகம் இல்லை போலிருக்கிறது!" என்றார் மாமா தமாஷாக.

அடுத்த விடுமுறையில் பத்து நாட்கள் நான் மாமா வீட்டில் தங்கியிருந்தேன். முன்பு போல் ராதை என்னுடன் வாயாட மாட்டாள். அவள் போக்கில் ஒரு மாறுதல் இருந்தது. என்னைக் கண்டாலே அவள் முகம் நாணத்தால் சிவந்துவிடும்; என்னை அவள் பார்க்கும் பார்வை என் மனத்தில் இன்பக் கனவுகளை எழுப்பிவிடும்.

அன்று வெள்ளிக்கிழமை. அத்தை கோவிலுக்குப் போயிருந்தாள். மாமா வெளியில் எங்கேயோ போயிருந்தார். சாயந்திரம் எங்கெல்லாமோ போய்ச் சுற்றி விட்டுத் திரும்பி



னேன். வீட்டில் ராதை மட்டும் இருந்தாள். இந்தச் சந்தர்ப்பத்தில் அவளுடன் பேச வேண்டுமென்று என் மனம் துடித்தது.

"ராதை, ராதை!" என்று கூப்பிட்டேன்.

கைவளை குலுங்க, ஆடி அசைந்து வந்தாள். "என்ன, ராதை! என்னுடன் நீ இப்பொழுதெல்லாம் பேசுவதே யில்லை!" என்று மிகவும் ஆவலுடன் கேட்டேன்.

ஆர்வமும் ஆசையும் அவள் முகத்தில் தாண்டவமாடியது. என் முகத்தை நிமிர்ந்து நோக்கினாள். ஏடுகள் சொல்ல முடியாத அவள் அன்பை எடுத்துரைத்தது அந்த ஒரு பார்வை. கண்களுக்கா இவ்வளவு சக்தி!

அவள் கையைப் பிடித்து என் அருகில் இழுத்தேன். என் கைபட்டு அவள் உடம்பு சிலிர்த்தது. அவள் கைதான் எவ்வளவு மிருதுவாக இருந்தது!

"என்ன, ராதை? ஊமையைப்போல் நின்று கொண்டு இருக்கிறாயே?" என்றேன்.

"என்ன, அத்தான்!" என்றாள் சற்று நாணிக் கோணிக் கொண்டே.

"ராதை! என்னை மறந்து விட்டாயா?"

"என்ன, அத்தான்! இப்படிப் பேசுகிறீர்கள்? உங்களை மறக்க முடியுமா? உங்களுடையவள்தானே நான்!" என்றாள். அவள் முகம் சட்டென்று சிவந்து விட்டது.

"சும்மா கேட்டால் அதற்குக் கோபமா?" என்றேன். என் அருகில் அவளை இழுத்துக் கொண்டே. அவள் முகத்தில் புன்னகையும் நாணமும் ஒருங்கே தோன்றியது. அவள் முகம் தான் எப்படி வர்ண ஜால விசித்திரங்களைக் காட்டுகிறது. நிமிஷத்துக்கு நிமிஷம் அவள் முகத்தில் தோன்றும் பாவங்கள் என்னைத் திணற அடித்து விட்டன. அவள் பருவ மேனியும், கனிந்த பார்வையும் என் வாலிப உணர்ச்சிகளைத் தூண்டி என் எண்ணங்களை அலைமோதச் செய்து விட்டன.

வேறு ஒரு நாள் மாலை. ஆற்றங்கரையில் உட்கார்ந்து ஏதோ புத்தகத்தைப் படித்துக் கொண்டிருந்தேன். யாரோ என் அருகில் வருவது போலத் தோன்றியது. கிராமத்துப் பெண்கள் தண்ணீர் கொண்டுபோக வந்திருப்பார்கள் என்று எண்ணினேன்.

"அத்தான்!" என்ற இன்ப நாதம் என் காதில் ஒலித்தது. ஒய்யாரமாக இடுப்பில் குடத்துடன் நின்று கொண்டிருந்தாள் ராதை. அவளையே பார்த்துக் கொண்டிருந்தேன்.

"என்ன, அத்தான்! ஒன்றும் பேசாமல் உட்கார்ந்து கொண்டிருக்கிறீர்கள்?" என்றாள்.

"உன்னுடைய அழகு என்னை மெய்மறக்கச் செய்து விட்டது!" என்றேன்.

"போங்க, அத்தான்!" என்றாள். அப்போது அவள் முகம் ரோஜா இதழைப்போல் அழகாகச் சிவந்து விட்டது.

"இனி என்னால் உன்னைப் பிரிந்து இருக்க முடியாது, ராதை! சீக்கிரம் நம் கல்யாணத்துக்கு ஏற்பாடு செய்ய வேண்டும்" என்றேன்.

என்னை விழுங்கி விடுவது போலப் பார்த்தாள். அதை எப்படித்தான் விவரிப்பது?

பட்டணம் வந்து சேர்ந்தேன். என் உள்ளம் என்னவோ ராதையிடம்தான் பூங்குடியில் இருந்தது. ராதையின் ஞாபகம் என்னை விட்டு அகலவே யில்லை. யார் பேசினாலும், நடந்தாலும் ராதையின் இனிய குரலும் அன்ன நடையும்தான் என் ஞாபகத்துக்கு

வரும். எல்லோரும்தான் நடக்கிறார்கள், பேசுகிறார்கள், அந்த இனிமையும், குளுமையும், அழகும் இல்லையே!

என் தாயாருக்கும் தந்தைக்கும் என் மனமாறுதல் தெரிந்து விட்டது போலும். சீக்கிரம் ராதைக்கும் இவனுக்கும் முடிச்சுப் போட்டுவிட வேண்டுமென்று பேசிக் கொண்டார்கள். நான் மறுத்துச் சொல்லவேயில்லை. அந்தச் சுப நாளை எண்ணி எண்ணி இன்பக் கனாக் கண்டு கொண்டிருந்தேன்.

* * *

அன்று என் நண்பர்களுடன் என் கலியாணத்தைப் பற்றி நீண்ட நேரம் பேசிக் கொண்டிருந்தேன். அந்த இன்ப நாளை எல்லாரும் எதிர் பார்த்தனர். நேரம் போனதில் நினைப்பின்றிப் பேசிக் கொண்டிருந்து விட்டேன். ராதையும் நானும் சேர்ந்து அனுபவிக்கப்போகும் இன்பத்தை எண்ணிப் பார்த்தேன். உடம்பில் ஒரு புது உணர்ச்சி ஓட ஆரம்பித்தது. அந்த இன்ப உணர்ச்சியை அனுபவித்த வண்ணம் மாலை ஏழு மணிக்கு வீடு திரும்பினேன். என் தந்தையும் தாயும் விக்கி விக்கிக் குழந்தைகள் போல அழுது கொண்டிருந்தனர்.

"என்ன, அம்மா?" என்றேன் துடி துடிக்க.

அப்பா ஒரு தந்தியை என் கையில் நடுக்கத்துடன் கொடுத்தார்.

"ராதை ஆற்றில் மூழ்கி விட்டாள்" என்று இருந்தது. அடுத்த கணம் உலகமே சுழல்வது போல் இருந்தது. ஆயிரம் சம்மட்டிகள் கொண்டு என் தலையில் அடிப்பது போன்ற வேதனை உண்டாயிற்று. வெறி பிடித்தவன் போல் ஓடினேன் ரயில்வே ஸ்டேஷனுக்கு.

காலையில் போய்ச் சேர்ந்தேன் பூங்குடியில். ரயிலடியிலிருந்து கிராமத்துக்கு எப்படிப் போய்ச் சேர்ந்தேன் என்று எனக்கே தெரியாது. ஸ்டேஷனிலிருந்து ஓடினேன். ஒன்று இரண்டு பேர் என்னைக் கண்டதும் விலகிப் போய் விட்டனர். மாமா வீடு போய்ச் சேர்ந்தேன். என் மனத்திலுள்ள திகிலும் சூழ்நிலையுமே தெளிவாகக் கூறியது என் ராதை போய்விட்டாள் என்று.

சில பெண்களுடன் விளையாடப் போனாளாம் ஆற்றங்கரைக்கு. பெரும் வெள்ளம் வந்து கொண்டிருந்த சமயம், காவேரி கரை புரண்டு ஓடிக் கொண்டிருந்தது. படித்துறையிலிருந்து சறுக்கி விழுந்து விட்டாளாம். இரண்டு மைலுக்கும் அப்பால்தான் அவள் உயிரற்ற தேகம் கிடைத்ததாம்.

நம்பிக்கையோடு வந்தேன். சுக்குநூறாகி விட்டது அந்த நம்பிக்கை, என் வாழ்க்கை. நான் கட்டிய இன்பக் கோட்டைகள், ஏன்? அதைத் தான் நான் அன்றிலிருந்து கேட்கிறேன். நான் என்ன தீமை செய்தேன்? வாழ்க்கையில் நியாயமும் சத்தியமுமாகத் தான் நடந்திருக்கிறேன். மானிட வாழ்க்கையில் அடையும் இன்பத்தை நான் அடையவேயில்லை. என் ஆசைக் காதலி என் ஆருயிர் ராதையுடன் ஒரு நாள் கூட நான் இன்ப வாழ்க்கை வாழவில்லை. எனக்கு மட்டும் இந்த அநீதி ஏனோ தெரியவில்லை?

போன ஜன்மத்தில் செய்த பலன் என்கிறார்கள். காணாத பாபத்திற்கும் அறியாத குற்றத்திற்குமா தண்டனை?

என் மனத்தில் அமைதியே இல்லை. என்றுமே அமைதி இருக்காது. இதற்குக் காரணம் தெரியும் வரை அமைதி ஏது?

இயற்கை அன்னை என்கிறார்கள். அன்னையா இவள்? கல் நெஞ்சையும் கரைக்கும் கதறல் கேட்டும் இரங்காதவள். மரம் செடி கொடிகளுக்கு மத்தியில் தவழ்ந்து ஓடும் இந்த நதியிடமே எத்தனை தரம் என் குறையைக் கூறிக் கதறி யிருக்கிறேன்!

"அவன் ஆற்றங் கரையிலும், தோப்புகளிலும் தானே பிதற்றுகிறான்; பயித்தியம் பிடித்து விட்டது, பாவம்!" என்று ஊரார் கூறுகிறார்கள். நான் பயித்தியமாம்!

* * *

அன்று என்ன விசேஷமோ தெரியவில்லை. காவேரி நதிக்கு எலுமிச்சம் பழம் முதலியவைகளை எறிந்தார்கள். கரைபுரண்டு ஓடும் வெள்ளத்தில் போகும் எலுமிச்சம் பழத்தைப் பார்த்ததும் என் ஆசை ராதையின் சிவந்த மேனிதான் என் நினைவுக்கு வந்தது. அவள் அழகிய உருவத்தைக் கோரமாகக் கொண்டு போய்விட்டாளே! இவளா காவேரி அம்மன்? இளம் நங்கையைப் பலி கொண்ட இந்தக் கொடூர மனம் படைத்த காவேரிக்கா பூஜை? என் கேள்வியை லட்சியம் செய்யாமல் பேரிரைச்சலுடன் கரை புரண்டு ஓடிக் கொண்டிருந்தாள் காவேரி.

"என் ராதை எங்கே, ஏன் சதி செய்தாய்?" என்று மீண்டும் கதறினேன். பயங்கரமாகச் சிரிப்பது போலக் காவேரி சள சளவென்று ஓடிக் கொண்டிருந்தது.

அந்தத் தண்ணீர்ப் பிரவாகத்தின் நடுவே அதோ என் அழகிய ராதை! ஆம், என் ராதையேதான்! "ராதை, இனி உன்னை விட்டு அகலவே மாட்டேன்!" என்று கூறினேன். அவளை அடைய ஆவலோடு தாவினேன்.

"அதோ, கிருஷ்ணன் ஆற்றில் குதித்து விட்டான்! பயித்தியம், ராதை ராதை என்று இந்தப் பதினெட்டாம் பெருக்கு வெள்ளத்தில் இறங்கி விட்டானே!" என்று கூக்குரலிட்டனர் கரையிலுள்ளவர்கள்.

என் ராதையை நோக்கிச் சென்றேன். அதோ அவளே என்னைப் பார்த்து விட்டாள். அவளை நெருங்குகிறேன் என்ற எண்ணமே போலும் என்னைத் திணற அடிக்கிறது! திக்குமுக்காடச் செய்கிறது. இதோ, அவளே தான்! அவள் அணைப்பிலே தான் என்ன இன்பம்! என்ன குளுமை! என்ன ஆனந்தம்!

# அவசரத்திற்குதவும் நண்பன்.....



மயக்கமோ மூர்ச்சையோ ஏற்படும் வேளை டாம்கோ ஓ-டி-கொலோன்தான் சரியான தெளிவூட்டும் மருந்து. தலை வலி யுண்டானால் ஒரு லேசான துணி யில் சில துளிகள் விட்டு நெற்றிமேல் போட்டுக் கொண்டால் ஜிலுஜிலுப்பா யிருக்கும். தலைவலியும் சமனமாகும்.



வெட்டுக் காயங்கள், ரணங்களுக்கு டாம்கோ ஓடிகொலோன் அவசரத் திற்குதவும் ஒரு சிறந்த விஷ நாசினி. அதிலுள்ள சுத்தமான ஸ்பிரிட் நோய்க் கிருமிகளைக் கொன்று விஷம் பரவாமல் பாதுகாக்கும்.

டாம்கோ ஓ-டி-கொலோனின் உற்சாகமூட் டும் நறுமணம் காரணம், நோயாளிகளின் அறையில் தெளிக்கவும். ஜுரத்திலும் ஏற்படும் சிறுகோளாறுகளை நிவர்த்திக்கவும் அது இன்றியமையாதது. ஒரு பாட்டில் டாம்கோ ஓ-டி-கொலோன் உண்மையில் உற்ற நண்பனே. எல்லா குடும்பங்களிலும் அது அவசியம் இருக்க வேண்டியதுதான்.




A TATA PRODUCT

டாம்கோ

## ஓ-டி-கொலோன்

டாடா ஆயில் மில்ஸ் கோ., லிட்.

TE 7533

புதிய தொடர் கதை

# 'சுந்தரோதயம்'

மாத மிருமுறை தமிழ் பத்திரிகையில்

ஆரம்பம் 15-1-53

**"வையகமாண்ட வல்லரசு"**

என்ற தலைப்பில் 'ஜெய் சிவாஜி' எழுதி கதை உலகை கவர்ச்சித்த குலோத்துங்கன் 5000 வருஷங்களுக்கு முன் காவேரிப்பூம் பட்டினத் தலைநகரில் நின்று உலகையாண்ட தமிழ் மாஅரசு சரித்திரத்திலுள்ள, வீரம், மர்மம், காதல் முதலியவை பிணைந்த உன்னதக் கதையை எழுதுகிறார். ராஜயோகம்: சுந்தரம்; இப்பொழுதே சந்தாதாரராக சேருங்கள். வருட சந்தா, உள்நாடு, ரூ. 6, மலேயா ரூ. 9.

சுந்தரோதயம், பெங்களூர் - 1

யோக சிகிச்சை: நூல் ஆசிரியர்:—ஸ்ரீ சுந்தரம்-பல நோய்களை ஆசனப் ப்ராணயாமத்தால் போக்கும் வழி. 440 பக்கம், 161 படம் ரூ: 10/-தபால் செலவு 14 அணா. ஆனந்த ரகஸ்யம்: யோகாசன நூல்: சுந்தரம், ரூ. 3/8. தபால் செலவு அணா 8.

கவியரசர் டாகூர் காந்தி மகாத்மாவின் பெருமையையும் அவர் இந்தியாவுக்கு ஆற்றி யிருக்கும் அருந்தொண்டையும்

# மகாத்மா காந்தி

என்ற நூலில் அழகாக விளக்கி யிருக்கிறார்

விலை அணா எட்டு

(தபால் செலவு தனி)

சசிதேவி எழுதிய

# விஜயா

முதலிய கதைகள்

விலை ரூ. 2-8-0

(தபால் செலவு தனி)

●

கிடைக்குமிடம்

**கல்கி காரியாலயம்**

கீழ்ப்பாக்கம் :: சென்னை






இன்றைக்குப் பதினைந்து வருஷங்களுக்கு முன் இலங்கையிலுள்ள தேயிலைத் தோட்டங்களில் எல்லாம் டாடப் (Dadap) என்னும் முள் முருங்கையைப் பசுந்தாள் உரத்துக்காகப் பயிரிட்டு வந்தார்கள். ஆனால் இன்று முருங்கை இருந்த இடத்தை யெல்லாம் கிளிரிஸீரியா அலங்கரித்து வருகிறது. முருங்கையைவிட இது அதிக சத்துள்ள உரமாக இருப்பதே இதற்குக் காரணம்.

கிளிரிஸீரியா ஒரு செடியல்ல, அதை மரமாகவும் வளர்க்கலாம். மரமாக வளர்ப்பதால் தரை சூரிய வெப்பத்தால் காயாமல் இருக்கும். கிளைகள் ஆகாயத்தில் பறந்து வளரும். கால் நடைகளால் அழிந்து போகாமலும் இருக்கும். மரத்தின் வேர் பூமியின் ஆழத்தில் போவதால் தரையின் மேல் மட்டத்தில் சிறு பயிர்கள் வளர்க்க வசதி உண்டு. இந்தக் கிளிரிஸீரியாவை விதையிலிருந்து பயிரிடுவதைப் பார்க்கிலும் அதன் கிளையிலிருந்து வெகு சீக்கிரம் உண்டாக்கலாம்.

கிளிரிஸீரியா செடியின் கிளைகளைக் கழிக்காமல் ஆறு மாதங்களுக்கு விட்டு விட்டால் கிளைகள் முற்றி நடுவைக்குத் தயாராக இருக்கும். பின் அக் கிளைகளை ஆறு அல்லது ஏழு அடி நீளமாக வெட்டிப் பதினைந்து அடிக்கு ஒன்றாக நடலாம். மாரிக் காலத்தில் நடுவது அதிக உத்தமம். ஒரு மாதத்திலிருந்து ஒரு வருஷத்துக்குள் இருபது மரங்கள் உண்டாக்கலாம்.

ஏறக்குறைய ஒரு வருஷத்துக்குள்ளாக அது துளிர்த்துக் கிளைகள் உண்டாகிவிடும். மரத்தை ஐந்து அல்லது ஆறு அடி உயரத்துக்கு மேல் வளரவிடாமல் பார்த்துக் கொள்ளவும். நிலம் குறைவாக உடையவர்கள் நிலத்தைச் சுற்றியும் வயல் வரப்புகளிலும் பாதை ஓரங்களிலும் நடலாம். சிலர் தங்கள் நிலங்களை ஆடு மாடு மேய்ந்து விடாமல் முள் கம்பி அடித்து வைக்கிறார்கள். அதற்குக் கால்கள் நடுவதற்குக் கிளிரிஸீரியாவை நட்டு அதிலேயே கம்பி அடிக்கலாம். வேலியின் கால்களும் பலமாக இருக்கும். பசுமையான தழைகளும் இருக்கும். அதைக் கழித்துப் போடுவதால் பூமியின் சாரம் குன்றாமல் இருக்கும்.

கிளிரிஸீரியாவின் தழைகள் பசுந்தாள் உரமாவதுடன் மட்டுமின்றிக் கால்நடைகளுக்கும் சிறந்த உணவாகும். நாள் ஒன்றுக்கு ஒரு படி பால்கறக்கும் பசுவுக்குக் கிளிரிஸீரியாவைப் போட்டால் ஒன்றே அரைக்கால் முதல் ஒன்றேகால் படி பால்வரை கறக்கும். செழுமையான பசும் புல்லைவிட அதிகக் கொழுப்புச் சத்து உடையது. ஆனால் சினையாக இருக்கும் பசுக்களுக்கு அதிகம் கிளிரிஸீரியா கொடுக்கக் கூடாது. அதில் கொழுப்புச் சத்து அதிகமிருப்பதால் கன்று ஈனும்போது பசு அதிகமாகக் கஷ்டப்படும்.

சில சமயங்களில் மரம் தளிர்த்துக் கழிப்பதற்குத் தயாராக இருந்தும் உரம் தேவை யில்லாமல் போகிறது. அச் சமயங்களில் கிளைகளில் உள்ள இலையைக் கைக்கு எட்டின மட்டும் உதிர்த்து எடுத்துக் கொண்டு கிளைகளை விட்டுவிட வேண்டும். சிலகாலம் சென்றபின் கிளைமுற்றி நீண்டுவளர்ந்திருக்கும். அப்போது அந்தக் கிளைகளை வெட்டி அகத்திக் கம்புகளைப் பாவிப்பதுபோல் வேலி கட்டுதல், கூரை வேய்தல் முதலிய வேலைகளுக்கு உபயோகிக்கலாம். நன்றாய் முற்றின கம்புகள் அகத்திக் கம்புகளை விட உறுதியாக இருப்பதுடன் நாள்பட உழைக்கும்.

கிளிரிஸீரியாவின் தழைகள் வயல்களுக்கு நல்ல உரமாகும். அதன் நீண்ட கிளைகள் கொட்டகை போடுதல், பந்தற்கால் நடுதல் முதலியவைகளுக்கு உபயோகமாகும். அதன் வேண்டாத பகுதிகளை அடுப்பு எரிக்க உபயோகிக்கலாம். ஆகையால் கிளிரிஸீரியாவை விவசாயிகள் வளர்ப்பதால் எப்படிப் பார்த்தாலும் லாபம்தான். இதை வளர்ப்பதற்கு நிறையத் தண்ணீர் வேண்டுமென் பதுகூட அவசியமில்லை. அவ்வப்போது கொஞ்சம் தண்ணீர் விட்டு வந்தாலே போதுமானது.

சுமார் ஐயாயிரம் அடி உயரமான நுரலைப் பிரதேசத்திலிருந்து கடல் மட்டத்தில் இருக்கும் கொழும்பு வரை பிரயாணம் செய்தால் வழியில் பலவிதமான சீதோஷ்ண நிலைகளும் குறுக்கிடும். ஆங்காங்கு விளைபொருள்களும் சீதோஷ்ணத்துக்குத் தக்கவாறு மாறி மாறி இருக்கும். ஆனால் கிளிரிஸீரியாவையோ எல்லா இடங்களிலும் காணலாம். எவ்வளவு உஷ்ணப் பிரதேசத்திலும் கிளிரிஸீரியா மட்டும் தாராளமாக வளரும்.

கோடை காலத்தில் அசுகுணி என்று சொல்லும் ஒர்வகைப் பூச்சிகள் இதன் பசும் தழையிலும் கிளை நுனிகளிலும் வந்து அடைந்து கொள்ளும். மரத்தின் சாரத்தையும் கொஞ்சம் கொஞ்சமாக உறிஞ்சிவிடும். சொற்ப மரங்கள் உள்ளவர்கள் சோப்புத் தண்ணீரைத் தெளித்து அவைகளை அழித்துவிடலாம். அதிகமாகப் பயிரிடுபவர்கள் பூச்சி பிடித்த கிளைகளை வெட்டி உரத்துக்குச் சேர்த்துக் கொள்ள வேண்டும். நோய் கண்ட மரத்தின் தழையை மாட்டுக்குக் கொடுக்கக் கூடாது. இரண்டொரு நாட்களில் மழை பெய்யும் அறிகுறிகள் இருக்குமானால் மரத்தை அப்படியே விட்டுவிடலாம். மழை பெய்ததும் அப்பூச்சிகள் தானே மாண்டு போகும்.

விவசாயிகளுக்கு இத்தகைய ஓர் அற்புதச் செடியை அளித்த ஆண்டவனுக்குப் பொங்கல் இட்டு வணங்குவது கூடப் போதாதுதான்!

# இடிந்த கோயில்

அனஸ்

கோடை காலத்தில் சாரதா காவேரிக்கு ஊற்று நீர் எடுக்க இடுப்பில் குடத்தை அணைத்துக் கொண்டு வந்து விட்டால், ஆற்று ஓரமாக வெண் மணலில் இலுப்பை மரத்து நிழலில் சீட்டாடிக் கொண்டு உட்கார்ந்திருக்கும் இளைஞர் கூட்டம் வாயைப் பிளந்து கொண்டு அவளையே பார்ப்பது கூடப் பெரிய விஷயமல்ல. ஊற்று நீர் எடுத்துக்கொண்டிருக்கும் வயதுப் பெண்கள் கூட அவள் அழகைக் கண்டு பிரமிப்பார்கள். ஆனால்...... இன்று? அந்த சாரதாவா இவள் என்று சந்தேகம் கூடத் தோன்றி விடுகிறது. பாவம்! சாரதா என்னதான் செய்வாள். அவள் நிலையில் இன்னொருத்தி இருந்தால், ஒரு கால் அவளால் வேண்டுமானால் புரிந்து கொள்ள முடியுமோ என்னவோ!

சாரதா சோகமே உருக் கொண்டவளாய் அசுவாரஸ்யமாக நடை போட்டுக் கொண்டு ஆற்றை நோக்கி வந்து கொண்டிருந்தாள். அவளது அலங்கோல உடையும், கோதிய தலையும் அவள் எண்ணத்துக்கு விரோதமாக அவளை அழகி என்றே காட்டித் தொலைத்தன. ஆற்றங்கரைப் படித்துறை ஓரமாயிருந்த இடிந்த கோயிலண்டை வந்ததும் அவள் ஏனோ தீயை மிதித்தவள் போல துள்ளிப் பின் தங்கி நின்றாள். அர்த்தமில்லாமல் ஆலும் அரசும் முளைத்துக் கிடக்கும் சிதைந்த மண்டபத்தையும், சிதிலமாகக் கிடக்கும் பிராகாரத்து மதிள் சுவரையும் பார்த்தாள். முட்செடிகள் மண்டி, வேலி போன்ற அடைப்பு ஏதும் இல்லாத கோயில் நந்தவனத்தையும் பார்த்தாள். அவள் இதயத்தின் அடித்தளத்திலிருந்து ஒரு பெருமூச்சு வெடித்தது.

சிறு வயது முதலே சாரதாவுக்குக் கலையில் ஆர்வம் அதிகம் உண்டு. பக்கத்து வீட்டுப் பத்மாவின் பின்னலில் குற்றம் கண்டு பிடிப்பதும் சிவன் கோயிலில் அம்பாளின் அலங்காரத்தைப் பார்த்து விட்டு, அந்தச் சாட்டை மாலை சரியாக வளைந்து தொங்கவில்லை என்று விமர்சனம் செய்வதும் அவளுடன் கூடப் பிறந்த குணம். தனக்கு நினைவு தெரிந்த நாளாக இந்தக் கோயிலும், பிராகார மதிற் சுவரும், நந்தவனமும் இப்படியே இருக்கின்றனவே, இவற்றை யாராவது சிரத்தை எடுத்துக் கொண்டு புதுப்பிக்கக்கூடாதா? ஊரிலிருக்கும் தனவந்தர்கள் கண்ணில் இது ஏன் படவில்லை என்று அவள் எத்தனையோ தடவைகள் அங்கலாய்த்ததுண்டு. ஆனால், இன்று அவள் பார்த்த பார்வை, அவள் கோயில் சமீபம் வந்ததும் நடந்து கொண்ட விதம் இவை யெல்லாம் சற்றுப் புது விதமாகப் புரியாத புதிராகவே இருந்தன.

இவற்றுக் கெல்லாம் காரணம்......?

அவள் வாழ்க்கையை, அவள் நிலையை அந்த இடிந்த கோயில் நினைவு படுத்தி விட்டது. ஏதோ நினைவு வரவே, சாரதா ஆற்றைப் பார்த்தாள். ஊற்று நீர் எடுத்துக் கொண்டிருந்த பெண்கள் தன்னைப் பார்த்துப் பார்த்து ஏளனச் சிரிப்பு சிரித்துக் கொண்டு, தன் காதிலும் விழும்படி உரக்க "வாழாவெட்டி" என்று ஏசுவதைக் கேட்கவும் அவளுக்குத் துக்கம் நெஞ்சை யடைத்துக் கொண்டது. அடிவயிற்றினின்றும் கொப்புளித்துப் புறப்பட்ட நெடு மூச்சைத் தன்னை முடியாமல் வெளியே தள்ளி வறண்டிருந்த காவேரி ஆற்றைப் பார்த்தாள். கண்கள் கலங்கி விழியோரத்திலே கண்ணீர்த் துளிகள் முத்தார்த்தன.

ஒன்றும் தோன்றாதவளாய், குடத்தைக் கீழே வைத்து விட்டுப் படிக்கட்டில் அப்படியே கல்லாய்ச் சமைந்து உட்கார்ந்துவிட்டாள். அவள் பார்வை எதிர்க்கரையிலே சாம்பல் நிறத்துக்கு வெளிறிப் போய்ப் பயங்கரமாக நிமிர்ந்து நின்று கொண்டிருந்த மரத்தின்மீது ஒன்றியது!

தூரத்திலே தெளிவற்றுத் தெரியும் கானல் நீர் போல அவள் மனத் திரையிலே பழைய சம்பவங்கள் நெளிந்தோடின.

***

பெண்பார்த்த சுந்தரம் ஆசைப்பட்டுத் தான் சாரதாவைக் கல்யாணம் பண்ணிக் கொண்டான். ஆனால் ருதுசாந்தி முகூர்த்தத்தின் போது அவள் தந்தை பேசியபடி சீர் செய்யவில்லை என்ற காரணத்துக்காக அவளை வீட்டை விட்டுத் துரத்துவிடும்படி அவன் தகப்பனார் சொல்லவும் வேறு வழியில்லாமல் சுந்தரம் அவளைப் பிறந்த வீட்டுக்கு அனுப்பி விட்டான். சாரதாவின் தந்தைக்கு எதிர்பாராதவிதமாகப் பங்கு மார்க்கெட்டில் பணம் போய் விட்டது. இதனாலேயே அவர் கட்டியிருந்த மனக் கோட்டைகள் அவ்வளவும் தவிடு பொடியாகிவிட்டன. இல்லா விட்டால் தன் ஒரே பெண் சாரதாவை அவர் இப்படிக் கண் கலங்க வைத்திருப்பாரா? அவர்கள் கேட்டதைவிட இன்னும் ஒரு ஆயிரத்துக்குக் கூடவே செய்து சாரதாவை மகிழ்வித்திருப்பாரே!

சுந்தரம் படித்தவன். அதிலும் வைத்தியப் படிப்பை முடித்து விட்டு முடிவு அறிய உட்கார்ந்திருப்பவன். இவ்வளவு தூரம் நவநாகரிக காலத்துப் பையனாயிருந்தாலும், தந்தை சொல் தட்டாதவன். மனத்துக்குத் தன் தந்தையின் செய்கை தவறு என்று தெரிந்தும் கூட. அவர் விருப்பத்துக்கு ஏற்ப செய்ய வேண்டுமென்று செய்து விட்டான். எனினும், மனத்தை மட்டும் அந்தக் குற்ற உணர்ச்சி உறுத்திக் கொண்டேதான் இருந்தது. அவன் வேறு என்னதான் செய்வான்!

ஒருநாள் தந்தையிடம் இதைப் பற்றிக் கேட்டும் விட்டான். அவர் சீறி விழுந்தார். "அவள் வேண்டுமென்றால் எங்களை மறந்து

விடு'' என்று ஆவேசம் வந்தவரைப் போலக் கூவினர். அப்பாவுக்கு விரோதமாக நடந்தறியாத சுந்தரத்தால் அதற்குமேல் என்ன தான் செய்ய முடியும்?

எல்லோரும் சாரதாவின் தந்தையிடம் சம்பந்தியைப் போய்ப் பார்த்துச் சமாதானம் பண்ணி ஏதாவது ஒரு ஏற்பாடு செய்துவரும்படி சொன்னார்கள். ஆனல் அவர் அதைக் காதில் வாங்கிக் கொள்ளவேயில்லை. இதிலிருந்து தன் அருமை மகளின் வாழ்வு வீணாகிறதே என்ற நினைப்பு அவருக்கு இல்லவே இல்லையோ என்று பலரும் எண்ணியிருக்கலாம். ஆனல் உண்மை அது அல்ல. படித்த சுந்தரம் கூட இப்படி இருக்கிறானே, அவனுக்கு இத்தனை திமிர் இருந்தால், நான் மட்டும் என்ன சளைத்தவனா என்ற இறுமாப்பு அவருக்கு. பின் இருக்காதா? சம்பந்தியை விட ஆஸ்தியிலோ அந்தஸ்திலோ எந்த விதத்திலும் அவர் குறைந்தவரல்லவே!

இதற்கிடையில் பொய் சாட்சிக்காரர்கள் பலரும், அடுத்துக் கெடுக்கும் தயாள குணமுடைய சிலரும் அவரை வழக்குப் போடும்படி தூண்டினார்கள். தங்களுக்கு இதன் மூலம் ஏதாவது அகப்படும் என்ற ஆசையில். குடும்ப கௌரவம் பாழாகிப் போகுமே என்று எண்ணிச் சாரதாவின் தந்தை பேசாமல் இருந்து விட்டார்.

என்றாலும் சாரதா சுந்தரத்துக்குக் கடிதம் போடத் தவறுவதேயில்லை. ஆனல், பாவம், பதில்தான் வருவதே கிடையாது. நாளடைவில் இது அவன் தகப்பனுருக்குத் தெரிந்ததால் இந்தக் கடிதப் படையெடுப்பும் அடியுடன் நின்று போய்விட்டது.

நாளடைவில் சுந்தரம் பம்பாயில் பைத்திய ஆஸ்பத்திரியில் டாக்டராயிருக்கிறான் என்று தெரிந்தது. அடுத்து அவன் தந்தை இறந்துவிட்ட தாயும் பராபரியாகச் செய்தி எட்டியது. இதற்குப் பின்பாவது சாரதாவை அழைக்காமலா இருந்து விடுவான் என்று கனவு கண்டார் கிழவர். பாவம்! கனவு கனவாகவே ஆகிப் போனதும் கிழவர் மனத்தில் மேலும் மேலும் கசப்புத்தான் அதிகமாயிற்று.

***

"என்னடி, சாரதா? இங்கேயே எதுக்குப் பிரமை பிடித்தாற்போலே உட்கார்ந்திருக்கே? உனக்கு என்ன பைத்தியம் கியித்தியம் பிடித்து விட்டதா!'' என்று ஒருத்தி சொல்லவும், கூடியிருந்த பெண்கள் கலகலவென்று சிரிக்கவும் அவள் சிந்தனையிலிருந்தும் விடு பட்டாள். இடுப்பில் குடத்தோடு நிற்கும் அந்தப் பெண்களைப் பார்க்க அவளுக்கு வெட்கம்பொங்கித் தின்றது. ஒன்றும் பேசாமல் நேரே 'விர்'ரென்று வீட்டை நோக்கி நடந்தாள். திரும்பவும் அவர்கள் 'கொல்' என்று சிரிப்பதும், பைத்தியம் என்று ஏளனமாகப் பேசிக் கொண்டு போவதும் காதில் விழவே அவளுக்கு என்னவோ போலாகி விட்டது!

அவள் மனத்தில் பைத்தியம் என்ற வார்த்தை மின்சாரம் போலப் பாய்ந்து தாக்கியது. அவ்வளவுதான். இரண்டு தினங்கள் அவள் போக்கே ஒரு மாதிரியாயிருந்தது. ஏதோ பயந்திருக்கிறாள் என்று பலர் சொன்னதன் பேரில் என்ன வெல்லாமோ செய்து பார்த்தார்கள். ஒன்றும் பிரயோஜனமில்லை. கடைசியில் அவளுக்குப் பைத்தியம் பிடித்து விட்டது என்று தெரிந்தது. கோயில்களுக்கெல்லாம் அழைத்துப் போனார்கள். ஒன்றிலும் சரிப்பட்டு வரவில்லை. கடைசியில் சென்னை பைத்திய ஆஸ்பத்திரிக்கு அழைத்துப்போய்ச் சேர்த்து விட்டார்கள்.

அவளை ஆஸ்பத்திரியில் ஒப்புவித்துவிட்டுத் தன் சொந்தக்காரர் வீட்டுக்கு மனைவியுடன் புறப்பட்டார் அவள் தந்தை.

சாரதாவின் சேஷ்டைகள் ரொம்பவும் அளவு மீறி இருந்தன. யாரைக் கண்டாலும் "டேய், சுந்தரம்! வா, இங்கே! கழுத்தைக் குதறி விடுகிறேன்!'' என்று அலறினாள். யாரும் அவள் அருகே வரப் பயப்பட்டார்கள்.

மாலையில் டாக்டர் வந்தார். அவரைக் கண்டதும் இதே போலக் கூவினாள் சாரதா. டாக்டர் நடுங்கவேயில்லை. இதென்ன அவருக்குப் புதிதா? அவளை உற்று நோக்கினார். அப்புறம் ஏதோ ஆழ்ந்து சிந்தித்தார். சஸ்திர





"டாக்டர் ஸார்! இதுவரைக்கும் என் உடம்பில் போட்டுக் கொண்ட ஊசிகளுக்குக் கணக்கே கிடையாது. வாஸ்தவமாகத்தான் சொல்லுகிறேன்!"

"அப்படியானால் நான் இப்பொழுது போடப் போகும் ஊசியையாவது கவனமாகக் கணக்கில் வைத்துக் கொள்ளுங்கள்!"

சிகிச்சை செய்யலாமென்று நினைத்தாரோ, இல்லை, மனோ தத்துவ சிகிச்சை செய்யலாமென்று எண்ணினாரோ யார் கண்டார்கள்! பின் ஏதோ ஒரு முடிவுக்கு வந்தவராய் மலர்ந்த முகத்தோடு வெளியே நடந்தார்.

அஸ்தமிக்கும் சமயம். டாக்டர் தன் வழக்கமான உடையோடு வராமல், வீட்டில் இருக்கும்போது இருப்பது போல உடை அணிந்து வந்தார். கூட ஒரு கிழவரும் கிழவியும் வந்தார்கள். பைத்தியம் அவர்களைக் கண்டதும் தன் பல்லவியைப் பாடி ஓய்ந்தது. உடனே கிழவர் சொன்னார்: "ஏய் சுந்தரம், இதோ பாரு, இவள் உனக்கு வேணும் என்றால் அப்புறம் எங்களை மறந்துவிட வேண்டும். ஆமாம். விதியத்த இந்த நாய்கள் சகவாசம் நமக்கு எதற்கு? என்னடா தயங்கித் தயங்கி நின்று கொண்டிருக்கே. கழுத்தைப் பிடித்து வெளியே தள்ளுடா சனியனை."

டாக்டர் அவன் பிடரியில் கை வைத்துத் தள்ளினார். அவ்வளவுதான். பைத்தியம் அவரை ஆக்ரோஷத்தோடு திரும்பிப் பார்த்தது. கண்கள் அகல விரிந்தன. கண்ணைக் கோபம் வந்து விட்டது அதற்கு. கண்களினின்று கனல் பறப்பது போலிருந்தது. பற்கள் நற நறவென்றன. ஆனால் ஏனோ அடுத்த நிமிஷம் நிமிர்ந்திருந்த தலை சற்றுக் குனிந்தது. கண் இமைகள் பாதி மூடிக் கொண்டன. கலங்கிய கண்களினின்று பொல பொலவென்று கண்ணீர்ச் சொட்டுகள் உதிர்ந்தன. அப்படியே டாக்டரின் மார்பில் முகத்தைப் புதைத்தவாறு அவரை அணைத்துக் கொண்டு விம்ம ஆரம்பித்து விட்டது. அடுத்த கணம் அவர் கால்களைக் கட்டிக் கொண்டு பேச முடியாமல் விசித்து விசித்து அழுதாள் சாரதா.

டாக்டர் அந்தக் கிழவர், கிழவி வேஷதாரிகளுக்கு ஏதோ சமிக்ஞை காட்டினார். அவர்கள் வெளியே சென்று சாரதாவின் தந்தையையும் தாயையும் அங்கு அனுப்பினார்கள். மாப்பிள்ளையை அங்கு கண்டதும் அவர்களுக்கு ஒரே வியப்பாக இருந்தது.

சுந்தரம் இருவருக்கும் நமஸ்காரம் செய்து தன்னை மன்னிக்கும்படி உருக்கமாகக் கெஞ்சினான். தான் சென்னைக்கு மாற்றி வந்து நான்கு நாள்தான் ஆகிறது என்றும், தன் தவறைக் கூறி மன்னிப்புக் கேட்க நேரில் வரவேண்டுமென்று இருந்ததாலேயே கடிதம் போடவில்லையென்றும், இப்படி எதிர்பாராத சந்தர்ப்பம் ஏற்படும் என்று தான் நினைக்கவில்லை என்றும் அவன் சொன்னதும் சாரதாவின் பெற்றோர் வியப்பால் அசந்து போனார்கள். சாரதா கண்ணீரைத் துடைத்துக் கொண்டு பெருமிதத்தோடு பெற்றோரைப் பார்த்தாள். பெற்றோருக்கு ஆனந்தக் கண்ணீர் பெருக்கெடுத்தது!

அப்புறம் அங்கேயே சற்று நேரம் பேசிக் கொண்டிருந்தார்கள். தான் சமீப கால சிகிச்சைகளில் அதிக ஆர்வமுள்ளவன் என்றும் மனோதத்துவ சிகிச்சையில் தனக்கு நம்பிக்கையுண்டு என்றும், அதை முதல் தடவையாகப் பரீட்சித்து வெற்றி கண்டு விட்டதாயும் மாப்பிள்ளை சொன்னதைக் கேட்டு மாமனார் பொக்கை வாயை நெளியவிட்டுக்கொண்டு சிரித்தார். மாமியார் "ஆட்சேபனையென்ன? மாப்பிள்ளை என்ன சாமான்யமானவரா! கெட்டிக்காரர்தான்!" என்று பெருமை தொனிக்க மனதுக்குள் திருப்தியோடு முணுமுணுத்துக் கொண்டாள்.

* * *

ஒரு வருஷம் ஆயிற்று. தன் வீட்டுக்குப் பிரஸவத்துக்காகத் தன் கணவருடன் வந்து கொண்டிருந்த சாரதா ஊரண்டை வந்ததும் காவேரியையும், கோயிலையும் நந்தவனத்தையும் பார்த்தாள். என்ன விந்தை! அடிமேல் அடிவைத்து மென்மையாக நடக்கும் பருவ மங்கையைப் போலக் காவேரி கொங்கும் நுரையுமாக இரு கரையும் தொட்டுக் கொண்டு அமைதியாக ஓடிக்கொண்டிருந்தாள். கோயில் திருப்பணி செய்யப்பட்டு ஜாஜ்வல்யமாகக் காட்சியளித்தது. நந்தவனத்தில் பூத்துச் சொரிந்திருந்த நந்தியாவட்டை, ரோஜா, மல்லிகை, முல்லை, பன்னீர்ப்பூ, மருதோன்றி போன்ற மலர்களிலின்றும் மதுரமான மணம் எழும்பி அந்த வெளி முழுவதும் வியாபித்து, கோயில் நந்தவனம் ஒன்று விளம்பரம் செய்து கொண்டிருந்தது. இதையெல்லாம் பார்த்து அனுபவித்த சாரதாவின் உள்ளம் பூரிக்காமல் எப்படி இருக்கும்?

# இந்த உபகண்டத்தில் நாலுபேரில் ஒருவர் மலேரியாவினால் பிடிக்கப்படுகிறார்கள்

கொஞ்சம் யோசித்துப் பாருங்கள். எண்ணிக்கையில் சொல்லப் போனால் ஒவ்வொரு வருடமும் கிட்டத்தட்ட பத்துகோடி ஜனங்கள் மலேரியாவினால் வருந்துகிறார்கள்.

அலட்சியம் செய்யாதீர்கள்—மலேரியா ஜனங்களை பலஹீனப் படுத்தி, வீழ்த்தக்கூடிய ஓர் கொடிய நோய். அது ஆரோக்கியத்தையும், சக்தியையும் அழித்து, உற்சாகத்தையும் அறிவையும் மழுங்கச் செய்து விடுகிறது.

ஆதலால் தான் நீங்கள் இன்றே மலேரியாவிலிருந்து உங்களைக் காப்பாற்றிக் கொள்ள 'பாலுட்ரீன்' உட்கொள்ளும்படி நாங்கள் வற்புறுத்துகிறோம். 'பாலுட்ரீன்' உட்கொள்ளுவதற்கு அபாயமற்றது, சுலபமானது, மலிவானது, மலேரியாவைத் தடுக்கத் தகுதியானது. உங்களை காப்பாற்றிக் கொள்ளுவதற்கு சிறந்த வழி ஓரே அணா விலையுள்ள ஒரு 'பாலுட்ரீன்' மாத்திரையை பிரதிவாரமும் ஒரு முறை சாப்பிடுவதுதான். அளவுகள் கீழே கொடுக்கப்பட்டுள்ளன.

**அபாயத்தின் சின்னங்களைக் கவனியுங்கள்:**

முதலில் குளிரால் நடுக்கம் உண்டாகும். ஜுரம் ஆரம்பமாகும். இதனால் உடம்பு முழுவதும் வியர்க்கும். தேகம் முழுவதும் வலி உண்டாகும். இந்த அறிகுறிகளை ஒரு பொழுதும் அலட்சியம் செய்யாதீர்கள்—உடனேயே டாக்டரின் ஆலோசனையைக் கேளுங்கள். மலேரியா கண்டிருந்தால், 'பாலுட்ரீன்' எப்படி உங்களுடைய ஜுரத்தை சில நாட்களில் நீக்குகிறது என்பதையும் எதிர்காலத்தில் மலேரியா உங்களை அணுகாமல் எப்படி பாதுகாப்பை அளிக்கிறது என்பதையும் அவர் சொல்லுவார்.

நம்பிக்கைக்குகந்த 'பாலுட்ரீன்' மாத்திரைகள் சுத்தமான, தெளிவாகத் தெரியும் காகித உறைகளில் சுற்றப்பட்டு வருகின்றன. ஒரு மாத்திரை விலை ஓரே அணா தான்.



# பாலுட்ரீன்

**மலேரியாவை வீழ்த்துகிறது**

## அளவுமுறை







சிகிச்சைக்கு: வயதானவர்களுக்கும் 12 வயதுக்கு மேற்பட்டவர்களுக்கும் ஒரு மாத்திரை. 6லிருந்து 12 வயது வரையுள்ள குழந்தைகளுக்கு அரை மாத்திரை. 6 வயதிற்கு கீழ்ப்பட்ட குழந்தைகளுக்கு கால் மாத்திரை வீதம் தினந்தோறும் ஜுரம் குணமடையும் வரை கொடுக்கவும்.

பாதுகாப்பிற்கு: மேலே குறிக்கப்பட்ட அளவுகளை அனுசரிக்கவும். ஆனால் வாரம் ஒருமுறை அதே தினத்தில் சாப்பிட வேண்டியது.

எப்பொழுதும் 'பாலுட்ரீன்' சாப்பாட்டிற்குப் பிறகு அதிக அளவு தண்ணீருடனோ அல்லது பாலுடனோ உட்கொள்ள வேண்டும் என்பதை ஞாபகத்தில் வைத்திருங்கள்.

இம்பீரியல் கெமிக்கல் இண்டஸ்ட்ரீஸ் (இந்தியா) லிமிடெட்.

ICP 73

# ஆரோக்கிய ரகசியம்

**வி. என். குமாரசாமி**

## 45. பசி இல்லையே!

"எல்லாம் இந்தச் சாண் வயிற்றுக்கே இந்தப் பாடு. பசியில்லையானால், இவ்வளவு கஷ்டமேன்! இவ்வளவு துன்பமேன்! இது இல்லாவிடில் மனிதன் நிம்மதியாக வாழலாம்" என்று வேதாந்தம் பேசலாம். ஆனால் உண்மையில் பசியில்லாது போய்விட்டால், அப்பொழுது அந்த வேதாந்தம் பேசியவர்கள் சும்மா இருக்கிறார்களா! "ஐயோ பசி யில்லையே! மற்றவர்க ளெல்லாம் வயிறு நிறைய பஞ்சபட்ச பரமான்னங்களுடன் சாப்பிடுகிறார்களே! எனக்கு என்ன இருந்தும் யாது பயன்! ஒரு வாய் நொய்க் கஞ்சி கூடச் சாப்பிட்டால் ஜீரணமாக வில்லையே!" என்று துடிப்பார்கள்; பொறாமைப் படுவார்கள். பசியெடுக்க என்னென்ன மருந்துகளுண்டோ அவைகளை யெல்லாம் உபயோகிப்பார்கள். எந்த டாக்டர் பெரியவர் என்று தேடிச் செல்லுவார்கள். மருந்தின் வேகத்தால் சிலருக்குச் சிறிது பசியும் எடுக்கும்; சிறிது ஜீரணமும் ஆகும். அதுவும் அம்மருந்து சில நாட்கள்தான் வேலை செய்யும். பிறகு அதைவிட வேகமான மருந்தைச் சாப்பிட வேண்டும். இப்படி மருந்தின் துணைகொண்டே சில நாட்கள் தள்ளுவார்கள். பின் இதுவும் வேலை செய்ய முடியாமல் பழைய குருடி போல மறுபடியும் பசி யில்லையே! என்ற ஏக்கம்தான்.

பசியில்லை, ஜீரணமில்லை என்று சொல்லுபவர்களின் வாழ்க்கை வரலாற்றின் ஏட்டைச் சிறிது பின் தள்ளிப் பார்த்தால் அப்பொழுது தெரியும், அவர்கள் ஏன் பசியில்லை, ஜீரணமில்லை என்று கஷ்டப்படுகிறார்கள் என்பதன் காரணம். சிலர் காப்பியைக் கணக்கு வழக்கின்றிக் குடித்திருப்பார்கள். சிலர் கண்டதைக் கண்ட நேரத்தில் சாப்பிட்டிருப்பார்கள். சிலர் காரம், பெருங்காயம் பச்சை மிளகாயாகவே திட்டி யிருப்பார்கள். சிலர் மணம் இருக்கிறதென்று நெய்யாலேயே செய்த பலகாரங்கள் இனிப்புப் பண்டங்களாகவே தின்றிருப்பார்கள். இவர்கள் நாக்கை அடக்குவதிலேயே இவ்வளவு சமர்த்தர்கள் என்றால் மற்ற எதை அடக்க இவர்களுக்குச் சாத்தியமாகப் போகிறது! அவைகளிலும் அப்படியே! கட்டுக் கடங்காமல் மீறி யிருப்பார்கள். எனவே நூறு வயது வரை உயிருடன் இருந்து நன்றுடன் வாழ வேண்டிய உறுப்புக்களை முப்பது வயதிற்குள் நாற்பது வயதிற்குள் சிதைத்து ஒடுக்கிச் சின்னா பின்னமாக்கி ஒன்றுக்கும் உதவாமல் அதை நாசமாக்கி விடுகின்றனர்.

சிலர் நல்ல இரத்தமுள்ள வாலிப வயதிலே இந்தக் கதிக்கு ஆளாகி விடுகின்றனர். இவர்களைப் பார்த்துப் பரிதாபப்படுவதா! கோபப்படுவதா! என்ன செய்வது! உணவிலும் ஒழுக்கம் வேண்டும். பாதி வயிறு உணவு; கால் வயிறு ஜலம், கால் வயிறு காலியாக வைத்திருக்கவேண்டுமென்பது நியதி. அந்தப் பாதி வயிறு உணவிலும், எது எது சாப்பிடலாம் எது எது கூடாது என்ற நியமமும் உண்டு. இன்று அவையெல்லாம் ஏட்டளவில்தான். செய்கையில் காண்பிப்பவர்கள் ஒரு சில அறிவாளிகளே! சாப்பிட உட்கார்ந்தால் இவ்வளவு சாதம்தான் சாப்பிட வேண்டும், இவ்வளவு காய்கறிதான் உண்ண வேண்டுமென்ற திட்டமில்லை. வயிறு கொள்ளு மட்டும் திணிக்கின்றனர். சில சமயம் வாய்க்கு ருசியா யிருந்துவிட்டால் அதற்கு மேலும் கஷ்டப் பட்டுச் சாப்பிடுகின்றனர். அந்த வயிறும் உணவுப் பையும் தம் சக்தி கொண்ட மட்டும் வேலை செய்கிறது. பிறகு வேலை நிறுத்தம் செய்து விடுகிறது. பிறகு மருந்தென்னும் சாட்டையினால் அடித்து அடித்து வேலை வாங்குகின்றனர். பிறகு சில நாள் அம்மாதிரி வேலை செய்கிறது. அதற்குப் பிறகு அம்மருந்தின் வேகத்தையும் சட்டை செய்யாமல் உறக்கம் கொள்ளுகிறது.

இரைப் பையும் ஒருவித கோளத்தைச் சேர்ந்ததே. இரைப் பையில் ஆகாரம் விழுந்ததும் அதை ஜீரணமாக்க "காஸ்டிக் ரசம்" யெனும் ஒருவித சத்து சுரந்து வந்து ஆகாரத்துடன் கலக்கிறது. அது எதுவரை சரிவரக் கலக்கிறதோ அதுவரை ஜீரணமும் சரிவர ஆகும். காஸ்டிக் ரசம் சரிவரச் சுரக்கவில்லையானால் ஜீரணமும் ஆகாது; பசியும் எடுக்காது. அதிக ஆகாரம் பல தடவை ஆகாரப் பையில் தள்ளத் தள்ள ரசங்கள் வருவது குறைந்து பிறகு சக்தி இழந்து ரசமே வராத படிக்கு நின்று விடுகிறது. இவ்வாறு செயலற்றுப் போன உணவுப் பைக்கு இயற்கைச் சிகிச்சை மூலமாய் ஓய்வு தந்து, சக்தி, உறுதி, அதற்கு உயிர் அளிக்க வேண்டுமே அல்லாது மருந்துகளைக் கொண்டு அதை மாற்ற எண்ணுவது எரிகிற தீயில் எண்ணெய் வார்த்ததற்குச் சமானமாகும்.

இந்த இயற்கைச் சிகிச்சை யோக ஆசனங்களில் தான் அமைந்திருக்கிறது. அதிலும் பாத ஹஸ்தாசனம் தலை சிறந்து விளங்குகிறது. ஜாடராக்னியைக் கிளப்புவதில் மிகச் சிறந்தது. பாதஹஸ்தாசனம் செய்பவர்களுக்கு நல்ல பசி எப்பொழுதும் எடுக்கும். ஆனால் பசி எடுத்ததும் பழையபடி சாக்கில் பஞ்சு திணிப்பது போல் வயிற்றில் ஆகாரத்தைத் திணிக்க ஆரம்பித்துவிடக் கூடாது. அளவுடன் பத்தியமாய்ச் சாப்பிட வேண்டும். ஜீரண சக்தியும் நன்கு ஏற்படும்.

மற்றும் வயிற்றிலுள்ள கல்லீரல், மண்ணீரல், பித்தப்பை பாங்கிரியாஸ் முதலியவைகளும் கோளங்களைச் சார்ந்தவையே. ஒவ்வொன்றும் ஒவ்வொரு விதமான பணியாற்றுகிறது. ஒவ்வொன்றும் ஒவ்வொரு விதமான ரசாயனச் சாற்றைக் கக்கி உணவு ஜீரணமாக ஒத்துழைக்கிறது. உடல் ஆரோக்கிய நிலையில் இருக்க உதவுகிறது. பசிக்கவில்லை, சரியான ஜீரணமில்லை யென்றால் வெறும் ஆகாரப் பை மட்டும் கெடுவதல்ல. வெறும் உணவுப்பை மட்டும் உறக்கம் கொண்டதென்று அர்த்தமல்ல. மற்றும் அதனைச் சார்ந்த பித்தப் பை, பாங்கிரியாஸ், மண்ணீரல் கல்லீரல் முதலிய பாகங்கள் ஒத்துழைக்கா விட்டாலும் பசி ஜீரணம் சரிவர நடக்காது.

உணவுப் பையில் உணவு சென்றதும் அங்கு காஸ்டிக் ரசத்தால் கலக்கப்பட்டுக் குழம்பாகிச் சிறு குடலுக்குப் போகிறது. அப்படிச் சென்று கலக்கும் இடத்தில், பித்தப் பையில் தயாராயிருக்கும் பித்த நீர் உணவில் வந்து கலந்து மேலும் ஜீரணமாக உதவுகின்றது. அதன் பக்கத்தில் பாங்கிரியாஸ் எனும் கோளம் இன்ஸுலின

அனுப்பி உணவிலுள்ள சர்க்கரை ஜீரணமாக்க உதவுகின்றது. இதில் பித்த நீரோ, இன்ஸுலின் ரஸமோ சரிவரக் கலக்க முடியாமல் போனாலும் ஜீரணம் சரிவர நடவாது. ஜீரணம் சரிவர நடக்கவில்லையென்றால் பின் பசிப்பது ஏது! இம்மாதிரி பித்த நீர் தடைப்படுவதற்குப் பல காரணங்களுண்டு. இதை முன் அத்தியாயங்களிலேயே விவரிக்கப்பட்டிருக்கின்றன. பித்தப்பை அழண்டு போதல் கல் ஏற்பட்டு தடை ஏற்படல் இவைகளால் பித்த நீர் சரிவர வராமல் போகலாம். ஆனால் இப்பித்த நீரை உற்பத்தி செய்யும் மண்ணீரலே கெட்டால் இப்பித்த நீர் உற்பத்திக்குத் தடை ஏற்படும். பாங்கிரியாஸும் இன்ஸுலினை அனுப்பத் தடைப்படும். எல்லாம் ஒன்றை ஒன்று சார்ந்து வேலை செய்கின்றன.

இன்ஸுலின் சரிவரச் சுரந்து சர்க்கரையை ஜீரணிக்கவில்லையானால் அது ரத்தத்தில் கலந்து விடுகிறது. அதற்குச் சிறு நீர் வியாதி அதாவது 'டயாபட்டீஸ்' என்கிறோம். இவ்வியாதியைப் பற்றியும் முன் அத்தியாயத்தில் விரிவாய்ச் சொல்லப்பட்டிருக்கிறது. இந்த நீர் வியாதிக்கும் பித்த வியாதிக்கும் பாதஹஸ்தாசனம் நிகரற்றது.

மலேரியா, மலேரியாக் கட்டி முதலியவைகளைப் பற்றியும் முன் அத்தியாயங்களில் வந்திருக்கிறது. மலேரியாக் கட்டி என்று தனியாக ஒரு கட்டி உண்டாவதல்ல. கல்லீரலே வீங்கிவிடுவதாகும். கல்லீரல் வேலை மிகவும் முக்கியமானது. இரத்தத்திலுள்ள சிவப்பு அணுக்களை உற்பத்தி செய்யும் வேலை அதனுடையதே. இது தைராய்ட் கோளத்தின் துணை கொண்டு இவ்வேலை நடத்துகிறது. தைராய்ட் கோளத்துக்கும் இதற்கும் மிக மிக நெருங்கிய சம்பந்தமுண்டு. தைராய்ட் கோளம் இதன் துணைகொண்டுதான் ரத்தத்திலுள்ள சிவப்பணுக்களைப் பலம் பொருந்தியதாய் அமைக்கின்றது. இதனை ஒரு நகரத்தின் கோட்டைக்குச் சமமாகச் சொல்லலாம். சிப்பாய்களைத் தயார் செய்து சகல முஸ்தீபுகளுடன் சண்டைக்கு அனுப்புவதைப் போல சிவப்பு ரத்த அணுக்களைத் தயார் செய்து அனுப்புகின்றது. அவை நோய்க் கிருமிகளுடன் போரிடத் தயாராகிச் செல்லுகின்றது. அப்படிச் செல்லும் ரத்த அணுவின் ஆயுள் எண்பது நாள் ஆகும். சில பூரண ஆயுளுடன் இருந்து மடியும். சில தொத்துக் கிருமிகளுடன் போரிட்டு அற்பாயுசில் மடியும். சில போரிட்டு ஜெயித்து முக்கால் ஆயுளிலும் மடியும். அப்படி மடியும் கிருமிகளும் மற்றும் இதனுடன் போரிட்டு மடியும் இதர கிருமிகளும் மறுபடியும் இந்தக் கல்லீரலிலேயே வந்து அடையும். இந்தக் கல்லீரலானது மண்ணீரல் துணையைக் கொண்டு அதை அப்புறப்படுத்தும். இவை ஓய்வு ஒழிவின்றி நம் உடம்பில் நடந்துகொண்டேயிருக்கின்ற ஒரு சம்பவம்.

ஆனால் மலேரியா ஜுரங்களினால் அவஸ்தைப்படும்போது அவ்விதக் கிருமிகள் ஏராளமாய்க் கல்லீரலை வந்து அடைகின்றன. அடிக்கடி ஜுரம் வந்து அந்தக் கிருமிகளைக் கொல்ல மருந்து சாப்பிட்டுச் சாப்பிட்டு இறந்த கிருமிகளின் எண்ணிக்கை கட்டுக் கடங்காததால் கல்லீரலில் வந்தடையும்போது அது வேலைசெய்யத் திணறுகின்றது. எந்த வேலை என்றுதான் அது செய்யும். ஏற்கெனவே ரத்தம் குறைந்துவிட்டு ரத்த அணுக்களுக்குப் பதில் வேறு ரத்த அணுக்களை உண்டாக்க வேண்டும். தன்மேல் வந்துவிழும் அணுக்களின் பிணக் குவியல்களை அப்புறப்படுத்த வேண்டும். அதுவும் முடிந்த அளவு செய்து பிறகு அது பலவீனப்பட்டு சத்தியாக்கிரகம் செய்கின்றது. உடனே கல்லீரல் பெருத்து வயிறு கனத்துப் பசித் தீவனம் சரிவர எடுக்காமல் உடம்பில் போதிய ரத்தமில்லாமல் பலவீனம் அதிகமாய் விடுகின்றது.

இதைக் கரைக்க எத்தனையோ மருந்துகள் ஊசிகள் எல்லாம் சித்திரவதைதான். இம்மாதிரி வியாதிகளும் வரக்கூடாது. இம்மாதிரி சித்திரவதையும் படக்கூடாது. போதும் போதும் என்றாகிவிடும். இம்மாதிரி சித்திர வதைகள் ஏதுமில்லாமல் உபாதைகள் ஏதுமில்லாமல் சுகப்பட வழி யிருக்கிறது. அதுதான் யோக வழி. பாதஹஸ்தாசனம் அதற்கு ஏற்ற மருந்து. அதனுடன் கூடச் சர்வாங்காசனம் செய்தால், சூரியனைக் கண்டால் எப்படி பனி மறைந்து விடுகின்றதோ அப்படி இந்த யோகாசனங்களைச் செய்ததும் பழைய நிலைமைக்குச் சிறிது' சிறிதாக மாறி கல்லீரல் வேலை செய்யச் சக்தி ஏற்படுகின்றது. தைராய்டின் ரசம் கல்லீரலைத் தூண்டி அதிலுள்ள கிருமிப் பிணக் குவியல்களை அப்புறப்படுத்த உதவுகின்றது. மூன்றே மாதங்களில் பழையபடி சரீரம் சரிப்பட்டு விடுகின்றது. இழந்த ரத்தம் மீண்டும் ஏற்படுகிறது.

கல்லீரல் சிலவற்றிற்கு மண்ணீரல் உதவியுடன் வேலை செய்கிறது. ரத்த சோகைக்கு இவை இரண்டுமே காரணங்களாகும். ஈரல் சத்து பலப்பல சாப்பிட்டுக் காசைச் செலவு செய்வதற்குப் பதில், நிறைய காய்கறி, கீரை, பால், பழங்கள், தானியங்களைச் சாப்பிட்டுச் சர்வாங்காசனம், பாதஹஸ்தாசனம் செய்து வந்தால் எவ்விதமான ரத்த சோகை யிருந்தாலும் மறைந்து நல்ல ரத்தம் நிரம்பி, சர்மங்கள் மேனி அடைந்து ஆரோக்கிய தேஜஸுடன் வாழலாம். (தொடரும்)

# புது சைக்கிள்!

**ப**ல வருடங்களாக ஓட்டை சைக்கிள் ஒன்றை வைத்துக் கொண்டு அவஸ்தைப் பட்டு வந்த நடராஜனுக்குக் கடைசியில் விடுதலை கிடைத்து விட்டது. அதை எப்படியோ விற்றுத் தொலைத்து விட்டு, ஆபீஸிலிருந்து கிடைத்த அட்வான்ஸ் பணத்தையும் போட்டு ஒரு புது சைக்கிள் வாங்கிவிட்டான்.

மனைவியிடம், "பார்வதி! எப்படி யிருக்கிறது சைக்கிள்?" என்று அவன் கேட்ட போது அவள் தன் கழுத்தைத் தடவிக் காண்பித்தாள். அவள் சொல்லாமற் சொன்ன அந்த பதிலைப் புரிந்துகொண்ட நடராஜன், "அடுத்த வருஷம் கட்டாயம் பண்ணிப் போட்டு விடுகிறேன் பார்வதி! தங்கம் விலை இன்னும் இறங்கப் போகிறதாம்" என்றான். அவள் உதட்டைப் பிதுக்கிவிட்டு அவ்விடத்தை விட்டு அகன்றாள்.

அவன் மனைவி, அவன் சைக்கிள் வாங்கியதைப் பற்றி மகிழ்ச்சி காட்டாவிட்டாலும் அவன் நண்பர்கள் எல்லோரும் அவனை மெச்சிக் கொண்டார்கள். அவனுடைய மேதையைப் பலவாறு புகழ்ந்து பாராட்டினார்கள்.

# கோலினோஸ்

# இயற்கையின் அற்புதப் பச்சை க்ளோரோபில் சேர்ந்தது

## ...உங்கள் பல் சுத்திகரிப்பில் இதுவரை ஏற்படாத மாபெரும் அபிவிருத்தி!

**செடிகொடிகளை பசுமையுடன் வைத்திருக்கும் பொருளாகிய இயற்கையின் சிருஷ்டி க்ளோரோபில் உதவியால் நாள் முழுதும் வாய் துர்நாற்றத்தை அகற்றுங்கள்....பல் சிதைவும் சாதாரண ஈறுக்கோளாறுகளும் ஏற்படாமல் தடுங்கள்!**

உங்கள் பல் பராமரிப்புக்கு இதுவரை இல்லாத முறையில் மிகப் பயன்படக்கூடிய மார்க்கம் இதுவே, சந்தேகமில்லை. க்ளோரோபில் சேர்ந்த அற்புதமான கோலினாஸ் பல் சிதைவையும் நோய்க் கிருமிகளையும் கேடியாகத் தாக்குவது மட்டுமின்றி, வாய் துர்நாற்றத்தையும் நாள் முழுவதிலும் ஒழித்துவிடுகிறது. இதற்குக் காரணம் இந்தப் பச்சை க்ளோரோபில் தான் — தாவரங்களை பசுமையுடன் வைத்திருக்க இயற்கையால் சிருஷ்டிக்கப்பட்ட அற்புத ரசாயனப் பொருள்!

க்ளோரோபில் சேர்ந்த கோலினாஸ் விசேஷ பலனளிப்பது தவிர, சிக்கனமானதுங்கூட—ஈரமில்லாத பிரஷ் மீது அரை அங்குலமே போதுமானது. பச்சை அட்டைப் பெட்டியில் எல்லா நல்ல ஸ்டோர்களிலும் கிடைக்கும். இன்றே வாங்கி, தந்த விஞ்ஞானத்தில் இதுவரை இல்லாத இம்மேலான அபிவிருத்தியின் பலனை அடையுங்கள்!

புதிய பச்சை அட்டைப் பெட்டியை கவனியுங்கள்
ஸ்டாண்டர்ட் கோலினாஸ் (மஞ்சள் லேபில்) கூட கிடைக்கும்

**2000 அமெரிக்க பல் நோயாளிகள் க்ளோரோபிலின் குணநிச்சயங்களை நிரூபிக்கின்றனர்**

நான்கு வருட ஆராய்ச்சி மற்றும் சுமார் 2000 அமெரிக்க பல் நோயாளிகளைக்கொண்டு நடத்தப்பட்ட மிக விரிவான சோதனைகள்....இவைகளின் பலனாக நிரூபணமானது என்னவெனில், க்ளோரோபில்லுடன் கூடிய டெண்டல் க்ரீம்:—

- வழக்கமான சகலவகை ஈறுக் கோளாறுகளையும் நிறுத்துகிறது.
- நாள் பூராவும் வாயில் துர்நாற்றம் ஏற்படாமல் தடுக்கிறது.
- பல் சிதைவுக்குக் காரணமான கிருமிகளை ஒழித்துக்கட்டுகிறது.

உங்கள் பல் டாக்டர் இச்சோதனைகளைப்பற்றி அறிவார்....அவற்றின் பலன்களையும் ஊர்ஜிதம் செய்வார்.







'கோலினோஸ்' புன்னகையில் ஆரோக்கியம் ததும்புகிறது!

இந்தியாவில் தயாரிப்பவர்கள்:
ஜியோஃப்ரே மானர்ஸ் & கோ., லிட்., பம்பாய் 1. கிளைகள்: கல்கத்தா — மதராஸ் — டில்லி

"அந்தக் கடையில் இந்தமாதிரி சைக்கிள் ஒன்றுதானிருந்தது! யாரோ பணக்கார வீட்டுப் பிள்ளை வந்து பார்த்து வைக்கச் சொல்லிப் போயிருப்பதாகவும் கொடுக்கவே முடியாதென்றும் சொன்னான். எனக்கு முதலிலேயே கண் இந்த சைக்கிள்மேல் விழுந்து விட்டது. நானும் விடாப் பிடியாய் அவனைப் பிடித்துக் கொண்டேன். இந்தமாதிரி சைக்கிள் இப்போது எங்கே வருகிறது?" என்று ஒரு பிரசங்கமே செய்தான் நடராஜன்.

அவனால் காரியம் ஆகவேண்டியிருந்த சில நண்பர்கள், "நடராஜா! உனக்குச் இதை யெல்லாம் சொல்லிக் கொடுக்க வேண்டுமா?" என்று புகழ்ந்தனர்.

அவன் சைக்கிளைப் புகழ்வதற்கு இன்னுமொரு பிரகிருதியும் வந்து சேர்ந்தான். அவன்தான் கல்லூரியில் படித்துக் கொண்டிருந்த அவன் மைத்துனன் சுந்தரம்.

வந்த அன்றைக்கே, "பலே அத்திம்பேர்! கடைசியில் புது சைக்கிள் வாங்கி விட்டீர்கள் போலிருக்கிறதே! ரொம்ப நல்லதாய்ப் போச்சு! போனதரம் விடுமுறைக்கு வந்திருந்தபோது உங்கள் ஓட்டை சைக்கிளில் ஏறிப்போய் விழுந்து பட்ட காயம் ஆற ஆறுமாதம் பிடித்தது! இந்தத் தடவை அந்தப் பயம் இல்லை" என்று அவன் சொன்னபோது ஏனோ நடராஜன் வயிற்றில் புளியைக் கரைத்தது.

மைத்துனன் விடுமுறையில் வந்த மறுநாளே காரியாலயத்துக்கு லீவு போட வேண்டிய நிர்ப்பந்தம் ஏற்பட்டு விட்டது.

"என்ன அத்திம்பேர்! இன்றைக்கு ஆபீஸ் லீவு போலிருக்கிறதே! என் நண்பன் ஒருவனைப் பார்க்க வேண்டும். போய்ப் பார்த்து வரட்டுமா?" என்று கேட்டான் சுந்தரம்.

"பேஷாய்ப் போய் வா" என்றான் நடராஜன்.

"உங்கள் சைக்கிளை எடுத்துக் கொண்டு போகிறேன். மத்தியானத்துக்குள் திரும்பி விடுவேன்" என்று அவன் சொல்லி முடிப்பதற்குள், "அது...அது வந்து...நான் வந்து... முக்கியமாக ஒரு இடத்துக்குப் போக வேண்டும்" என்று குறுக்கிட்டான் நடராஜன்.

"ஆமாம்; ஜுரம் என்று லீவ் போட்டிருப்பவருக்கு முக்கியமாக என்ன வேலை வந்து விட்டதாம்? அவனும்தான் ஆசைப்பட்டுக் கேட்கிறான்! சைக்கிளை எடுத்துக் கொண்டு போய்த்தான் வரட்டுமே! கடித்தா தின்று விடுவான்? அவனுக்கு மோட்டார்கூட விடத் தெரியும்" என்றாள் அவன் மனைவி பார்வதி.

சுந்தரம் மேற்கொண்டு எந்த விதமான ஆட்சேபணையும் கூறவே இல்லை.

மத்தியானம் திரும்பியதும், "அத்திம்பேர்! உங்களை என்னவோ வென்று நினைத்தேன்! சைக்கிள் பெஸ்ட் ஸெலக்ஷன்!" என்று அவன் மெச்சிக் கொண்ட போது நடராஜனுக்கு உச்சி குளிர்ந்து அவன் மேல் ஏற்பட்ட கோபமெல்லாம் கரைந்து விட்டது!

மறுநாட் காலை நடராஜன் சைக்கிளில் ஏறிக் கொஞ்ச தூரம் போவதற்குள், பின் பக்கம் 'கடக், கடக்' என்ற சத்தம் கேட்டது. அது தன் சைக்கிள் ஏற்படுத்தும் நூதன சத்தம்தான் என்று தெரிந்ததும், அவன் அலறிப் புடைத்துக்கொண்டு இறங்கிப் பின் சக்கரத்தைச் சுற்றிப் பார்த்தான். அது கொஞ்சம் வளைந்து போயிருக்கிறது என்பது அப்போதுதான் அவனுக்குத் தெரிந்தது.

முதல் நாள் சைக்கிளைத் தன் தம்பியிடம் கொடுக்கச் சொன்ன மனைவியைச் சபித்தபடிப் பக்கத்திலிருந்த சைக்கிள் ஷாப்பிற்கு அதைத் தள்ளிக் கொண்டு போய் ரிப்பேர் செய்யக் கொடுத்து விட்டு ஆபீஸிற்கு நடந்து போனான் நடராஜன்.

அன்று மூன்று ரூபாய் பழுத்தது!

அவன் அதைப் பார்வதியிடம் சொன்னபோது, "ஆமாம்; நீங்களாகவே அதை எங்கேயாவது இடித்திருப்பீர்கள்! என் தம்பிக்கு மோட்டார்கூட விடத் தெரியும். இது என்ன பிரமாதம்!" என்றாள் பார்வதி.

புது சைக்கிளை இன்னுமோர் முறை எடுத்துப் போய் இன்னும் சில நண்பர்களைப் பார்த்து வந்தான் சுந்தரம்.

நடராஜன் சைக்கிள் கடைக்காரனுக்கு மேலும் நான்கு ரூபாய் கட்டணம் செலுத்தினான். கூடவே, சுந்தரத்துக்கும், பார்வதிக்கும், அவர்களைப் படைத்த கடவுளுக்குமாகச் சேர்த்துச் சில அர்ச்சனைகளைப் பண்ணினான்.

கடைசியில் விடுமுறை முடிந்து திரும்புவதற்கு முதல் நாள் உடம்பில் பல சிராய்ப்புகளுடனும், மண் படிந்து கிழிந்த சட்டையுடனும் திரும்பினான் சுந்தரம்.

"சைக்கிள் எங்கே?" என்றான்.

"ஆமாம்; சைக்கிளை விழுங்கி விட்டான்! குழந்தை எங்கேயோ விழுந்து அடிபட்டுக் கொண்டு வந்திருக்கிறான்! அதைப் பற்றிக் கேட்கக் காணோம்!" என்று நடராஜனை மடக்கி விட்டு, "ஏண்டா சுந்து என்னடா இது கோலம்!" என்றாள் பார்வதி.

"எல்லாம் அத்திம்பேர் சைக்கிளால் வந்த வினைதான். அந்த ஓட்டை சைக்கிளாவது தேவலை. பிரேக் பிடித்தால் நிற்கும். இதில் எல்லாம் லூஸ்! இவருக்கென்று சைக்கிள் கிடைத்ததே! அதில் பிரேக் பிடிக்காது என்று தெரிந்திருந்தால் அப்படிக் கொண்டு போய்க் கட்டை வண்டியில் மோதியிருப்பேனா?" என்றான் சுந்தரம்.

"சைக்கிள் எங்கே?" என்று கேட்டான் நடராஜன் வெறி பிடித்தவன்போல்.

"அதன் முன் சக்கரம், ஹாண்டில் பார் எல்லாம் கொஞ்சம் வளைந்து போயிருக்கிறது! வழக்கமாய் நீங்கள் கொடுக்கும் கடையில்தான் ரிப்பேர் செய்யக் கொடுத்து வந்தேன்" என்றான் சுந்தரம்.

"நான் அப்போதே சொன்னேன். எனக்குச் சங்கிலி பண்ணிப் போட்டிருந்தால்....!" என்று முணுமுணுத்தாள் பார்வதி. டி.ஜி.எஸ்.

Edited, Printed and Published by R. Krishnamurthy at the "Kalki" Press 116-119, Sladens Garden, Poonamallee High Road, Kilpauk, Madras

எப்பொழுதும், எங்கும்



கைகளில் அழுக்கிலிருக்கும் கிருமிகள் பற்றிக்கொள்ளலாம்



அவைகளை உங்கள் உடலிலும் பரவச்செய்யலாம்

இந்த ஆபத்தை தவிர்க்க—

கைகளையும் உடலையும் தவறாமல்

# லைப்பாய் சோப்பினால்

கழுவுங்கள்.

அது அழுக்கிலிருக்கும் கிருமிகளிலிருந்து
உங்களை காப்பாற்றுகிறது



REGD. No. M. 4392

*Registered as a newspaper in Ceylon*

அவன் தனது
உறுதியுள்ள வெண்
மையான பற்களைப்பற்றி
ஒருகாலத்தில்
பெருமைப்பட்டுக்
கொண்டிருந்தான். . .

. . . ஆனால், இப்பொழுது

**சிரிக்கவே அச்சப்படுகிறான்!**

ஈறுகளை அசட்டைசெய்தால் மிக உறுதியான பற்களும் அழிந்துவிடுகின்றன. இந்த அபாயத்திலிருந்து உங்களைக் காப்பாற்றிக் கொள்ள ஒரு வழி எஸ். ஆர். டூத்பேஸ்ட் உபயோகிப்பதுதான். உலகெங்கும் பல் வைத்தியர்கள் ஈறுவியாதிகளை சிகிச்சை செய்ய உபயோகிக்கும் ஸோடியம் ரிஸினோலியேட்* இந்த எஸ். ஆர். டூத்பேஸ்ட் ஒன்றில்தான் இருக்கிறது. தினமும் தவறாமல் எஸ். ஆர். டூத்பேஸ்ட் உபயோகிப்பதனால் இரட்டிப்பு பாதுகாப்பு கிடைக்கிறது —உறுதியுள்ள ஆரோக்கியமான ஈறுகளில் பற்களை ஒழுங்காகவும், வெண்மையாகவும் இருக்கச் செய்கிறது.

எஸ். ஆர். டூத்பேஸ்ட் உபயோகித்து உங்கள்
சிரிப்பை கவர்ச்சியுடையதாகச்செய்யுங்கள்




பெரிய சைஸிலும் கிடைக்கிறது

*ஸோடியம் ரிஸினோலியேட் பாக்டீரியாவை எதிர்ப்பதோடு பாக்டீரியாவினால் ஏற்படும் விஷத்தீண்டலைத் தடுக்கும் சக்தியையும் அளிக்கிறது.

டி. அண்டு டபிள்யூ. கிப்ஸ் லிட். லண்டனுக்காக இந்தியாவில் தயாரித்தது    GSR. 95-50 TM